மார்க்ஸ்
எங்கெல்ஸ்
லெனின்
நூல்கள்

# லெனின்

## இயக்கவியல் பிரச்சினையைப் பற்றி



உலகத் தொழிலாளர்களே, ஒன்றுசேருங்கள்!

# லெனின்

# இயக்கவியல் பிரச்சினையைப் பற்றி







முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ





விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை




В. И. Ленин
К ВОПРОСУ О ДИАЛЕКТИКЕ
*на тамильском языке*

V. I. Lenin
ON THE QUESTION OF DIALECTICS
*in Tamil*

**வாசகர்களுக்கு**

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும் முன்னேற்றப் பதிப்பகம் மகிழ்ச்சியோடு காத்திருக்கிறது.

தங்கள் கடிதங்களை "Progress Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR" என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.


சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

Л $\frac{0101020000-682}{014(01)-87}$ 348—88

ISBN 5-01-000566-1

## பொருளடக்கம்

## கார்ல் மார்க்ஸ்

### (மார்க்சியத்தைப் பற்றிய விரிவுரையுடன் அமைந்த வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம்)

### இயக்கவியல்[1]

வளர்ச்சியைப் பற்றிய மிகவும் அகல்விரிவான, ஆழமான மற்றும் உள்ளடக்கத்தில் அதிகச் செழுமையான போதனை என்ற முறையில் ஹெகலிய இயக்கவியல் மூலச் சிறப்பான ஜெர்மானியத் தத்துவஞானத்தின் மாபெரும் சாதனை என்று மார்க்சும் எங்கெல்சும் கருதினார்கள். வளர்ச்சியின், பரிணாமத்தின் கோட்பாட்டைப் பற்றி மற்றெந்த வகுத்தளிப்பும் ஒருதலையானது, உள்ளடக்கத்தில் பலவீனமானது, அது இயற்கையிலும் சமூகத்திலும் வளர்ச்சியின் மெய்யான நிகழ்முறையை (அது அநேகமாக பாய்ச்சல்கள் மூலமாக, பேரிடர்கள் மற்றும் புரட்சிகளின் வழியாக நடைபெறுகிறது) திரிப்பதாகவும் சிதைப்பதாகவும் மட்டுமே இருக்கும் என்று அவர்கள் கருதினார்கள். ''உணர்வு பூர்வமான இயக்கவியலை'' (ஹெகலியவாதம் உள்பட கருத்துமுதல்வாதத்தினால் அழிக்கப்படுவதிலிருந்து) ''காப்பாற்றி இயற்கையைப் பற்றிய பொருள்முதல்வாதக் கருதுகோளில் அதைக் கடைப்பிடித்தது அநேகமாக நானும் மார்க்சும் மட்டுமே.... இயக்கவியலுக்கு நிரூபணம் இயற்கையே; நவீன இயற்கை விஞ்ஞானம் இந்தப் பரிசோதனைக்கு மிகவும் வளமான'' (ரேடியம், எலெக்ட்ரான்கள், மூலகங்களின் உருமாற்றம், இதரவை கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பாக இது எழுதப்பட்டது!), ''நாள்தோறும் கூடுதலான பொருட்களைக் கொடுத்திருக்கிறது, கடைசிப் பகுப்பாய்வில் இயற்கையின் செயல்முறை இயக்கவியல் ரீதியானது, அது இயக்க மறுப்பியல் ரீதியானது அல்ல என்று நிரூபித்திருக்கிறது என்பதைக் குறிப்பிடுவது அவசியமே.''[2]

''உலகம் என்பது முன்னரே தயாரிக்கப்பட்ட, முழுமையான பொருட்களின் தொகுதி என்றவாறில்லாமல், நிகழ்வுப் போக்குகளின் தொகுதி, இதில், நம்முடைய மூளைகளில் அவற்றின் பிம்பங்களுக்கு, கருத்தமைப்பு

களுக்கு சிறிதும் குறையாத அளவில் வெளித்தோற்றத்தில் நிலையாகத் தோன்றுகின்ற பொருட்கள் தோற்றம், மறைதல் என்னும் இடையீடில்லாத மாற்றத்துக்கு உள்ளாகின்றன என்னும் மாபெரும் அடிப்படையான சிந்தனை... இந்த மாபெரும் அடிப்படையான சிந்தனை, சிறப்பாக ஹெகல் காலத்திலிருந்து பொது உணர்வில் முற்றிலும் ஊடுருவியிருந்தபடியால் அதன் பொதுத் தன்மையில் தற்பொழுது அதை ஒருவரும் மறுப்பதில்லை. ஆனால் இந்த அடிப்படையான சிந்தனையைச் சொல்லளவில் அங்கீகரிப்பதும் அதை ஆராய்ச்சியின் ஒவ்வொரு துறைக்கும் எதார்த்தத்தில் நுணுக்கமாகக் கடைப்பிடிப்பதும் இரண்டு வெவ்வேறு விஷயங்களாகும்'' என்று எங்கெல்ஸ் எழுதுகிறார். இயக்கவியல் தத்துவஞானத்துக்கு முடிவானதாக, தனிமுதலானதாக, புனிதமானதாக ஒன்றும் இல்லை. அது ஒவ்வொரு பொருளின் மற்றும் ஒவ்வொன்றுக்குள்ளேயும் உள்ள மாறும் தன்மையை வெளிப்படுத்துகிறது; தோற்றம், மறைதல் என்னும் இடையீடில்லாத நிகழ்வுப் போக்கு, கீழ்நிலையிலிருந்து உயர்நிலைக்கு முடிவில்லாத முன்னேற்றம் ஆகியவற்றைத் தவிர வேறு எதுவுமே அதற்கு முன்பாக நிலைத்திருக்க முடியாது. இயக்கவியல் தத்துவஞானம் என்பது சிந்தனை செய்கின்ற மூளையில் இந்த நிகழ்வுப் போக்கின் வெறும் பிரதிபலிப்பு என்பதைக் காட்டிலும் அதிகமாக ஒன்றுமில்லை.'' ஆகவே இயக்கவியல் என்பது ''வெளியிலுள்ள உலகம், மனித சிந்தனை ஆகிய இரண்டின் இயக்கத்தின் பொது விதிகளைப் பற்றிய விஞ்ஞானம்'' என்று மார்க்ஸ் வரையறுத்துக் கூறுகிறார்.[3]

ஹெகலியத் தத்துவஞானத்தின் இந்தப் புரட்சிகர அம்சத்தை மார்க்ஸ் எடுத்துக் கொண்டு வளர்த்துச் சென்றார். ''மற்ற விஞ்ஞானங்களிலிருந்து தனித்து, உயர்ந்து நிற்கின்ற எந்தத் தத்துவஞானமும்'' இயக்கவியல் பொருள்முதல்வாதத்துக்கு ''அவசியமல்ல.'' கடந்த காலத் தத்துவஞானத்தில் ''சிந்தனை, அதன் விதிகளைப் பற்றிய விஞ்ஞானம்—அதாவது விதிமுறைத் தர்க்கவியலும் இயக்கவியலும்''[4] எஞ்சியிருக்கின்றன. இயக்கவியல் —மார்க்ஸ் புரிந்து கொண்டபடி மற்றும் ஹெகலுடன் பொருந்தியுள்ள முறையில்—அறிவுத் தத்துவம் அல்லது

அறிவு முறையியல் என்று இப்பொழுது சொல்லப்படுவதை உள்ளடக்கியிருக்கிறது; அதுகூட எடுத்துக் கொண்ட ஆராய்ச்சிப் பொருளை வரலாற்று ரீதியாகப் பார்க்க வேண்டும், அறிவின் தோற்றம் மற்றும் வ ர்ச்சியை, அறிவு இல்லாத நிலையிலிருந்து அறிவு நிலைக்கு மாற்றத்தை ஆராய்ந்து பொதுமைப்படுத்த வேண்டும்.

நம் காலத்தில் வளர்ச்சியைப் பற்றிய, பரிணாமத்தைப் பற்றிய கருத்து சமூக உணர்வில் அநேகமாக முழுமையாக ஊடுருவி விட்டது; அது ஹெகலியத் தத்துவஞானத்தின் மூலமாக இல்லாமல் மற்ற வழிகளில் மட்டுமே நடைபெற்றிருக்கிறது. எனினும் ஹெகலியத் தத்துவஞானத்தின் அடிப்படையில் மார்க்சும் எங்கெல்சும் வகுத்தளித்த இக்கருத்து பரிணாமத்தைப் பற்றிய இக்காலக் கருத்தைக் காட்டிலும் மிகவும் அகல்விரிவானதாகவும் உள்ளடக்கத்தில் மிகவும் அதிகமான அளவுக்கு வளமானதாகவும் இருக்கிறது. ஏற்கெனவே கடந்து வரப்பட்ட கட்டங்களைத் திரும்ப நிறைவேற்றுவது போன்ற, ஆனால் ஒவ்வொரு தடவையும் வேறு முறையில், உயர்வான அடிப்படையில் (''நிலைமறுப்பை நிலைமறுத்தல்'') செய்கின்ற வளர்ச்சி, நேர்கோடாக இல்லாமல் சுழலேணி முறையில் முன்னேறுகின்ற வளர்ச்சி;—பாய்ச்சல்கள், பேரிடர்கள் மற்றும் புரட்சிகளின் மூலமாக நடைபெறுகின்ற வளர்ச்சி;—''தொடர்ச்சியில் முறிவுகள்''; அளவு மாற்றம் பண்பு மாற்றத்தை ஏற்படுத்துதல்;—ஒரு குறிப்பிட்ட பொருளின் மீது அல்லது ஒரு குறிப்பிட்ட நிகழ்வுக்குள் அல்லது குறிப்பிட்ட சமூகத்துக்குள் செயல்படுகின்ற பல்வேறு சக்திகள் மற்றும் போக்குகளின் முரண்பாடு மற்றும் மோதல் வளர்ச்சியை நோக்கிச் செலுத்துகின்ற உள்தூண்டுதல்கள்—எந்த நிகழ்வின் எல்லா அம்சங்களுக்கும் (வரலாறு மேன்மேலும் புதிய அம்சங்களைத் தொடர்ச்சியாக வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது) இடையிலான இடைச்சார்புநிலை மற்றும் மிகவும் நெருக்கமான, பிரிக்கப்பட முடியாத இணைப்பு, நியதிக்குட்பட்ட, சர்வப்பொதுவான இயக்கச் செயல்முறையைத் தருகின்ற இணைப்பு —வளர்ச்சியைப் பற்றிய மரபுவழியான கோட்பாட்டைக் காட்டிலும் இயக்கவியல் கோட்பாட்டுக்கு அதிக வளமான தன்மையைத் தருகின்ற அம்சங்களில் இவை சில.

(மார்க்ஸ் 1868 ஜனவரி 8ந் தேதியன்று எங்கெல்சுக்கு எழுதிய கடிதத்தைப் பார்க்க; அதில் அவர் ஷ்டைனுடைய ''இறுகிப் போன மூவகுப்பு முறையைக்'' கேலி செய்கிறார், அந்தப் பொருள்முதல்வாத இயக்கவியலுடன் சேர்த்துக் குழப்புவது முட்டாள்தனமாகும்.)

1914 ஜூலை—நவம்பருக்கு இடையில் எழுதப்பட்டது

வி. இ. லெனின்,
நூல் திரட்டு,
தொகுதி 26,
பக்கங்கள் 53—55

# இயக்கவியல் பிரச்சினையைப் பற்றி[5]

ஒரு தனி மொத்தத்தைப் பிரித்து அதன் முரண்பாடான பகுதிகளை அறிதல் (ஹெரக்லிட்டசைப் பற்றி லஸ்ஸால் எழுதியுள்ள நூலில் ''அறிதலைப் பற்றி'' என்னும் IIIஆம் பகுதியின் தொடக்கத்தில் ஹெரக்லிட்டசைப் பற்றிக் கொடுக்கப்பட்டுள்ள ஃபிலோனுடைய மேற்கோளைப் பார்க்க)[6] இயக்கவியலின் சாராம்சம் (''சாராம்சங்களில்'' ஒன்று, தலைமையான குணாம்சமாக அல்லது அம்சமாக இல்லாவிட்டாலும் தலைமையான குணாம்சங்கள் அல்லது அம்சங்களில் ஒன்று) ஆகும். ஹெகலும் துல்லியமாக இப்படியே விஷயத்தை எடுத்துக் கூறுகிறார் (அரிஸ்டாட்டில் தன்னுடைய ''இயக்க மறுப்பியல்'' நூலில் அதனுடன் தொடர்ச்சியாக மல்லாடுகிறார், ஹெரக்லிட்டஸ் மற்றும் ஹெரக்லிட்டசின் கருத்துகளுடன் போராடுகிறார்).

இயக்கவியலின் உள்ளடக்கத்தைப் பற்றிய இந்த அம்சம் சரியானதா என்பது விஞ்ஞானத்தின் வரலாற்றினால் சோதிக்கப்பட வேண்டும். இயக்கவியலின் இந்த அம்சம் (உதாரணமாக, பிளெஹானவிடம்) குறைவான கவனத்தையே வழக்கமாகப் பெற்றிருக்கிறது: எதிர்நிலைகளின் முற்றொருமை உதாரணங்களின் கூட்டு மொத்தமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது [''உதாரணமாக, ஒரு விதை''; ''உதாரணமாக, பூர்விகப் பொதுவுடைமை''. இது எங்கெல்சுக்கும் பொருந்தக் கூடியதே. ஆனால் அது ''மக்களுக்குத் தகுந்த வடிவத்தின் நலன்களுக்காக...''], அறிதல் விதி (மற்றும் புறநிலையான உலகத்தின் விதி) என்ற முறையில் அல்ல.

கணிதவியலில்: + மற்றும் —. வகையீட்டுக் கணிதம் மற்றும் ஒருங்கிணைந்த கணிதம்.

இயந்திரவியலில்: செயல் மற்றும் எதிர்ச்செயல்.

பௌதிகத்தில்: நேர் மின்சாரம் மற்றும் எதிர் மின்சாரம்.

வேதியியலில்: அணுக்கள் ஒன்றுசேர்தலும் தனிப் பிரிதலும்.

சமூக விஞ்ஞானத்தில்: வர்க்கப் போராட்டம்.

எதிர்நிலைகளின் முற்றொருமை என்பது (அவற்றின் ''ஒற்றுமை'' என்று கூறுவது இன்னும் சரியாக இருக்குமா? ஆனால் முற்றொருமை மற்றும் ஒற்றுமை என்ற சொற்களுக்கு இடையில் உள்ள வேறுபாடு இங்கே தனி முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கவில்லை. ஒரு அர்த்தத்தில் இரண்டு சொற்களும் சரியானவையே) இயற்கையின்(மனம் மற்றும் சமூகம் உள்பட) எல்லா நிகழ்ச்சிகளிலும் நிகழ்வுப் போக்குகளிலும் உள்ள முரண்பாடான, ஒன்றையொன்று விலக்கிக் கொள்கின்ற, எதிரிடையான போக்குகளைக் கண்டு கொள்ளுதல் (கண்டுபிடித்தல்) ஆகும். உலகத்திலுள்ள எல்லா நிகழ்வுப் போக்குகளையும் அவற்றின் ''சுய இயக்கத்தில்'', அவற்றின் தன்னியல்பான வளர்ச்சியில், அவற்றின் மெய்யான வாழ்க்கையில் அறிவதற்குரிய நிபந்தனை அவை எதிர்நிலைகளின் ஒற்றுமை என்று அறிதல் ஆகும். வளர்ச்சி என்பது எதிர்நிலைகளின் ''போராட்டம்'' ஆகும். வளர்ச்சியின் (பரிணாமத்தின்) இரண்டு அடிப்படையான (அல்லது இரண்டு சாத்தியமான? அல்லது வரலாற்று ரீதியில் கவனிக்கப்படக் கூடிய இரண்டு?) கருதுகோள்கள் பின்வருவன: குறைதலும் அதிகரித்தலும், திரும்பத் திரும்ப நடைபெறுதல் என்ற முறையில் வளர்ச்சி மற்றும் எதிர்நிலைகளின் ஒற்றுமை என்ற முறையில் வளர்ச்சி (ஒற்றுமையை ஒன்றையொன்று விலக்கிக் கொள்கின்ற எதிர்நிலைகளாகப் பிரித்தலும் அவற்றின் பரஸ்பர உறவும்).

இயக்கத்தைப் பற்றிய முதல் கருதுகோளில், சுய இயக்கம், அதன் இயக்குச் சக்தி, அதன் தோற்றுவாய், அதன் செயல் நோக்கம் புறத்தே இருக்கிறது (அல்லது இத்தோற்றுவாய் வெளியிலிருப்பதாகக் கூறப்படுகிறது—கடவுள், அகப்பொருள், இதரவை). இரண்டாவது கருதுகோளில், முக்கிய கவனம் துல்லியமாக '' சுய '' இயக்கத்தின் தோற்றுவாயைப் பற்றிய அறிவின் மீது திருப்பப்படுகிறது.

முதலாவது கருதுகோள் உயிரில்லாதது, வெளிறிப் போனது, உலர்ந்தது. இரண்டாவது கருதுகோள் உயிர்ப்

யுள்ளது. இரண்டாவது மட்டுமே இருக்கின்ற ஒவ்வொன்றின் ''சுய இயக்கத்துக்கும்'' திறவுகோலைத் தருகிறது; அது மட்டுமே ''பாய்ச்சல்களுக்கு'', ''தொடர்ச்சியில் முறிவுக்கு'', ''எதிர்நிலையாக மாறுவதற்கு'', பழையன அழிக்கப்படுவதற்கும் புதியவை தோன்றுவதற்கும் திறவுகோலைத் தருகிறது.

எதிர்நிலைகளின் ஒற்றுமை (நிகழ்வுப் பொருத்தம், முற்றொருமை, சமத்தன்மையுள்ள செயல்) நிபந்தனைக்கு உட்பட்டது, தற்காலிகமானது, நிலையுறுதி இல்லாதது, சார்புநிலையானது. வளர்ச்சியும் இயக்கமும் தனிமுதலானவை என்பதைப் போல, ஒன்றையொன்று விலக்கிக் கொள்கின்ற எதிர்நிலைகளின் போராட்டமும் தனிமுதலானது.

குறிப்பு: அகநிலைவாதத்துக்கும் (ஐயுறவுவாதம், குதர்க்கவாதம், இதரவை) இயக்கவியலுக்கும் இடையிலுள்ள வேறுபாடு என்னவென்றால், (புறநிலையான) இயக்கவியலில் சார்புநிலைக்கும் தனிமுதலானதற்கும் இடையிலுள்ள வேறுபாடு சார்புநிலையானதே என்பதாகும். புறநிலையான இயக்கவியலில் சார்புநிலைக்கு உள்ளே தனிமுதலானது இருக்கிறது. அகநிலைவாதம் மற்றும் குதர்க்கவாதத்தில் சார்புநிலையானது சார்புநிலையானதாக மட்டுமே இருக்கிறது என்பதுடன் அது தனிமுதலானதை விலக்குகிறது.

மார்க்ஸ் தன்னுடைய மூலதனம் என்ற நூலில் முதலாளித்துவ (பண்ட) சமூகத்தின் மிகவும் எளிமையான, மிகவும் சாதாரணமான மற்றும் அடிப்படையான, மிகப் பொதுப்படையான மற்றும் அன்றாட உறவை, பல கோடிமுறைகள் சந்திக்கின்ற உறவை, அதாவது பண்டங்களின் பரிவர்த்தனையைப் பகுப்பாய்வு செய்கிறார். இந்த மிகவும் எளிமையான நிகழ்வின் (முதலாளித்துவ சமூகத்தின் இந்த ''உயிரணுவின்'') பகுப்பாய்வு நவீன சமூகத்தின் எல்லா முரண்பாடுகளையும் (அல்லது எல்லா முரண்பாடுகளின் கருக்களையும்) வெளிப்படுத்துகிறது. அதற்கடுத்த பகுதி இந்த முரண்பாடுகளின் மற்றும் இந்த சமூகத்தின், முதலிலிருந்து முடிவு வரை அதன்

*தனித்தனிப் பகுதிகளின்* Σ* *வளர்ச்சியை (அதிகரிப்பை*யும் இயக்கத்தையும்) *எடுத்துக் கூறுகிறது.*

*பொதுவாக இயக்கவியலை விரித்துரைக்கின்ற (அல்லது ஆராய்கின்ற) முறை இப்படித்தான் இருக்க வேண்டும் (ஏனென்றால் மார்க்சுக்கு முதலாளித்துவ சமூகத்தின் இயக்கவியல் என்பது இயக்கவியலின் குறிப்பிட்ட உதாரணம் மட்டுமே). முதலில் மிகவும் எளிமையான, மிகவும் சாதாரணமான, பொதுப்படையான, இதரவை ஏதாவதொரு* கருதுகோளை *எடுத்துக் கொள்வோம்: மரத்தின் இலைகள் பச்சை நிறத்தில் இருக்கின்றன, ஜான் ஒரு மனிதன், ஃபிடோ ஒரு நாய், இதரவை. இங்கே (ஹெகலின் மேதாவிலாசம் அங்கீகரித்ததைப் போல) ஏற்கெனவே* **இயக்கவியல்** *இருக்கிறது:* **தனியானது பொதுவானதாகும்** *(பார்க்க:* Aristoteles, *Metaphysik*, *ஷ்வெக்லெரின் மொழிபெயர்ப்பு,* Bd. II, S. 40, 3. Buch, 4. Kapitel, 8—9: “denn natürlich kann man nicht der Meinung sein, daß es ein Haus—*பொதுப்படையாக வீடு*—gebe außer den sichtbaren Häusern", „οὐ γὰρ ἄυ θειημεν ετναί τινα οἰχίαν παρὰ τὰς τιυὰς οἰχίας"**). *எனவே எதிர்நிலைகள் (தனியானது பொதுவானதற்கு எதிரானது) முற்றொருமையானவை: தனியானது பொதுவானதற்கு இட்டுச் செல்கின்ற தொடர்பில் மட்டுமே இருக்கிறது. பொதுவானது தனியானதில் மற்றும் தனியானதன் மூலமாக மட்டுமே இருக்கிறது. ஒவ்வொரு தனியானதும் (ஏதாவதொரு வகையில்) பொதுவானதே. ஒவ்வொரு பொதுவானதும் தனியானதன் (துணுக்காக, அல்லது ஒரு அம்சமாக, அல்லது சாராம்சமாக) இருக்கிறது. ஒவ்வொரு பொதுவானதும் தனிப்பொருட்கள் அனைத்தையும் பெரிதும் ஒத்திருக்கின்ற அளவில் மட்டுமே தழுவி நிற்கிறது. ஒவ்வொரு தனியானதும் பொதுவானதில் அரைகுறையாகவே நுழைகிறது, இதரவை.*

---

* *தொகுத்துரைத்தல்.*—ப-ர்.

** *''ஏனென்றால் கண்களினால் பார்க்கப்படுகின்ற வீடுகளைத் தவிர (பொதுப்படையாக) ஒரு வீடு இருக்க முடியும் என்னும் கருத்தை ஒருவர் கொண்டிருக்க முடியாது என்பது உண்மையே.''* —ப-ர்.

ஒவ்வொரு தனியானதும் மற்ற ரகங்களைச் சேர்ந்த தனியான (பொருட்கள், நிகழ்ச்சிகள், நிகழ்வுப் போக்குகள்) இதரவற்றுடன் ஆயிரக்கணக்கான மாற்றங்களினால் இணைக்கப்பட்டிருக்கிறது. இங்கே ஏற்கெனவே அவசியம், இயற்கையின் புறநிலையான இணைப்பு, இதரவை பற்றிய கருதுகோளின் கூறுகள், கருக்கள் இருக்கின்றன. இங்கே ஏற்கெனவே தற்செயலானதும் அவசியமானதும், நிகழ்ச்சியும் சாராம்சமும் இருக்கின்றன; ஏனென்றால் ஜான் ஒரு மனிதன், ஃபிடோ ஒரு நாய், இது மரத்தின் இலை, இதரவை என்று நாம் கூறுகின்ற பொழுது சில குணாம்சங்களைத் தற்செயலானவை என்று ஒதுக்குகிறோம்; தோற்றத்திலிருந்து சாராம்சத்தைப் பிரித்தெடுக்கிறோம்; ஒன்றை மற்றொன்றுக்கு எதிர்நிலையாக வைக்கிறோம்.

ஆகவே எந்தக் கருதுகோளிலும், ''மூலக் கருவை'' (''உயிரணு'') போல, இயக்கவியலின் எல்லாக் கூறுகளின் கருக்களையும் வெளிக்காட்ட முடியும் (வெளிக்காட்ட வேண்டும்), அதன் மூலம் இயக்கவியல் பொதுவாக எல்லா மனித அறிவின் இயல்பு என்பதை எடுத்துக் காட்ட முடியும். இயற்கை விஞ்ஞானம் அதே பண்புகளைக் கொண்ட புறநிலையான இயற்கையை, தனியானது பொதுவானதாக, தற்செயலானது அவசியமானதாக மாற்றமடைவதை, மாற்றங்களை, ஏற்ற இறக்கங்களை மற்றும் எதிர்நிலைகளின் பரஸ்பர இணைப்பை நமக்கு எடுத்துக் காட்டுகிறது (மற்றும் இங்கு மறுபடியும் எந்த எளிமையான உதாரணத்திலும் அதை நிரூபிக்க வேண்டும்). இயக்கவியல் (ஹெகல் மற்றும்) மார்க்சியத்தின் அறிதல் தத்துவமாக இருக்கிறது. இவ்விஷயத்தின் இந்த அம்சத்தைப் பற்றி (இது இவ்விஷயத்தின் ''ஒரு அம்சம்'' அல்ல, ஆனால் அதன் சாராம்சம்) பிளெஹானவ் கவனம் செலுத்தவில்லை; மற்ற மார்க்சியவாதிகளைப் பற்றிப் பேச வேண்டியதில்லை.

* * *

ஹெகல் (அவர் எழுதிய தர்க்கவியலைப் பார்க்க), இயற்கை விஞ்ஞானத்தின் நவீன ''அறிவு மூல இயல்வாதியும்'' கதம்பவாதியும் ஹெகலியவாதத்தின் (அதை அவர்

புரிந்து கொள்ளவில்லை!) எதிரியுமான Paul Volkmann (அவர் எழுதிய *Erkenntnistheoretische Grundzüge*,* S. பார்க்க) ஆகிய இருவருமே அறிதலைத் தொடர்வரிசையான சில வளையங்களாகக் கருதினார்கள்.

| |
|---|
| தத்துவஞானத்தில் ''வளையங்கள்'': [நபர்களின் காலவரிசை முறை அவசியமா? இல்லை. |
| பண்டைக் காலம்: டெமாக்கிரிட்டசிலிருந்து பிளாட்டோ வரை மற்றும் ஹெரக்லிட்டசின் இயக்கவியல் வரை. |
| மறுமலர்ச்சிக் காலம்: Gassendi (Spinoza?) வுக்கு versus** டெக்கார்ட் |
| நவீன காலம்: ஹோல்பாஹ்—ஹெகல் (பெர்க்லி, ஹியூம், கான்ட் மூலமாக). |
| ஹெகல்—ஃபாயர்பாஹ்—Marx. |

இயக்கவியல், வாழ்கின்ற பன்முகப்பட்ட அறிதல் (அதன் பக்கங்களின் எண்ணிக்கை முடிவில்லாதபடி அதிகரிக்கிறது) எதார்த்தத்தை நோக்கிய ஒவ்வொரு அணுகுமுறைக்கும், நெருங்கிய அளவீட்டுக்கும் முடிவில்லாத எண்ணிக்கையைக் கொண்ட பண்புகளை (ஒவ்வொரு பண்பிலிருந்தும் ஒரு மொத்த தத்துவஞான அமைப்பு வளர்ச்சியடைகிறது) கொண்டது என்ற முறையில்—இங்கே ''இயக்க மறுப்பியல்'' பொருள்முதல்வாதத்துடன் (Bildertheorie***க்கு, அறிதல் நிகழ்வுப் போக்குக்கும் அதன் வளர்ச்சிக்கும் இயக்கவியலைக் கையாள முடியாதது அதன் அடிப்படையான துரதிர்ஷ்டமாகும்) ஒப்பிடுகின்ற பொழுது—அளவிட முடியாத வளமான உள்ளடக்கத்தைப் பார்க்கிறோம்.

தத்துவஞானக் கருத்துமுதல்வாதம் நயமில்லாத, எளிமையான இயக்க மறுப்பியல் பொருள்முதல்

---

* P. Volkmann, *Erkenntnistheoretische Greundzüge der Naturwissenschaften*, Leipzig-Berlin, 1910, S. 35.—ப-ர்.

** எதிராக—ப-ர்.

*** பிரதிபலிப்புத் தத்துவம்.—ப-ர்.

வாத நோக்கிலிருந்து முட்டாள்தனம் மட்டுமே ஆகும். மாறாக, இயக்கவியல் பொருள்முதல்வாதத்தின் நோக்கில் தத்துவஞானக் கருத்துமுதல்வாதம், அறிதலின் கூறுகளில், அம்சங்களில், பக்கங்களில் ஒன்றைத் தனிமுதலானதாக, பருப்பொருளிலிருந்து, இயற்கையிலிருந்து பிரிக்கப்பட்டதாக, தெய்வமாக ஒரு தரப்பான முறையில் மிகைப்படுத்திக் கூறுகின்ற, überschwengliches (Dietzgen) வளர்ச்சி (வீக்கம், விரித்தல்) ஆகும். கருத்துமுதல்வாதம் என்பது திருச்சபை அறிவு வெறுப்புவாதமாகும்.

குறிப்பு இந்த மூதுரை || உண்மையே. ஆனால் தத்துவஞானக் கருத்துமுதல்வாதம் ("இன்னும் சரியாக" மற்றும் "இன்னும் கூடுதலாக") முடிவில்லாத பன்முகத் தன்மையுள்ள மனிதனுடைய (இயக்கவியல்) அறிவின் பண்புகளில் ஒன்றின் மூலமாக திருச்சபை அறிவு வெறுப்புவாதத்துக்குச் செல்கின்ற பாதை ஆகும்.

மனித அறிதல் எனப்படுவது நேர்கோடு அல்ல (அல்லது நேர்கோட்டைப் பின்பற்றுவதில்லை), ஆனால் அது ஒரு வளைகோடு, அது தொடர்வரிசையான வளையங்களை, ஒரு சுழலேணியை முடிவில்லாதபடி நெருங்கி வருகிறது. இந்த வளைகோட்டின் எந்தத் துணுக்கு, இடைக்கூறு, பகுதியையும் சுயேச்சையான, முழுமையான நேர்கோடாக மாற்ற முடியும் (ஒரு தரப்பாக மாற்ற முடியும்); அது ஒரு நபரை (தனிப் பகுதிகளை மொத்த வடிவமாகப் பார்க்காதிருந்தால்) சதுப்புநிலத்துக்கு, திருச்சபை அறிவு வெறுப்புவாதத்துக்கு இட்டுச் செல்கிறது (அங்கே ஆளும் வர்க்கங்களுடைய வர்க்க நலன்கள் அதை வேரூன்றச் செய்கின்றன). நேர்கோட்டியல்பு மற்றும் ஒரு சார்புத் தன்மை, இறுகிப் போதல் மற்றும் கெட்டிப்பட்டுக் கல்லாகிவிடுதல், அகநிலைவாதம் மற்றும் அகநிலைவாதக் குருட்டுத்தனம்—voilà* கருத்துமுதல்வாதத்தின் அறிவுமூல வேர்கள். திருச்சபை அறிவு வெறுப்புவாதத்துக்கு (=தத்துவஞானக் கருத்துமுதல்

---

* இவைதான்.—ப-ர்.

வாதத்துக்கு) அறிவுமூல வேர்கள் இருக்கின்றன என்பது உண்மையே, அது ஆதாரமற்றது அல்ல. அது மலட்டுப் பூ என்பதில் ஐயமில்லை, ஆனால் அது, வாழ்கின்ற, வளமான, உண்மையான, வலிமை மிக்க, எல்லாம் வல்ல, புறநிலையான, தனிமுதலான மனித அறிதல் என்னும் வாழ்கின்ற மரத்தின் மீது வளர்கின்ற மலட்டுப் பூ.

*1915இல் எழுதப்பட்டது*

வி. இ. லெனின்,
நூல் திரட்டு,
29ம் தொகுதி,
பக்கங்கள் 316—322

# இரண்டாவது அகிலத்தின் தகர்வு

அகிலத்தின்[7] தகர்வு என்பதன் மூலம் சம்பிரதாய விதிமுறை விவகாரம் மட்டுமே குறிக்கப்படுவதாக, அதாவது போரிடும் நாடுகளது சோஷலிசக் கட்சிகளிடையே சர்வதேசத் தொடர்பு தடைப்பட்டிருப்பதும், சர்வதேச மாநாட்டையோ சர்வதேச சோஷலிச பியூரோவையோ[8] கூட்ட முடியாமல் போயிருப்பதும், இன்ன பிறவும் மட்டுமே குறிக்கப்படுவதாகச் சில நேரங்களில் கருதப்படுகிறது. இந்தக் கருத்தோட்டத்தைத்தான் சிறிய நடுநிலை நாடுகளைச் சேர்ந்த சிற்சில சோஷலிஸ்டுகளும் அனேகமாக அந்நாடுகளது அதிகார பூர்வமான கட்சிகளில் பெரும்பாலானவையும் மற்றும் சந்தர்ப்பவாதிகளும் அவர்களது ஆதரவாளர்களும் கொண்டிருக்கிறார்கள்.

ருஷ்யப் பத்திரிகை உலகில் திரு. வி. கசோவ்ஸ்கி இந்தக் கருத்துநிலையை பூந்தின்[9] செய்தியேட்டில், இதழ் 8இல், நமது ஆழ்ந்த நன்றிக்குரியவாறு ஒளிவுமறைவில்லாத பகிரங்கமான முறையில் ஆதரித்து வாதாடினார். இக்கட்டுரை ஆசிரியருடன் தமக்குக் கருத்து உடன்பாடு இல்லையென இந்த ஏட்டின் ஆசிரியர்கள் குறிப்பு ஏதும் தரவில்லை. தேசியவாதத்துக்கு ஆதரவாக வாதாடுகையில் திரு. கசோவ்ஸ்கி, ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிகள் யுத்தக் கடன்களை[10] ஆதரித்து வாக்களித்தது நியாயமே என்று சாதிக்கும் அளவுக்குச் சென்றார். பூந்தின் முதலாளித்துவ-தேசியவாதத் தன்மையைத் தொழிலாளர்கள் பலரும் முடிவாக உணர்ந்து கொள்வதற்குத் திரு. கசோவ்ஸ்கியின் இந்தத் தேசியவாத ஆதரவு துணைபுரியுமென்று நம்புவோமாக.

வர்க்க உணர்வு படைத்த தொழிலாளர்களுக்கு சோஷலிசமானது வைராக்கிய முடிபாகிய பற்றுகோளாகுமே அன்றி, அற்பவாத இணக்கவாதப் பிரயத்தனங்களையும் தேசியவாத எதிர்த்தரப்புப் பிரயத்தனங்களையும் மூடி

2—101

மறைத்துக் கொள்ள உதவும் வசதியான ஒரு மூடுதிரை அல்ல. அகிலத்தின் தகர்வு என்பதன் மூலம், அவர்கள் தமது வைராக்கிய முடிபுகளுக்கு அதிகாரபூர்வமான மிகப் பெரும்பாலான சமூக-ஜனநாயகக் கட்சிகள் இழைத்த அவக்கேடான துரோகமே குறிக்கப்படுவதாக, ஷ்டுட் கார்ட்டிலும் பாஸெலிலும் நடைபெற்ற சர்வதேசக் காங் கிரசுகளில்[11] இக்கட்சிகள் நிகழ்த்திய உரைகளிலும் இந்தக் காங்கிரசுகள் ஏற்ற தீர்மானங்களிலும் அடங்கி யுள்ள மிகவும் புனிதமான பிரகடனங்களுக்கு இழைத்த துரோகமே குறிக்கப்படுவதாகக் கொள்கிறார்கள். இந்தத் துரோகத்தைக் கண்டு கொள்ள **விரும்பாதவர்கள்தான்,** அல்லது இதைக் கண்டு கொள்வதில் தமக்கு ஆதாயமில்லை யென்று தெரிந்தவர்கள்தான் இதைக் காணத் தவற முடியும். இந்த விவகாரத்தை விஞ்ஞான முறையில் எடுத் துரைப்போமானால், அதாவது தற்கால சமுதாயத்தில் நிலவும் வர்க்க உறவுகளின் நோக்கு நிலையிலிருந்து எடுத் துரைப்போமானால், மிகப் பெரும்பாலான சமூக-ஜன நாயகக் கட்சிகளும், இவற்றுக்கு எல்லாம் தலைமையில் முதலாவதாகவும் முதன்மையானதாகவும் இரண்டாவது அகிலத்தின் மிகப் பெரிய, மிகவும் செல்வாக்கு வாய்ந்த கட்சியாகிய ஜெர்மன் கட்சியும், பாட்டாளி வாக்கத் துக்கு எதிராகத் தமது இராணுவத் தலைமை அலுவலர் களின், தமது அரசாங்கங்களின், தமது முதலாளி வர்க்கங் களின் தரப்புக்குச் சென்று விட்டன என்றே கூற வேண் டும். இது உலக வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சியாகும், மிகவும் விரிவான பகுத்தாய்வை அவசிய மாக்கும் ஒன்றாகும். யுத்தங்கள் எவ்வளவுதான் பயங்கர மான கொடூரத்தையும் துன்பதுயரங்களையும் விளைவித் தாலும், குறைந்தபட்சம் அவை அதிகமாகவோ குறைவாக வோ முக்கியத்துவம் வாய்ந்த பின்வரும் அனுகூலத்தை உண்டாக்குகிறவை என்பது—மனித நிறுவன அமைப்பு களில் ஊழல் மலிந்து காலங்கடந்து உயிரற்று இருப்ப வற்றில் ஒரு பெரும் பகுதியை இரக்கமற்றவாறு புலப் படுத்தி அம்பலம் செய்து காட்டி அழிப்பவை என் பது—நெடுங் காலமாகவே ஏற்றுக் கொள்ளப்படுகிறது. *1914—1915*ஆம் ஆண்டின் ஐரோப்பிய யுத்தமானது, நாகரிக நாடுகளின் முன்னேறிய வர்க்கத்துக்கு அதன்

கட்சிகளினுள் எவ்வளவு படுமோசமாகப் புரையோடிய கட்டி வளர்ந்துள்ளது, சகிக்க முடியாதபடி எப்படி அதி லிருந்து நாற்றம் வீசுகிறது என்பதைப் புலப்படச் செய்து ஓரளவுக்கு நலம் புரிய ஆரம்பித்திருப்பதில் ஐயப்பாட் டுக்கு இடமில்லை.

1

ஐரோப்பாவின் பிரதான சோஷலிசக் கட்சிகள் தமது பற்றுக்கோள்கள், கடமைகள் யாவற்றையும் துரோகம் செய்து தலை முழுகியிருப்பது மெய்யா, பொய்யா? இது குறித்து விவாதிப்பதற்குத் துரோகிகளும் சரி, துரோகி களிடத்தே தாம் நட்புணர்வுடன் நயமாக நடந்து கொண்டாக வேண்டுமென்பதை நன்கு உணருவோரும்— அல்லது ஊகித்துக் கொள்வோரும்—சரி, தயக்கமின்றி முன்வர மாட்டார்கள்தான். இரண்டாவது அகிலத்தின் ''அதிகார மேலவர்கள்'' பலருக்கும் அல்லது ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகளிடையே இருக்கக் கூடிய அவர்களது சக சிந்தனையாளர்களுக்கும் எவ்வளவுதான் கசப்பான தாக இருப்பினும்கூட, உண்மைகளை நாம் நேர் நின்றே பார்த்தாக வேண்டும், அவையாவற்றையும் அவற்றுக் குரிய சரியான பெயர் கொண்டே அழைத்திட வேண்டும்; தொழிலாளர்களிடம் நாம் உண்மைகளைக் கூறியே ஆக வேண்டும்.

தற்போதைய யுத்தத்துக்கு முன்னதாக, இதை எதிர் பார்த்து, சோஷலிசக் கட்சிகள் தமது கடமைகளும் தமது நடைமுறைத் தந்திரமும் எவ்விதம் இருக்க வேண்டு மென்று கருதின என்பதைக் காட்டும் உண்மைகள் எவை யேனும் இருக்கின்றனவா? சந்தேகத்துக்கு இடமின்றி இருக்கின்றன. 1912ஆம் ஆண்டின் பாஸெல் சர்வதேச சோஷலிசக் காங்கிரசால் ஏற்கப்பட்ட தீர்மானம் இருக் கிறது. இந்தத் தீர்மானத்தையும் இதனுடன் கூட இதே ஆண்டில் ஹெம்னிட்ஸ் நகரத்தில் நடைபெற்ற ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சிக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்ட தீர்மானத்தையும்[12] சோஷலிசத்தின் ''மறக்கப்பட்டு விட்ட இலட்சியங்களை'' நினைவுபடுத்தும் முறையில் மீண்டும் நாம் அச்சிடுகிறோம். எல்லா நாடுகளிலும் பெரிய அளவில் வெளியான யுத்த எதிர்ப்புக் கிளர்ச்சி,

பிரசார இலக்கியத்தைத் தொகுத்துரைக்கும் இந்தத் தீர்மானம் யுத்தத்தைப் பற்றிய சோஷலிசக் கருத்தோட்டங்களையும் யுத்தம் சம்பந்தமாக அனுசரிக்க வேண்டிய நடைமுறைத்தந்திரத்தையும் எடுத்துரைக்கும் யாவற்றிலும் முழுமையும் துல்லியமும் மிக்க, யாவற்றிலும் புனிதமும் சம்பிரதாயமும் வாய்ந்த ஆய்வுரையாகும். நேற்றைய அகிலத்துக்கும் இன்றைய சமூக தேசியவெறிக்கும் அதிகார மேலவர்களாக அமைந்தோரில் எவருமே—ஹைண்ட்மனும் கெட்டும் சரி, காவுத்ஸ்கியும் பிளெஹானவும் சரி—அந்தத் தீர்மானத்தைத் தமது வாசகர்களுக்கு நினைவுபடுத்தத் துணிவதில்லை, இதனைத் துரோகச் செயலேயன்றி வேறு எதுவாகவும் சொல்வதற்கில்லை. இவர்கள் இத்தீர்மானம் குறித்து மௌனம் சாதிக்கிறார்கள், அல்லது (காவுத்ஸ்கியைப் போல) இரண்டாந்தர முக்கியத்துவமுடைய தனித்தெடுக்கப்பட்ட வாசகங்களை மேற்கோளாகக் காட்டி விட்டு, மெய்யாகவே முக்கியத்துவம் வாய்ந்தவை யாவற்றையும் தட்டிக் கழித்து விடுகிறார்கள். ஒரு புறத்தில், மிகமிக ''இடதுசாரியான'', அதிதீவிர புரட்சிகரத் தீர்மானங்கள்; மறு புறத்தில் அறவே வெட்கங்கெட்ட ஞாபகமறதி அல்லது இத்தீர்மானங்களை நிராகரித்தல்—இது அகிலத்தின் தகர்வினை மிகவும் எடுப்பாகத் தெரியப்படுத்தும் வெளிப்பாடுகளில் ஒன்றாகும்; அதே போது பழைய கபட நாடகம் தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்ற கள்ளத்தனமான விருப்பத்தின்பாற்பட்டதாகிய அரிய வெகுளித்தனம் வாய்ந்தோரால் மட்டுமே வெறும் தீர்மானங்களைக் கொண்டு சோஷலிசத்தைத் ''திருத்திச் சரி செய்துவிடலாம்'' என்றும், ''அதன் கொள்கை வழியை ஒழுங்குபடுத்திவிடலாம்'' என்றும் இப்போது நம்ப முடியும் என்பதற்கான ஐயந்திரிபற்ற நிரூபணமும் ஆகும் இது.

நேற்றுதான் என்று சொல்லலாம்; யுத்தத்துக்கு முன்பு, ஹைண்ட்மன் ஏகாதிபத்தியத்துக்கு ஆதரவாக வாதாடமுற்பட்ட போது, ''கண்ணியமான'' சோஷலிஸ்டுகள் எல்லோரும் அவரைக் குழம்பிப் போன பைத்தியமென்று கருதி வந்தனர், எப்போதுமே அவரைப் பற்றி இகழ்ச்சியாகவே பேசி வந்தனர். ஆனால் இன்று எல்லா நாடுகளிலும் மிகவும் முதன்மையான சமூக-ஜனநாயகத் தலைவர்

கள் எல்லோரும் முற்றிலும் ஹைண்ட்மனின் நிலைக்குச் சரிந்து சென்று விட்டனர், கருத்துச் சாயல்களிலும் உள்ளப்பாங்கிலும் மட்டும்தான் இவர்களிடையே வேறுபாடு காணப்படுகிறது. நாஷே ஸ்லோவோ[13] ஏட்டின் ஆசிரியர்களைப் போன்றோரின் குடிமை வீரத்தினை மதிப்பீடோ, குண நிர்ணயமோ செய்யும் விதத்தில் ஓரளவுக்குப் பொருத்தமான நாடாளுமன்ற நயமொழியினை எம்மால் தேடிப் பிடிக்க முடியவில்லை—இவர்கள் ''திருவாளர்'' ஹைண்ட்மனைப் பற்றி இகழ்ந்துரைத்து விட்டு, அதே நேரத்தில் ''தோழர்'' காவுத்ஸ்கியைப் பற்றி பணிவன்புடன் (அல்லது அடிவருடித்தனத்துடனா?) பேசுகின்றனர், இல்லையேல் எதுவும் கூறாமலே இருக்கின்றனர். இம்மாதிரியான ஒரு போக்கினை சோஷலிசத்திடமும் பொதுவில் அவரவரும் தத்தமது பற்றுக்கோள்களிடமும் காட்ட வேண்டிய மதிப்புணர்ச்சிக்கு இசைவானதாகக் கொள்ள முடியுமா? ஹைண்ட்மனின் தேசியவெறி தவறானது, நாசம் விளைவிப்பது என்பதாக நீங்கள் திடமாய் நம்புவீர்களென்றால் இம்மாதிரியான கருத்தோட்டங்களை ஆதரித்து வாதாடுவோரில் அதிக செல்வாக்குடையவரும் அதிக அபாயகரமானவருமாகிய காவுத்ஸ்கியை எதிர்த்து நீங்கள் உங்களது விமர்சனத்தையும் தாக்குதல்களையும் தொடுக்க வேண்டியது அவசியம் அல்லவா?

கெட்டின் கருத்தோட்டங்கள் வேறு எதிலும் விட அதிக விவரமாக, நாம் விரும்பும் சமாதானம் என்ற தலைப்புடைய ஒரு பிரசுரத்தில் கெட்டுவாதியாகிய ஷார்ல் டியுமாவால் அண்மையில் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ''மூல் கெட்டின் தலைமை அமைச்சர்''—பிரசுரத்தின் தலைப்புப் பக்கத்தில் இவர் தம்மைத் தாமே இவ்வாறுதான் அழைத்துக் கொள்கிறார்—இயற்கையாகவே சோஷலிஸ்டுகளின் முன்னாளைய தேசபக்த வாக்குமூலங்களை ''மேற்கோளாகத்'' தருகிறார் (ஜெர்மன் சமூக-தேசியவெறியரான டவீடும் தாயகப் பாதுகாப்பு பற்றி அண்மையில் அவர் எழுதிய பிரசுரத்தில்[14] இவ்வாறேதான் செய்கிறார்), ஆனால் பாஸெல் அறிக்கையை அவர் குறிப்பிடத் தவறிவிடுகிறார்! தேசியவெறி கொண்ட வழக்கமான அற்பப் பேச்சுகளை அளவு கடந்த சுயதிருப்தியுடன் பேசி வரும் பிளெஹானவும் இதே போல்

பாஸெல் அறிக்கை குறித்துப் பேச்சுமூச்சின்றி மௌனமாயிருக்கிறார். காவுத்ஸ்கியும் பிளெஹானவைப் போலவே நடந்து கொள்கிறார்: பாஸெல் அறிக்கையிலிருந்து மேற்கோள்கள் தரும் அவர், புரட்சிகர வாசகங்கள் யாவற்றையும் (அதாவது ஜீவாதார உள்ளடக்கம் கொண்டவை யாவற்றையும்!) விட்டுவிடுகின்றார், தணிக்கை விதிகள் தடை போடுவதாக அவர் மழுப்பலாம்... வர்க்கப் போராட்டத்தையோ, புரட்சியையோ பற்றிக் குறிப்பிட முடியாதபடி தணிக்கை விதிகளைக் கொண்டு தடை போடும் போலீஸாரும் இராணுவ அதிகாரிகளும் சோஷலிசத்தின் துரோகிகளுக்குத் "தக்க தருணத்தில்" கை கொடுத்து உதவியுள்ளனர்!

பாஸெல் அறிக்கை வெற்று வேண்டுகோளாக அமைந்து, இன்று நடைபெறும் இந்த ஸ்தூலமான யுத்தத்துடன் நேரடித் தொடர்புள்ள திட்டவட்டமான வரலாற்று அல்லது நடைமுறைத் தந்திர உள்ளடக்கம் ஏதும் இல்லாததாக இருக்குமோ?

இதற்கு நேர்மாறானதே உண்மை. ஏனைய தீர்மானங்களைக் காட்டிலும் பாஸெல் தீர்மானம் குறைந்த அளவிலான வெற்று வாய்வீச்சையும் அதிக அளவிலான தெள்ளிய உள்ளடக்கமும் கொண்டதாகும். தற்போது வெடித்துக் கிளம்பியிருக்கிறதே அதே யுத்தம் குறித்துத்தான், 1914—1915இல் மூண்டெழுந்துள்ளனவே அந்த ஏகாதிபத்திய மோதல்கள் குறித்துத்தான் பாஸெல் தீர்மானம் பேசுகிறது. பால்கன் தீபகற்பம் குறித்து ஆஸ்திரியாவுக்கும் செர்பியாவுக்கும் இடையிலும் ஆல்பானியாவும் பிறவும் குறித்து ஆஸ்திரியாவுக்கும் இத்தாலிக்கும் இடையிலுமான மோதல்கள், பொதுவாக சந்தைகளும் காலனிகளும் குறித்து பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் இடையிலும் அர்மீனியாவும் கன்ஸ்டான்டிநோப்பிளும் குறித்து ருஷ்யாவுக்கும் துருக்கிக்கும் பிறவற்றுக்கும் இடையிலுமான மோதல்கள்—தற்போதைய யுத்தத்தை எதிர்பார்க்கும் விதத்தில் பாஸெல் தீர்மானம் இவை யாவும் குறித்துக் கூறுகிறது. "ஐரோப்பாவின் வல்லரசுகளுக்கு" இடையிலான தற்போதைய யுத்தம் "மக்களது நலன்களுக்கு இம்மியளவும் கூட உகந்தது என்பதாக நியாயம் கூற முடியாததாகும்"

என்பது அந்தத் தீர்மானத்திலிருந்து பெறப்படுகிறது.

பிளெஹானவும் காவுத்ஸ்கியும்—மிகவும் இனமாதிரியான அதிகாரபூர்வமான சோஷலிஸ்டுகளில் இருவரை எடுத்துக் கொள்வோமாயின், இருவரையும் நாம் நன்கு அறிவோம், ஒருவர் ருஷ்ய மொழியில் எழுதுகிறவர், இன்னொருவர் கட்சிக் கலைப்புவாதிகளால் ருஷ்ய மொழியில் மொழிபெயர்க்கப்படுகிறவர்—இப்போது (அக்செல்ரோதின் உதவியுடன்) யுத்தத்திற்கான எல்லா விதமான "ஜனரஞ்சக நியாயங்களையும்" (அல்லது, பூர்ஷ்வா சாக்கடைப் பத்திரிகைகளிலிருந்து எடுக்கப்பட்ட பொதுவான நியாயங்களெனக் கூறுவதே பொருத்தமாயிருக்கும்) தேடுகிறார்கள்; புலமை வாய்ந்த தோரணையோடு, மார்க்சிடமிருந்து பொய்யான பல மேற்கோள்களை எடுத்தாண்டு இவர்கள் 1813, 1870ஆம் ஆண்டுகளின் யுத்தங்களையோ (பிளெஹானவ்), 1854—1871, 1876—1877, 1897ஆம் ஆண்டுகளின் யுத்தங்களையோ (காவுத்ஸ்கி) "முன்மாதிரியாகக் கொள்ளத்தக்கவையாகக்" குறிப்பிடுகிறார்கள். உண்மை என்னவென்றால், சோஷலிசத்தில் திட நம்பிக்கை இம்மியளவும் இல்லாதவர்களால் மட்டும்தான், சோஷலிச மனசாட்சி கடுகளவும் இல்லாதவர்களால் மட்டும் தான் இத்தகைய வாதங்களைக் கருத்துக்குரியவையாகக் கொள்ள முடியும், ஒப்பீடில்லாத மோசடியாகவும் கபடமாகவும் சோஷலிசத்தை இழிவுபடுத்தும் சோரத்தனமாகவும் குறிப்பிடத் தவற முடியும்! காவுத்ஸ்கியை நேர்மையுடன் கண்டன விமர்சனம் செய்வதற்காக மேரிங், ரோசா லுக்சம்புர்க் இவர்களது புதிய சஞ்சிகையை *(Die Internationale)* ஜெர்மன் கட்சியின் செயற் குழு ("ஃபார்ஷ்தாண்டு") இழித்தும் பழித்தும் கூறி சாபமிடட்டும். வண்டர்வேல்டே, பிளெஹானவ், ஹைண்ட்மன் வகையராக்கள் அவர்களது எதிராளிகளை "மூவர் உடன்பாட்டு"[15] நாடுகளது போலீசின் துணை கொண்டு இவ்விதமே நடத்தட்டும். பாஸெல் அறிக்கையை அப்படியே அச்சிட்டு இதற்கு நாம் பதிலளிப்போம். துரோகச் செயலென்றே குறிப்பிட வேண்டிய ஒரு பாதையை இத் தலைவர்கள் தெரிந்தெடுத்துக் கொண்டு விட்டதை இந்த அறிக்கை தெளிவுபடுத்தும்.

பாஸெல் தீர்மானம் தேசிய அல்லது மக்கள் யுத்தம்

குறித்துப் பேசவில்லை—தேசிய அல்லது மக்கள் யுத்தத்துக்கு உதாரணமாகக் கூறக் கூடிய யுத்தங்கள் ஐரோப்பாவில் நடைபெற்றிருக்கின்றன, 1789—1871ஆம் ஆண்டுகளின் காலத்துக்கு இவையே உருமாதிரியாக அமைந்த யுத்தங்கள் என்று கூடச் சொல்லலாம்; இத்தீர்மானம் புரட்சிகர யுத்தம் குறித்துப் பேசவில்லை—சமூக-ஜனநாயகவாதிகள் புரட்சிகர யுத்தத்தை ஒருபோதும் நிராகரித்ததில்லை. பாஸெல் தீர்மானம் தற்போதைய யுத்தம் குறித்துத்தான் பேசுகிறது: ''முதலாளித்துவ ஏகாதிபத்தியத்தின்'', ''அரசவம்ச நலன்களின்'' விளைவான, போரிடும் அரசுகளின் இரு கோஷ்டிகளாகிய ஆஸ்திரிய-ஜெர்மன், ஆங்கிலேய-பிரெஞ்சு-ருஷ்யக் கோஷ்டிகளால் பின்பற்றப்படும் ''நாடுபிடிக்கும் கொள்கையின்'' விளைவான தற்போதைய யுத்தம் குறித்துத்தான் பேசுகிறது. காலனிகளுக்கான இந்த ஏகாதிபத்திய, கொள்ளைக்கார யுத்தத்தை மக்கள் யுத்தமாக, (இந்த அல்லது அந்தத் தரப்பின்) தற்காப்புக்கான யுத்தமாகச் சித்திரிப்பதற்கு எல்லா நாடுகளையும் சேர்ந்த பூர்ஷ்வா வர்க்கத்தினரும் தமது முழு சக்தியையும் கொண்டு பெருமுயற்சி செய்கிறார்கள். பிளெஹானவும் காவுத்ஸ்கியும் இவர்களது கூட்டத்தினரும் ஏகாதிபத்தியத் தன்மை அல்லாத யுத்தங்களை வரலாற்று உதாரணங்களாகக் குறிப்பிட்டு இந்த யுத்தத்துக்கு நியாயம் கற்பிக்க முற்படுகையில், எல்லா நாடுகளின் பூர்ஷ்வா வர்க்கத்தினரது தன்னலப் பொய்யுரையை அப்படியே திருப்பிக் கூறுவதன் மூலம் அப்பட்டமாகத் தொழிலாளர்களை ஏமாற்றி வருகிறார்கள்.

தற்போதைய யுத்தம் ஏகாதிபத்திய, கொள்ளைக்கார, பாட்டாளி வர்க்க எதிர்ப்புத் தன்மையுடையதாகும் என்கிற பிரச்சினை முற்றிலும் தத்துவார்த்தப் பிரச்சினைக்குரிய கட்டத்தைக் கடந்து சென்று நெடுநாட்களாகின்றன. ஏகாதிபத்தியத்தின் பிரதான இயல்புகள் யாவும் தத்துவார்த்த வழியில் கணிக்கப்பட்டிருக்கின்றன. கிழடு தட்டிப் போய் இறுதிக் காலத்தை வந்தடைந்து விட்ட முதலாளி வர்க்கம் உலகைப் பங்கு போட்டுக் கொள்வதற்காகவும் ''சிறு'' தேசிய இனங்களை அடிமைப்படுத்துவதற்காகவும் போராட்டம் நடத்தி வருகிறதென்று மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த முடிவு

கள் எல்லா நாடுகளிலும் விஸ்தாரமாக இருந்து வரும் சோஷலிசப் பத்திரிகைகளில் ஆயிரக்கணக்கான முறை மீண்டும் மீண்டும் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக, நமது ''நேச'' தேசங்களில் ஒன்றின் பிரதிநிதியாகிய பிரெஞ்சுக் காரர் தெலெசீ ''மூண்டு வரும் யுத்தம்'' (1911!) என்ற தமது பிரசுரத்தில் பிரெஞ்சு முதலாளி வர்க்கத்தைப் பொறுத்த மட்டில், தற்போதைய யுத்தத்தின் கொள்ளைக்காரத் தன்மையை எளிய முறையில் விளக்கிக் கூறினார். அது மட்டுமல்ல. பாஸெலில் எல்லா நாடுகளின் பாட்டாளி வர்க்கக் கட்சிகளது பிரதிநிதிகளும் ஏகாதிபத்தியத் தன்மை வாய்ந்த ஒரு யுத்தம் மூண்டு வந்ததென்ற தமது அசைக்க முடியாத திடமான கருத்தை ஒருமனதாகவும் அதிகாரபூர்வமாகவும் வெளியிட்டனர்; இதிலிருந்து எழுந்த நடைமுறைத் தந்திர முடிவுகளை அவர்கள் எடுத்துரைத்தனர். ஆகவே, தேசிய நடைமுறைத் தந்திரத்துக்கும் சர்வதேசிய நடைமுறைத் தந்திரத்துக்கும் இடையிலான வேறுபாடு போதுமான அளவு விவாதிக்கப்படவில்லை (நாஷே ஸ்லோவோ, இதழ்கள் 87, 90இல் அக்செல்ரோதின் சமீபத்திய பேட்டியைப் பார்க்கவும்) என்பதாகவும் இன்ன பலவாறாகவும் கூறப்படுபவை யாவற்றையும் ஏனைய பல காரணங்களுடன் கூட இக்காரணத்தை முன்னிட்டும் நாம் குதர்க்கவாதமென முற்றாகவும் முடிவாகவும் நிராகரித்தே ஆக வேண்டும். இது குதர்க்கவாதமே ஆகும், ஏனென்றால் ஏகாதிபத்தியத்தை விரிவாக, விஞ்ஞான முறையில் பகுத்தாய்தல் என்பது ஒன்று—இந்தப் பகுத்தாய்வு நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கிறது, சாராம்சத்தில் இது விஞ்ஞானத்தைப் போலவே முடிவின்றி தொடர்ந்து நடைபெறுவதாகும்; முதலாளித்துவ ஏகாதிபத்தியத்துக்கு எதிரான சோஷலிச நடைமுறைத் தந்திரத்தின் கோட்பாடுகள் முற்றிலும் வேறொரு விவகாரமாகும்—சமூக-ஜனநாயகச் செய்தியேடுகளின் பத்து லட்சக்கணக்கான பிரதிகளிலும் அகிலத்தின் தீர்மானத்திலும் இக்கோட்பாடுகள் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. சோஷலிசக் கட்சிகளானவை போராடும் பாட்டாளி வர்க்கத்தின் ஸ்தாபனங்களாகுமே அன்றி, வாக்குவாதங்கள் நடத்திச் செல்வதற்கான பட்டி மன்றங்கள் அல்ல; சில படைப்பிரிவுகள் எதிரியின் பக்கம்

சேர்ந்து கொண்டு விட்ட போது, அவற்றின் பெயர் களைக் குறிப்பிட்டு அவற்றைத் துரோகிகளென நிந்தனை செய்தாக வேண்டும். ''ஏகாதிபத்தியத்தை எல்லோரும் ஒரு மாதிரியாகப் புரிந்து கொள்ளவில்லை'' என்றும் தேசியவெறியர் காவுத்ஸ்கியும் தேசியவெறியர் குனோ வும் இதைப் பற்றி பல தொகுதிகளில் நூல்கள் எழுதிச் செல்ல முடிகிறது என்றும் இப்பிரச்சினை போதுமான அளவுக்கு விவாதிக்கப்படவில்லை என்றும் இன்ன பல வாறாகவும் கூறப்படும் வஞ்சகக் கூற்றுகளால் நாம் ஏமாற்றப்படுவதற்கு இடம் தரலாகாது. முதலாளித்துவ மானது அதன் கொள்ளைக்காரத் தன்மையின் எல்லா வெளிப்பாடுகளிலும், அதன் வரலாற்று வளர்ச்சியிலும் தேசிய இயல்புகளிலுமான மிகமிக நுட்பமான எல்லாக் கிளைப் பிரிவுகளிலும் முற்றாகவும் ஒன்று விடாமலும் ஆராயப்படுதல் ஒருபோதும் முடிவடையப் போவதில்லை. அறிஞர்கள் (முக்கியமாகப் பகட்டுப் புலமையாளர்கள்) விவரங்கள் குறித்து வாதம் புரிவது ஒருபோதும் முடி வடையப் போவதில்லை. இக்காரணங்களை முன்வைத்து முதலாளித்துவத்துக்கு எதிரான சோஷலிசப் போராட் டத்தைக் கைவிடுதலும் அந்தப் போராட்டத்துக்குத் துரோகமிழைப்போரை எதிர்க்காமல் இருப்பதும் நகைக்கத் தக்கதாகிவிடும். ஆனால் காவுத்ஸ்கியும் குனோ வும் அக்செல்ரோதும் இவர்களைப் போன்றோரும் நம்மைச் செய்யச் சொல்வது இதுவே அன்றி வேறென்ன?

யுத்தம் மூண்டெழுந்துவிட்ட இந்த நேரத்தில் பாஸெல் தீர்மானத்தைப் பரிசீலிக்கவும் அது தவறான தென்று நிரூபிக்கவும் யாரும் முயலவும்கூட இல்லை.

2

யுத்தமானது புரட்சிகரச் சூழ்நிலையை உண்டாக்கு மென்று எதிர்பார்த்துத்தான் நேர்மையான சோஷலிஸ்டு கள் பாஸெல் தீர்மானத்தை ஆதரித்தனர் என்றும், ஆனால் புரட்சி சாத்தியமற்றதாகி விடவே நிகழ்ச்சிகள் அவர்களை மறுதலித்து ஓடச் செய்தன என்றும் கொள்ள லாமா?

இம்மாதிரியான குதர்க்கவாதத்தைக் கையாண்டுதான் குனோவ் (கட்சியின் தகர்வா? என்னும் வெளியீட்டிலும்

வரிசையாகப் பல கட்டுரைகளிலும்) முதலாளி வர்க்க முகாமுக்குத் தாம் ஓடியதற்கு நியாயம் கூற முயன்றுள்ளார். காவுத்ஸ்கியின் • தலைமையிலுள்ள அனேகமாக ஏனைய எல்லா சமூக-தேசியவெறியர்களின் எழுத்துகளிலும் இதையொத்த ''வாதங்கள்தான்'' சூசகமாகக் குறிப்பிடப்படுகின்றன. புரட்சி வருமென்ற நம்பிக்கைகள் வெற்றுப் பிரமைகளாகி விட்டன, பிரமைகளுக்காகப் போராடுவது மார்க்சியவாதிக்குரிய செயலல்ல என்று வாதாடுகிறார் குனோவ். ஆனால் பாஸெல் அறிக்கையில் கையொப்பமிட்டவர்கள் எல்லோருக்கும் இந்தப் ''பிரமைகளில்'' பங்குண்டு என்பது குறித்து இந்த ஸ்துரூவேவாதி[16] ஒரு வார்த்தைகூட கூறக் காணோம். தாம் அப்பழுக்கில்லா நேர்மையாளர் என்பதாகப் பாவனை செய்து கொண்டு, பெனெக்குக்கையும் ராதெக்கையும் போன்ற அதிதீவிர இடதுசாரியினரையே குற்றம் கூற வேண்டும் என்கிறார்!

பாஸெல் அறிக்கையைத் தயாரித்தவர்கள் புரட்சி வருமென்று மனப்பூர்வமாக எதிர்பார்த்தனர், ஆனால் நிகழ்ச்சிகள் அவர்களை மறுதலித்து ஓடச் செய்தன என்ற வாதத்தின் கருப்பொருளைப் பரிசீலித்துப் பார்ப்போம். பாஸெல் அறிக்கை கூறுவதாவது: 1) யுத்தமானது பொருளாதார, அரசியல் நெருக்கடியை உண்டாக்கும்; 2) தொழிலாளர்கள் தாம் யுத்தத்தில் பங்கு கொள்வது குற்றமாகுமென்றும், ''முதலாளிகளுடைய லாபத்துக்காகவும் அரசவம்ச சிறப்புக்காகவும் இரகசியமான ராஜதந்திர ஒப்பந்தங்களின் நிறைவேற்றத்துக்காகவும் தாம் ஒருவரையொருவர் சுட்டுக் கொன்று கொள்வது'' கொடுங் குற்றமே ஆகுமென்றும் கருதுவார்கள்; யுத்தமானது தொழிலாளர்களிடத்தே ''ஆத்திரத்தையும் கலகத்தையுமே'' எழச் செய்யும்; 3) இந்த நெருக்கடியையும் தொழிலாளர்களது இந்த மனப்பாங்கையும் பயன்படுத்தி ''மக்களைத் தட்டியெழுப்புவதும் முதலாளித்துவத்தின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்துவதும்'' சோஷலிஸ்டுகளுடைய கடமையாகும்; 4) யுத்தத்தைத் துவக்குவதன் மூலம் விதிவிலக்கின்றி எல்லா ''அரசாங்கங்களும்'' தமக்குப் ''பேரபாயத்தை விளைவித்துக் கொள்ளவே செய்யும்''; 5) அரசாங்கங்கள் ''பாட்டாளி வர்க்கப் புரட்சி குறித்து அஞ்சுகின்றன'';

6) அரசாங்கங்கள் பாரிஸ் கம்யூனை (அதாவது உள்நாட்டு யுத்தத்தை), 1905ஆம் ஆண்டு ருஷ்யப் புரட்சியை, இன்ன பிறவற்றை ''நினைவில் கொண்டிருக்க வேண்டும்.'' இவை யாவும் தெட்டத்தெளிவான கருத்துகள். இவை உண்மை நிலைகளும் போக்குகளும் கறாராகக் குணநிர்ணயம் செய்யப்பட வேண்டுமென வலியுறுத்துகின்றனவே ஒழிய, புரட்சி ஏற்பட்டுவிடுமென்று உத்தரவாதம் செய்ய வில்லை. இந்தக் கருத்துகள், வாதங்கள் குறித்துப் பேசுகையில், எதிர்பார்க்கப்பட்ட புரட்சியானது வெறும் பிரமையாகி விட்டதெனக் கூறுகிறவர் எவரும் புரட்சி யைப் பொறுத்தவரை மார்க்சியவாதிக்குரிய போக்கை வெளியிடவில்லை, ஸ்துரூவேவாத, போலீஸ்-ஒடுகாலிக் குரிய போக்கையே வெளியிடுகின்றார்.

புரட்சிகரச் சூழ்நிலை இல்லையேல் புரட்சி சாத்திய மன்று, அதேபோது புரட்சிகரச் சூழ்நிலை ஒவ்வொன்றும் புரட்சியை எழச் செய்ய வேண்டுமென்பதும் இல்லை— மார்க்சியவாதிக்கு இது மறுக்க முடியாத ஒன்று. பொது வாகப் பேசும் பொழுது, புரட்சிகரச் சூழ்நிலை என்பதற் கான அறிகுறிகள் யாவை? எந்தத் தவறும் இழைக்கவில்லை என்ற நிச்சயத்துடன் நாம் பின்வரும் மூன்று பிரதான அறிகுறிகளைக் குறிப்பிடலாம்: 1) ஆதிக்கம் செலுத்தும் வர்க்கங்கள் தமது ஆதிக்கத்தை எந்த மாற்றமுமின்றி தொடர்ந்து நடத்திச் செல்வது சாத்தியமற்றதாகுதல்; ''மேல் வர்க்கங்களிடையே'' ஏதேனும் ஒரு வடிவத்தில் நெருக்கடி ஏற்பட்டு, ஆதிக்கம் செலுத்தும் வர்க்கத்தி னுடைய கொள்கை நெருக்கடிக்கு உள்ளாகி, இதன் விளைவாக வெடிப்பு உண்டாகி, ஒடுக்கப்பட்ட வர்க்கங் களுடைய அதிருப்தியும் ஆத்திரமும் இவ்வெடிப்பின் வழியே பீறிட்டெழுதல். புரட்சி நடைபெறுவதற்கு, பழைய வழியில் வாழ ''அடிமட்ட வர்க்கங்கள் விரும் பாதது'' மட்டும் சாதாரணமாகப் போதாது; பழைய வழியில் வாழ ''மேல் வர்க்கங்களுக்கு முடியாமற் போவ தும்'' அவசியமாகும். 2) ஒடுக்கப்படும் வர்க்கங்களுடைய துன்பதுயரமும் வறுமையும் வழக்கமாக இருப்பதைக் காட்டிலும் அதிகக் கடுமையாகி விடுதல்; 3) மேற்கண்ட காரணங்களின் விளைவாக மக்கள் பெருந்திரளினரது செயற்பாடு கணிசமாக அதிகரித்து விடுதல்; மக்கள்

பெருந்திரளினர் ''சமாதான காலத்தில்'' தாம் சூறையாடப்படுவதற்கு மறுப்பு இல்லாமலே இடமளிப்பவர்களாயினும், கொந்தளிப்பான காலங்களில், வரலாறு படைக்க வல்ல சுயேச்சைச் செயலில் இறங்கும்படி நெருக்கடி நிலைமைகள் எல்லாவற்றாலும் மற்றும் ''மேல் வர்க்கங்களாலும்கூட'' இழுத்து விடப்படுகிறார்கள்.

தனிப்பட்ட கோஷ்டிகள், கட்சிகளின் சித்தத்தை மட்டுமின்றி, தனிப்பட்ட வர்க்கங்களின் சித்தத்தையும் சார்ந்திராத இந்தப் புறநிலை மாறுதல்கள் இல்லாமல், பொதுவாகப் புரட்சி சாத்தியமன்று. இந்தப் புறநிலை மாறுதல்கள் யாவும் சேர்ந்த ஒட்டுமொத்தமே புரட்சிகரச் சூழ்நிலை எனப்படுவது. இப்படிப்பட்ட சூழ்நிலை ருஷ்யாவில் 1905இலும் மேலைய நாடுகளில் புரட்சிகரக் காலகட்டங்கள் யாவற்றிலும் நிலவிற்று; மற்றும் ஜெர்மனியில் கடந்த நூற்றாண்டின் அறுபதாம் ஆண்டுகளிலும் ருஷ்யாவில் 1859—1861இலும் 1879—1880இலும் இந்தச் சூழ்நிலை நிலவிற்று என்றாலும்கூட இச்சந்தர்ப்பங்களில் புரட்சி ஏற்படவில்லை. காரணம் என்ன? காரணம் என்னவென்றால், புரட்சிகரச் சூழ்நிலை ஒவ்வொன்றும் புரட்சியை உருவாக்கி விடுவதில்லை. மேற்கூறிய புறநிலை மாறுதல்களுடன் கூடவே அகநிலை மாறுதலும் இருக்கும்படியான ஒரு சூழ்நிலையில் மட்டும்தான், அதாவது பழைய அரசாங்கத்தைத் தகர்க்கும்படி (அல்லது சீர்குலைக்கும்படி) போதிய அளவுக்கு பலம் படைத்த புரட்சிகர வெகுஜனச் செயலை மேற்கொள்வதற்குப் புரட்சிகர வர்க்கம் ஆற்றலுடையதாக இருக்கின்ற ஒரு சூழ்நிலையில் மட்டும்தான்—பழைய அரசாங்கம் ''கவிழ்க்கப்படாத'' வரை, நெருக்கடியான காலகட்டத்திலும்கூட அது ''விழுந்துவிடாமல்'' இருந்து கொண்டுதான் இருக்கும்—புரட்சி உருவாக முடியும்.

இவைதாம் புரட்சியைப் பற்றிய மார்க்சியக் கருத்தோட்டங்கள். இவை மிகப் பல தடவை தெளிவாக எடுத்துரைக்கப்பட்டவை; மறுக்க முடியாதனவாக எல்லா மார்க்சியவாதிகளாலும் ஏற்கப்பட்டவை; ருஷ்யர்களாகிய நமக்கு 1905ஆம் ஆண்டின் அனுபவத்தால் குறிப்பான அளவுக்கு சிறப்பாக மெய்ப்பித்துக் காட்டப்பட்டவை. அப்படியானால், 1912இல் பாஸெல் அறிக்கை

இது சம்பந்தமாக ஊகித்துக் கொண்டது என்ன? 1914—1915இல் நடைபெற்றது என்ன?

''பொருளாதார, அரசியல் நெருக்கடி'' என்று அது சுருக்கமாகக் குறிப்பிட்ட புரட்சிகரச் சூழ்நிலை எழுமென்று பாஸெல் அறிக்கை ஊகித்தது. இம்மாதிரியான சூழ்நிலை எழுந்துள்ளதா, இல்லையா? சந்தேகத்துக்கு இடமின்றி எழுந்துதான் உள்ளது. குனோவ், காவுத்ஸ்கி, பிளெஹானவ் முதலான எத்தர்களைக் காட்டிலும் கபடமின்றியும் பகிரங்கமாகவும் நேர்மையோடும் தேசிய வெறியை ஆதரித்து வாதாடும் சமூக-தேசியவெறியர் லென்ச் பின்வருமாறு கூறுமளவுக்குச் செல்கிறார்: ''இப்போது நாம் கடந்து செல்வது ஒரு வகைப் **புரட்சியே** ஆகும்'' (அவரது பிரசுரமான **ஜெர்மன் சமூக-ஜனநாயகமும் யுத்தமும்**, பெர்லின், 1915, பக்கம் 6). அரசியல் நெருக்கடி நிலவுகிறது; எந்த அரசாங்கத்துக்கும் நாளை என்ன ஆகும் என்ற உறுதிப்பாடு இருக்கவில்லை; நிதித்துறை நொடிப்பு, பிரதேச இழப்பு, நாட்டிலிருந்து வெளியேற்றப்படுதல் (பெல்ஜிய அரசாங்கம் வெளியேற்றப்பட்டது போல) ஆகிய அபாயங்களின்றி எந்த அரசாங்கமும் பாதுகாப்புடன் இருக்கவில்லை. எல்லா அரசாங்கங்களும் எரிமலையின் மீது அமர்ந்திருக்கின்றன. மக்கள் பெருந்திரளினர் முன்முயற்சியும் வீரமும் வெளிப்படுத்திக் காட்ட வேண்டுமென்று இந்த அரசாங்கங்கள் யாவும் தாமே அறைகூவி வருகின்றன. ஐரோப்பாவின் அரசியல் ஆட்சியமைப்பு முழுதுமே ஆட்டங்கண்டு விட்டது. மாபெரும் அரசியல் கொந்தளிப்புகளுக்கான ஒரு காலத்துக்குள் நுழைந்துள்ளோம் (மேலும் மேலும் ஆழமாக மூழ்கும்படி இதனுள் செல்கின்றோம்—இத்தாலியானது யுத்தப் பிரகடனம் செய்திருக்கும் நாளன்று இதை எழுதுகிறேன்), யாரும் இதை மறுப்பதற்கில்லை. யுத்தம் பிரகடனமாகி இரண்டு மாதங்களுக்குப் பிறகு காவுத்ஸ்கி பின்வருமாறு எழுதினார் (1914 அக்டோபர் 2ந் தேதி, *Die Neue Zeit*[17]): ''யுத்தம் தொடங்கும் நேரத்தில் இருப்பது போல் வேறு எந்த நேரத்திலும் அரசாங்கங்கள் இவ்வளவு வலு மிக்கனவாகவும் கட்சிகள் இவ்வளவு வலுவற்றனவாகவும் இருப்பதில்லை''. வரலாற்று விஞ்ஞானம் பொய்யாகத் திரித்துப் புரட்டப்படுவதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

ஸமூடேக்கும்களையும் ஏனைய சந்தர்ப்பவாதிகளையும் திருப்தி செய்வதற்காக காவுத்ஸ்கி இப்படித் திரித்துப் புரட்டுகின்றார். முதலாவதாக, யுத்த காலத்தில் தேவையாக இருப்பது போல வேறு எந்தக் காலத்திலும் அரசாங்கங்களுக்கு ஆதிக்கம் செலுத்தும் வர்க்கங்களது எல்லாக் கட்சிகளுக்குமிடையே உடன்பாடு நிலவுவதோ, ஒடுக்கப்படும் வர்க்கங்கள் ''அமைதியாக'' அந்த ஆதிக்கத்திற்குக் கீழ்ப்பட்டிருப்பதோ தேவையாக இருப்பதில்லை. இரண்டாவதாக, ''யுத்தம் தொடங்கும் போது''—முக்கியமாக விரைவில் வெற்றி கிட்டுமென்று எதிர்பார்க்கும் ஒரு நாட்டில்—அரசாங்கம் எல்லாம் வல்ல சக்தி வாய்ந்ததாகத் தோன்றிய போதிலும், புரட்சிகரச் சூழ்நிலை ஏற்படுவதற்குரிய வாய்ப்புகளை உலகில் யாருமே ஒரு போதும் யுத்தத்தின் ''தொடக்கத்துடன்'' மட்டுமே இணைந்தவையாகக் கொண்டதில்லை; தவிரவும் ''தோற்றத்தை'' உண்மை நிலைக்கு முழுதொத்ததாக யாரும் கொள்வது இன்னும்கூட அரிதாகும்.

ஐரோப்பிய யுத்தமானது கடந்த காலம் கண்ட எந்த யுத்தத்தையும் விடக் கொடூரமானதாக இருக்கும் என்பது எல்லோரும் அறிந்தும் கண்ணுற்றும் ஏற்றுக் கொண்டும் வந்ததுதான். யுத்தத்தின் அனுபவம் மேலும் மேலும் கண்கூடாக இதனை மெய்ப்பித்து வருகிறது. யுத்தத் தீ பல்கிப் பரவிச் செல்கிறது. ஐரோப்பாவின் அரசியல் அடித்தளங்கள் மேன்மேலும் ஆட்டிக் குலுக்கப்படுகின்றன. மக்கள் பெருந்திரளினரது துன்பதுயரங்கள் சொல்லும் தரமற்றவை. அரசாங்கங்களும் முதலாளி வர்க்கத்தாரும் சந்தர்ப்பவாதிகளும் இந்தத் துன்பதுயரங்களை மூடி மறைப்பதற்காகச் செய்யும் முயற்சிகள் மேன்மேலும் பயனற்றுப் போகின்றன. முதலாளிகளில் சில தொகுதியோருக்குக் கிடைக்கும் யுத்த இலாபங்கள் அசுரத்தனமாக உயர்ந்து, முரண்பாடுகள் அளவு கடந்து கடுமையாகி வருகின்றன. மக்கள் பெருந்திரளினரிடம் அதிகமாகி வரும் ஆத்திரக் கனல், மிதித்துத் துவைக்கப்பட்டு, அறியாமை இருளில் வதையும் சமுதாயப் பகுதிகளிடையே அருளார்ந்த (''ஜனநாயக'') சமாதானம் வேண்டுமென்று மேலோங்கி வரும் தெளிவற்ற ஏக்கம், ''அடிமட்ட வர்க்கங்களிடையே'' தோன்ற ஆரம்பித்திருக்கும் அதிருப்தி

—ஆகிய இவை யாவும் கண்கூடான உண்மைகள். யுத்தம் மேலும் மேலும் நீடித்தும் கடுமையாகியும் செல்லச் செல்ல, மக்கள் பெருந்திரளினரது செயற்பாட்டை அரசாங்கங்கள் தாமே மேலும் மேலும் ஊக்குவிக்கின்றன—ஊக்குவித்தே ஆக வேண்டியிருக்கிறது; மக்கள் பெருந்திரளினரை அளவு மீறிய முயற்சியை மேற்கொள்ளும்படி, அனைத்தையும் தியாகம் செய்யும்படி அறைகூவி அழைக்கின்றன. யுத்த அனுபவமானது வரலாற்றின் எந்த நெருக்கடியின், மனித வாழ்வில் எந்தப் பெரிய விபத்தின், எந்தத் திடீர்த் திருப்பத்தின் அனுபவத்தையும் போலவே, சில பேரைக் கதி கலங்க வைத்து ஒடிந்து விழச் செய்கிறது, ஆனால் ஏனையோரை அறிவொளி பெற வைத்துப் பதமடைந்து உறுதியுறச் செய்கிறது. ஒட்டுமொத்தமாகப் பார்க்கையில், அனைத்து உலக வரலாற்றையும் கருதுகையில், இரண்டாவது வகையினரின் எண்ணிக்கையும் பலமும்—இந்த அல்லது அந்த அரசின் சரிவும் வீழ்ச்சியுமான தனிப்பட்ட சில உதாரணங்களைத் தவிர்த்து—முதலாவது வகையினரின் எண்ணிக்கையையும் பலத்தையும் காட்டிலும் அதிகமாகும் என்பது தெளிவு.

சமாதானம் முடிக்கப்படுவதால் இந்த இன்னல்கள் யாவற்றுக்கும் முரண்பாடுகள் எல்லாம் இப்படி மும்முரமாகிச் செல்வதற்கும் ''உடனடியாக'' முற்றுப்புள்ளி வைக்கப்பட்டு விடாது; மாறாக, மக்களின் மிகவும் பிற்பட்ட திரளினரை அது இந்த இன்னல்களைப் பல விதத்திலும் மேலும் கூர்மையாகவும் உடனடியாகவும் உணர்ந்து கொள்ளவே செய்யும்.

சுருங்கக் கூறினால், மிகப் பெரும்பாலான ஐரோப்பாவின் வல்லரசுகளிலும் முன்னணி நாடுகளிலும் புரட்சிகரச் சூழ்நிலையே இருந்து வருகிறது. இவ்விதம், பாஸெல் அறிக்கை முன்னறிந்து கூறியதானது முழு அளவில் மெய்ப்பிக்கப்பட்டு ஊர்ஜிதமாகியுள்ளது. நேரடியாகவோ, மறைமுகமாகவோ இந்த உண்மையை மறுப்பதும், குனோவ், பிளெஹானவ், காவுத்ஸ்கி, இவர்களைச் சேர்ந்தோர் செய்திருப்பது போல் இவ்வுண்மையைக் கவனியாது புறக்கணிப்பதும் அபாண்டப் பொய்யைச் சொல்லித் தொழிலாளி வர்க்கத்தை ஏமாற்றுவதே ஆகும்; முதலாளி வர்க்கத்தாருக்குத் தொண்டூழியம் புரிவதே ஆகும். புரட்சி

யைக் கண்டு அஞ்சுவோர்—அற்பவாதக் கிறிஸ்துவப் பாதிரிமார்களும் இராணுவத் தலைமை அலுவலர்களும் கோடீஸ்வரர்களது செய்தியேடுகளும்—ஐரோப்பாவில் புரட்சிகரச் சூழ்நிலைக்கான அறிகுறிகள் உள்ளன என்று ஒத்துக்கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருப்பதை நிரூபிக்கும் உண்மைகளை சோத்சியால்-டெமக்ராத் ஏட்டில் (இதழ்கள் 34, 40, 41)[18] நாம் எடுத்துரைத்தோம்.

இந்தச் சூழ்நிலை அதிக காலத்துக்கு நீடிக்குமா? இன்னும் இது எவ்வளவு கடுமையை அடையும்? இது புரட்சிக்கு இட்டுச் செல்லுமா? இவற்றை நாம் அறியோம், யாராலும் அறியவும் முடியாது. புரட்சிகர உணர்வினது வளர்ச்சியின் போதும் முன்னணி வர்க்கமான பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரச் செயல் கட்டத்துக்கான மாற்றம் ஏற்படும் போதும் கிடைக்கப்பெறும் அனுபவத்தால் மட்டுமே இதற்குப் பதிலளிக்க முடியும். இது சம்பந்தமான ''பிரமைகள்'' குறித்தோ, அவற்றை நிராகரிப்பது குறித்தோ பேசுவதற்கு இடமில்லை; ஏனெனில் எந்த சோஷலிஸ்டாலும் இந்த யுத்தம் (அடுத்தது அல்ல), இன்றைய புரட்சிகரச் சூழ்நிலை (நாளையது அல்ல புரட்சியை உண்டாக்கிவிடுமென ஒருபோதும் அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. எல்லா சோஷலிஸ்டுகளுக்குமுள்ள மறுக்க முடியாத அடிப்படைக் கடமையையே நாம் விவாதிக்கிறோம்—புரட்சிகரச் சூழ்நிலை இருப்பதை மக்கள் பெருந்திரளினருக்குப் புலப்படச் செய்தல், அதன் வீச்சையும் ஆழத்தையும் விளக்கிக் கூறுதல், பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர உணர்வினையும் புரட்சிகர வைராக்கியத்தையும் தட்டியெழுப்புதல், புரட்சிகரச் செயலில் இறங்கும் நிலைக்கு முன் செல்ல அதற்கு உதவுதல், இதன் பொருட்டு புரட்சிகரச் சூழ்நிலைக்கு ஏற்ற ஸ்தாபனங்களை அமைத்திடுதல் ஆகிய இந்தக் கடமையையே நாம் விவாதிக்கிறோம்.

இதுவே சோஷலிசக் கட்சிகளுக்குரிய கடமை என்பதை செல்வாக்கு படைத்த மற்றும் பொறுப்புணர்ச்சி கொண்ட எந்த சோஷலிஸ்டும் ஒருபோதும் சந்தேகிக்கத் துணிந்ததில்லை. பாஸெல் அறிக்கை சிறிதளவும் ''பிரமைகளைப்'' பரப்பவோ, அவற்றுக்கு இடமளிக்கவோ முற்படாமல், சோஷலிஸ்டுகளின் முன்னுள்ள இந்தக் கடமை

யைத் திட்டவட்டமாக எடுத்துரைத்துக் கூறுகிறது: மக்களைத் தட்டியெழுப்பிக் கிளர்த்தி விட வேண்டும் (பிளெஹானவும் அக்செல்ரோதும் காவுத்ஸ்கியும் செய்து வந்திருப்பது போலத் தேசியவெறியை ஊட்டி மக்களைத் தூங்க வைப்பதல்ல), முதலாளித்துவத்தின் வீழ்ச்சியைத் ''துரிதப்படுத்துவதற்காக'' நெருக்கடியைப் ''பயன்படுத்த'' வேண்டும், கம்யூன்[19], 1905 அக்டோபர்—டிசம்பர்[20] ஆகிய உதாரணங்களைத் தமக்கு வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும். தற்போதுள்ள கட்சிகள் இந்தக் கடமையை நிறைவேற்றத் தவறியது இக்கட்சிகளின் துரோகத்தை, இவற்றின் அரசியல் மரணத்தை, தமக்குரிய பாத்திரத்தைத் துறந்து விட்டு இவை முதலாளி வர்க்கத்தின் பக்கத்துக்கு ஓடி விட்டதைக் குறிக்கிறது.

### 3

ஆனால் இரண்டாவது அகிலத்தின் மிக முக்கிய பிரதிநிதிகளும் தலைவர்களும் சோஷலிசத்துக்குத் துரோகம் செய்த இந்நிகழ்ச்சி நடைபெற முடிந்தது எப்படி? இந்தப் பிரச்சினையை விவரமாகப் பின்னர் ஆராய்வோம். இதன் முன் இந்தத் துரோகத்துக்குத் ''தத்துவார்த்த'' நியாய விளக்கம் தருவதற்காகச் செய்யப்படும் முயற்சிகளை முதற்கண் பரிசீலிப்போம். சமூக-தேசியவெறியின் பிரதான தத்துவங்களைக் குணநிர்ணயம் செய்ய முயலுவோம். பிளெஹானவையும் (பிரதானமாக ஆங்கிலேய-பிரெஞ்சு தேசியவெறியர்கள், ஹைண்ட்மன், அவரது புதிய ஆதரவாளர்கள் ஆகியோரது வாதங்களையே இவர் திருப்பிக் கூறி வலியுறுத்துகிறார்), காவுத்ஸ்கியையும் (பன்மடங்கு அதிக ''நுண்ணயம் வாய்ந்த'', அதிக அளவுக்குத் தத்துவார்த்த ஆழமுடையதாகத் தோற்றமளிக்கும் வாதங்களை இவர் முன்வைக்கிறார்) இந்தத் தத்துவங்களின் பிரதிநிதிகளாகக் கருதலாம்.

இவற்றுள் முதிர்ச்சித் தரத்தில் மிக மட்டமாக இருப்பது, ''ஆரம்பித்தது யார்?'' என்னும் தத்துவம். இதைப் பின்வருமாறு விரித்துரைக்கலாம்: நாங்கள் தாக்குதலுக்கு உள்ளானோம், தற்காத்துக் கொள்கிறோம்; ஐரோப்பாவில் சமாதானத்துக்குக் குந்தகம் விளைவித்தவர்களைச்

சரியானபடி எதிர்த்தாக வேண்டும், பாட்டாளி வர்க்கத்தின் நலன்கள் இதைக் கோருகின்றன. எல்லா அரசாங்கங்களும் வெளியிட்டிருக்கும் பிரகடனங்களையும் உலகெங்குமுள்ள பூர்ஷ்வா மற்றும் சாக்கடைப் பத்திரிகைகள் எழுப்பும் கூப்பாடுகளையும் திரட்டித் திருப்பிக் கூறுவதே ஆகும் இது. இழிவார்ந்த இந்த அபத்தத்துக்கும்கூட பிளெஹானவ் ''இயக்கவியலைப்'' பற்றிய அவரது தவிர்க்கவொண்ணாத ஏமாற்றுச் சுட்டுரைகளைக் கொண்டு மேற்பூச்சிட்டுச் சிங்காரிக்கிறார்: ஸ்தூலமான சூழ்நிலையை நாம் மதிப்பீடு செய்ய வேண்டுமானால், அதை ஆரம்பித்தவர் யாரென்று முதலில் கண்டுபிடித்து அவரை தண்டிக்க வேண்டும்; ஏனைய எல்லாப் பிரச்சினைகளும் வேறொரு சூழ்நிலை எழும் வரை காத்திருக்கவே வேண்டும். (**யுத்தம்** பாரிஸ், **1914** என்ற பிளெஹானவின் பிரசுரத்தையும் இதன் வாதங்களை அப்படியே திருப்பிக் கூறி **கோலஸ்**[21] இதழ் 86இலும் 87இலும் அக்செல்ரோத் எழுதுவதையும் பார்க்க.) இயக்கவியலை அகற்றிவிட்டு அதற்குப் பதில் குதர்க்கவாதத்தைக் கைக்கொள்ளும் உன்னத காரியத்தில் பிளெஹானவ் ஒரு புதிய சாதனையைக் கண்டிருக்கிறார். குதர்க்கவாதி பல ''வாதங்களில்' ஒன்றைத் தாவிப் பற்றிக் கொண்டு விடுகிறார். உலகில் எதை வேண்டுமானாலும் நிரூபிப்பதற்கு ''வாதங்களைத்'' தேடிப் பிடிக்க முடியுமென்று நெடுங் காலத்துக்கு முன்பே ஹெகல் மிகவும் பொருத்தமாகக் கூறினார். இயக்கவியலானது, குறிப்பிட்ட எந்தவொரு சமூக நிகழ்வு குறித்தும் அதன் வளர்ச்சியினூடே பன்முக ஆய்வு அவசியம் என்கிறது; புறத்தமைந்தவையும் வெளித்தோற்றமானவையும் அடிப்படை இயக்கு சக்திகளாக, உற்பத்திச் சக்திகளது வளர்ச்சியாக, வர்க்கப் போராட்டமாகக் குறுக்கிச் சுருக்கப்பட வேண்டும் என்கிறது. பிளெஹானவ் ஒரு மேற்கோளை ஜெர்மன் சமூக-ஜனநாயகப் பத்திரிகைகளிலிருந்து பிய்த்தெடுக்கிறார்: ஆஸ்திரியாவும் ஜெர்மனியும் ''ஆரம்பித்தன'' என்று யுத்தத்துக்கு முன்பே ஜெர்மானியர்களே ஒத்துக்கொள்கிறார்களே, பாருங்கள் இதை என்கிறார் அவர். கலீஷியாவையும் அர்மீனியாவையும் மற்றவற்றையும் பிடித்துக் கொள்வதற்கான ஜாரிஸ்டுத் திட்டங்களை ருஷ்ய சோஷலிஸ்டுகள் திரும்பத் திரும்ப

ஒன்றுகலந்துவிட்டது. இந்த வகுப்பினை மதித்துப் பாராட்டு வதற்கும் இதைத் ''தகவமைத்துக்'' கொள்வதற்கு மான முழுத் திறனும் தனக்கு உண்டென்பதை முதலாளி வர்க்கம் நிரூபித்துக் காட்டியுள்ளது. வரலாற்றின் நடையைத் திருப்பிவிடவோ, தடுத்து நிறுத்தவோ முடியாது— அச்சமின்றி நாம் முன்னோக்கிச் செல்ல முடியும், செல்லவும் வேண்டும். சந்தர்ப்பவாதத்தின் பிடியிலுள்ள தயாரிப்பு நிலையிலான சட்டபூர்வத் தொழிலாளி வர்க்க ஸ்தாபனங்களிலிருந்து, சட்டபூர்வ நிலைக்குள் தம்மைக் கட்டுப் படுத்தி இருத்திக் கொண்டுவிடக் கூடாது என்பதை அறிந்தவையும் சந்தர்ப்பவாதத் துரோகத்திலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் வல்லமை வாய்ந்தவையுமாகிய புரட்சிகர ஸ்தாபனங்களுக்கு, ''ஆட்சியதிகாரத்துக்கான போராட்டத்தை'', முதலாளி வர்க்கத்தை வீழ்த்துவதற்கான போராட்டத்தை ஆரம்பித்து வரும் பாட்டாளி வர்க்கத்துக்கு உரித்தான ஸ்தாபன நிலைக்கு நாம் முன்னோக்கிச் செல்ல முடியும், செல்லவும் வேண்டும்.

கெட்டு, பிளெஹானவ், காவுத்ஸ்கி முதலானோரைப் போன்ற இரண்டாவது அகிலத்தின் தகுதி மிக்க மேலவர்களை என்ன செய்வதென்ற பிரச்சினையைக் கொண்டு தமது சிந்தனையை மட்டுமின்றி, தொழிலாளர்களது சிந்தனையையும் குழப்புகிறவர்களது கருத்தோட்டங்கள் எவ்வளவு தவறானவை என்பதை இடையில் இங்கு குறிப்பிடலாம். உண்மையில் இம்மாதிரியான பிரச்சினை எதுவும் எழவில்லை. இந்த நபர்கள் புதிய கடமைகளைப் புரிந்து கொள்ளத் தவறினால், இவர்கள் ஒதுங்கிச் சென்றாக வேண்டும், அல்லது தற்போது அவர்கள் இருப்பது போல் சந்தர்ப்பவாதிகளது கைதிகளாகவே தொடர்ந்து இருந்து வர வேண்டும். இந்த நபர்கள் ''கைதி நிலையிலிருந்து'' தம்மை விடுவித்துக் கொள்வார்களானால், புரட்சியாளர்களது முகாமுக்கு இவர்கள் திரும்பி வந்து சேர்வதற்குத் தடங்கலான அரசியல் முட்டுக்கட்டைகள் இருக்கப் போவதில்லை. எப்படியும் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் போக்குகளுக்கு இடையிலான போராட்டத்தையும் இவ்வியக்கத்தின் புதிய காலகட்டத்தையும் பற்றிய பிரச்சினைக்குப் பதிலாக தனிநபர்களது பாத்திரத்தைப் பற்றிய பிரச்சினையை எழுப்பிக் கொண்டிருப்பது அபத்தமே அன்றி வேறல்ல.

இரண்டாவது அகிலத்தின் காலத்தில் சட்டபூர்வமான தொழிலாளி வர்க்க வெகுஜன ஸ்தாபனங்கள் சோஷலிசக் கட்சிகளுக்குரிய மிக முக்கிய இயல்பாக இருந்தன எனலாம். ஜெர்மன் கட்சியில் அவை மிகவும் பலமானவையாக இருந்தன. இக்கட்சியில்தான் 1914—1915ஆம் ஆண்டு யுத்தம் மிகக் கடுமையான மாற்றத்தை உண்டாக்கி, பிரச்சினையை மிகவும் அவசர அவசியமான ஒன்றாக்கியது. புரட்சிகரச் செயற்பாடுகள் துவக்கப்பட்டிருந்தால், சட்டபூர்வமான இந்த ஸ்தாபனங்கள் போலீசால் கலைக்கப்படுவதில்தான் போய் முடிந்திருக்கும் என்பது தெளிவு; பழைய கட்சி—லேகினிலிருந்து காவுத்ஸ்கி வரை—தற்போதுள்ள சட்டபூர்வமான ஸ்தாபனங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரக் குறிக்கோள்களைப் பலிகொடுத்தது. இதனை மறுக்க எவ்வளவுதான் முயற்சி செய்யப்பட்ட போதிலும், இதுவேதான் உண்மை. புரட்சி செய்வதற்குப் பாட்டாளி வர்க்கத்துக்குள்ள உரிமையானது அற்ப சுகத்துக்காக—தற்போதுள்ள போலீஸ் சட்டத்தால் அனுமதிக்கப்படும் ஸ்தாபனங்களுக்காக—விற்கப்பட்டது.

ஜெர்மன் சமூக-ஜனநாயகத் தொழிற்சங்கங்களின் தலைவர் கார்ல் லேகின் எழுதிய **உட்கட்சி வாழ்வில் தொழிற்சங்க அலுவலர்கள் அதிக செயல் முனைப்பான பங்கு ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்?** (பெர்லின், 1915) என்ற பிரசுரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். 1915 ஜனவரி 27இல் நடைபெற்ற தொழிற்சங்க அலுவலர்களது கூட்டத்தில் இவ்வாசிரியர் நிகழ்த்திய உரையாகும் இது. லேகின் இந்த உரையின் போது மிகவும் சுவையான ஓர் ஆவணத்தை வாசித்துக் காட்டினார்; அவரது பிரசுரத்திலும் இதை வெளியிட்டுள்ளார்; வேறு எவ்விதத்திலும் இது வெளிவருவதற்கு இராணுவத் தணிக்கை முறை அனுமதித்திருக்காது. (பெர்லின் சுற்றுவட்டாரப் பகுதிகளில் ஒன்றாகிய) **நிதர்பார்னிம் வட்டாரத்தில் பேச்சாளர்களுக்கான குறிப்புகள்** என்னும் இந்த ஆவணம் ஜெர்மன் இடதுசாரி சமூக-ஜனநாயகவாதிகளது கருத்தோட்டங்களையும் கட்சியைப் பற்றிய அவர்களது கண்டனத்தையும் எடுத்துரைக்

கிறது. புரட்சிகர சமூக-ஜனநாயகவாதிகள் ஒரு காரணியை எதிர்பார்க்கவில்லை, எதிர்பார்க்க முடியவும் இல்லை என்று இந்த ஆவணம் கூறுகிறது, அது என்னவென்றால்:

''ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சி, தொழிற்சங்கங்கள் இவற்றின் ஒழுங்கமைந்த செயல் பலம் அனைத்தும் யுத்தத்தை நடத்தும் அரசாங்கத்தின் தரப்புக்குச் சென்றுவிட்டது என்பதும் மக்கள் பெருந்திரளினரது புரட்சிகர ஆற்றலை நசுக்குவதற்காக இந்தச் செயல் பலம் அனைத்தும் பயன்படுத்தப்பட்டது என்பதும்'' (லேகினது பிரசுரத்தில் பக்கம் 34).

இது முற்றிலும் உண்மையே. இதே ஆவணத்தில் அடங்கியுள்ள பின்வரும் வாசகமும் உண்மையே:

''ரைஹ்ஸ்டாகில் ஆகஸ்டு 4இல் சமூக-ஜனநாயகக் குழு வாக்களித்ததானது, வேறு விதமான ஒரு போக்கு, மக்கள் பெருந்திரளினரிடையே அது ஆழமாக வேர் விட்டிருந்தாலும்கூட, புடமிடப்பட்ட ஒரு கட்சியின் தலைமையில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டிருக்க முடியாது என்பதை நிரூபித்துக் காட்டிற்று. தலைமையான கட்சி உறுப்புகளது சித்தத்தை எதிர்த்து நின்றுதான், கட்சியும் தொழிற்சங்கங்களும் காட்டிய எதிர்ப்பைச் சமாளித்துதான் அது தன்னை நிலைநிறுத்திக் கொண்டிருக்க முடியும்'' (அதே பிரசுரம்).

இது முற்றிலும் உண்மையே

''ஆகஸ்டு 4இல் ரைஹ்ஸ்டாகில் சமூக-ஜனநாயகக் குழு தனது கடமையைச் செய்திருந்தால், ஸ்தாபனத்தின் புற வடிவம் அழிக்கப்பட்டிருக்கலாம், ஆனால் அதன் ஆன்மா, சோஷலிஸ்டுகளுக்கு எதிரான விசேஷச் சட்டத்தின் போது கட்சிக்கு உயிரளித்து எல்லா இடர்களையும் அது மீறிச் செல்வதற்குத் துணை புரிந்த அந்த ஆன்மா அழியாது நிலைத்திருந்திருக்கும்'' (அதே பிரசுரம்).

லேகினது உரையைக் கேட்பதற்காகக் கூடியிருந்த ''தலைவர்கள்'', தம்மைத் தலைமையான தொழிற்சங்க அலுவலர்கள் என்பதாகக் கூறிக் கொண்ட அவர்கள், இதைக் கேட்டதும் சிரித்தார்கள் என்று லேகினது பிரசுரத்தில் கூறப்படுகிறது. நெருக்கடியான ஒரு தருணத்தில் சட்டவிரோதமான புரட்சிகர ஸ்தாபனங்களை அமைத்துக் கொள்வது (சோஷலிஸ்டுகளுக்கு எதிரான

விசேஷச் சட்டத்தின் போது செய்யப்பட்டது போல) சாத்தியமும் அவசியமும் ஆகுமென்ற கருத்து அவர்களுக்கு நகைக்கத்தக்கதாகத் தோன்றியது. முதலாளி வர்க்கத்தின் மிகமிக விசுவாசமான காவல் நாயாகிய லேகின் மார்பைத் துருத்திக் கொண்டு அடித்துக் கூறினார்:

''தெளிவாகவே இது ஓர் அராஜகக் கருத்து: மக்கள் பெருந்திரளினரால் பிரச்சினைக்குத் தீர்வு உண்டாக்கப் படும் பொருட்டு ஸ்தாபனத்தைக் குலையச் செய்வதென்ற இக்கருத்து. இது ஓர் அராஜகக் கருத்தே ஆகும், என் மனத்துள் ஐயம் ஏதும் இல்லை!''

''சபாஷ்! சரியாகச் சொன்னீர்கள்!'' என்று ஏகமாகப் பாராட்டுக் குரல்கள் எழுந்தன (அதே பிரசுரம், பக்கம் 37)—தொழிலாளி வர்க்கத்தின் சமூக-ஜனநாயக ஸ்தா பனங்களது தலைவர்களாகத் தம்மைக் கூறிக் கொண்ட அந்த முதலாளி வர்க்கக் கையாட்களிடமிருந்து இக்குரல் கள் எழுந்தன.

கண்ணைத் திறந்துவிடும்படியான ஒரு காட்சி.புரட்சிப் போராட்டத்துக்கு வழி காட்டுவதற்காக வேறொரு வகை ஸ்தாபனங்கள், சட்டவிரோத ஸ்தாபனங்கள், அவ சியம் என்பதை நினைத்துப் பார்ப்பதற்குக்கூட முடியாத அளவுக்கு முதலாளித்துவச் சட்டமுறையினால் ஆட்கள் சீரழிந்து வீணாகிவிடுகிறார்கள். போலீஸ் அனுமதியுடன் இருந்து வரும் சட்டபூர்வமான சங்கங்களே இறுதி எல்லை —கடக்க முடியாத எல்லை—என்பதாகக் கற்பனை செய்துகொள்ளும் அளவுக்கு—இம்மாதிரியான சங்கங் களை நெருக்கடிக் காலத்தில் தலைமை தாங்கும் உறுப்பு களாக இருக்கும்படிப் பாதுகாப்பது நினைக்கக்கூட சாத் தியமென்பது போல அந்த அளவுக்கு—இவர்கள் கெட்ட ழிந்துவிடுகிறார்கள்! சந்தர்ப்பவாதத்தின் உயிருள்ள இயக் கவியலை இங்கே காண முடிகிறது: சட்டபூர்வமான சங் கங்கள் பல்கிப் பெருகும் இந்த நிகழ்ச்சியே, அசட்டுத்தன மான, ஆனால் கடமையுணர்வுள்ள அற்பவாதிகள் கணக் கெழுதி வைக்கும் பணிக்குள் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டுவிடும் இந்தப் பழக்கமே நெருக்கடிக் காலத்தில் இந்தக் கடமையுணர்வுள்ள அற்பவாதிகள் துரோகிகளாக வும் காட்டிக் கொடுக்கும் வஞ்சகர்களாகவும் மக்கள்

பெருந்திரளினரது புரட்சிகர ஆற்றல் வெளிப்படாத படி அடக்கியொடுக்குவோராகவும் மாறும்படியான சூழ் நிலையை உண்டாக்கிவிடுகின்றன. இது அகஸ்மாத்தான நிகழ்வல்ல. புரட்சிகர ஸ்தாபனத்தைக் கட்டியமைக்கும் பணியைத் துவக்கியாக வேண்டும்—புதிய வரலாற்று நிலைமையாலும் பாட்டாளி வர்க்கப் புரட்சிகரச் செய லுக்கான சகாப்தத்தாலும் இது கோரப்படுகிறது—ஆனால் புரட்சிகர ஆற்றலை அடக்கியொடுக்கும் பழைய தலை வர்களது தலைக்கு மேல்தான், பழைய கட்சியின் தலைக்கு மேல்தான், அதை ஒழித்துக் கட்டுவதன் மூலம்தான் இப் பணியைத் துவக்க முடியும்.

எதிர்ப்புரட்சியாளர்களாகிய அற்பவாதிகள்''அராஜக வாதம்!'' என்றுதான் கூச்சலிடுவார்கள், சந்தர்ப்பவாதி யான எடுவார்டு டவீட் முன்பு கார்ல் லீப்க்னெஹ்டைத் தூற்றிய போது ''அராஜகவாதம்'' என்று கத்தினாரே அதே போலத்தான் கூச்சலிடுவார்கள்; ஜெர்மனியில் சந் தர்ப்பவாதிகளால் அராஜகவாதிகளென நிந்தனை செய் யப்பட்ட தலைவர்கள் மட்டும்தான் நேர்மையான சோஷ லிஸ்டுகளாக இருந்து வருவதாகத் தெரிகிறது....

இன்றைய சேனையை எடுத்துக் கொள்ளுங்கள். ஸ்தா பன ஒழுங்கமைப்புக்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டு. இந்த ஸ்தாபன ஒழுங்கமைப்பு நெகிழ்வுடையதாக இருப்பதா லும் அதேபோது லட்சோபலட்சக்கணக்கான மக்களுக்கு ஒருமித்த ஒரே சித்தத்தை அளிக்க வல்லதாகவும் இருப் பதால்தான் இது சிறப்புக்குரியதாக இருக்கிறது. இந்த லட்சக்கணக்கானோர் இன்று நாட்டின் பல்வேறு பகுதி களிலும் அவர்களது இல்லங்களிலே வாழ்ந்து கொண் டிருக்கிறார்கள். நாளைக்குப் படை திரட்டு உத்தரவு வெளியிடப்படுகிறது, உடனே இவர்கள் இராணுவப் பணிக்கு ஆஜராகிறார்கள். இன்று இவர்கள் அகழ்வரி களில் படுத்துக் கிடக்கிறார்கள், இது மாதக் கணக்கில் நீடிக்கக் கூடும். நாளைக்கு வேறொரு உத்தரவு பிறப்பிக் கப்பட்டு, தாக்குதல் நடத்துவதற்காக இவர்கள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். இன்று துப்பாக்கிக் குண்டு களிலிருந்தும் தெறிகுண்டுச் சிம்புகளிலிருந்தும் பதுங்கித் தப்பியோடுவதில் இவர்கள் அதிசயங்கள் புரிகிறார்கள். நாளைக்கு நேரடிக் கைகலப்புப் போரில் விந்தைகள்

புரிகிறார்கள். இன்று இவர்களது முன்னணிப் பிரிவுகள் நிலவெடிகள் புதைத்துச் செல்கின்றன, நாளைக்குத் தலைக்கு மேல் பறக்கும் விமானிகளால் வழிகாட்டப் பெற்று மைல் கணக்கில் முன்னேறிச் செல்கின்றன. ஒரே குறிக்கோளை அடையும் பொருட்டு ஒரே சித்தத்தால் இயக்குவிக்கப்பட்டு லட்சோபலட்சக்கணக்கானோர் தமது உறவுகளின் வடிவங்களையும் தமது நடத்தையையும், தமது செயற்பாடுகளுக்கான இடத்தையும் செயற்பாட்டு முறைகளையும் மாற்றிச் செல்கிறார்கள், மாறும் நிலைமைகளுக்கும் போராட்டத்தின் தேவைகளுக்கும் ஏற்ப தமது கருவிகளையும் போர் ஆயுதங்களையும் மாற்றிக் கொள்கிறார்கள்—இவை எல்லாமே மெய்யான ஸ்தாபன ஒழுங்கமைப்பு.

முதலாளி வர்க்கத்துக்கு எதிராக நடைபெறுகின்ற தொழிலாளி வர்க்கப் போராட்டத்துக்கும் இது பொருந்துவதாகும். இன்று புரட்சிகரச் சூழ்நிலை இருக்கவில்லை, மக்கள் பெருந்திரளினரிடையே அமைதியின்மையை உண்டாக்கும், அல்லது அவர்களுடைய செயற்பாடுகளைத் தீவிரப்படுத்தும் நிலைமைகள் இருக்கவில்லை. இன்று உங்களிடம் வாக்குச் சீட்டு தரப்படுகிறது—அதை வாங்கிக் கொள்ளுங்கள், அதை உங்கள் பகைவர்களுக்கு எதிரான ஆயுதமாகப் பயன்படுத்தும் பொருட்டு—சிறைக்குச் செல்லப் பயந்து தமது நாடாளுமன்ற இருக்கைகளில் ஒட்டிக் கொள்ளும் ஆட்களுக்குச் சொகுசான சட்டமன்ற வேலைகள் கிடைப்பதற்கான சாதனமாகப் பயன்படுத்தும் பொருட்டல்ல—ஒழுங்கமைப்பு செய்யக் கற்றுக் கொள்ளுங்கள். நாளைக்கு உங்களது வாக்குச் சீட்டு உங்களிடமிருந்து பிடுங்கப்பட்டு, துப்பாக்கியோ, மிக நவீன தொழில்நுணுக்கத்தின் சாதனையாகிய அதிவேகப் பீரங்கியோ உங்களிடம் தரப்படுகிறது—சாவையும் அழிவையும் பொழியும் இந்த ஆயுதத்தை வாங்கிக் கொள்ளுங்கள், யுத்தத்தைக் கண்டு அஞ்சும் பிணி கொண்ட அழுமூஞ்சிகளது உணர்ச்சிப் பசப்புக்குச் செவி சாய்க்காதீர்கள்; தொழிலாளி வர்க்கத்தின் விடுதலைக்காகச் சுட்டுப் பொசுக்கியும் வெட்டி வீழ்த்தியும் நிச்சயமாக ஒழிக்கப்பட்டாக வேண்டியவை இன்னமும் உலகில் மிகப் பலவும் இருக்கின்றன; மக்கள் பெருந்திரளினரிடையே ஆத்திர

மும் ஆவேசமும் வளர்ந்திடுமானால், புரட்சிகரச் சூழ் நிலை எழுமானால், புதிய ஸ்தாபனங்களைத் தோற்று விப்பதற்காகவும் சாவுக்கும் அழிவுக்குமான இந்தப் பயன் தரும் ஆயுதங்களை உங்களது சொந்த அரசாங்கத்துக்கும் உங்களது சொந்த முதலாளி வர்க்கத்துக்கும் எதிராக உப யோகிப்பதற்காகவும் தயார் செய்யுங்கள்.

இது எளிய காரியமல்ல, சந்தேகமில்லை. கடுமை யான தயாரிப்பு வேலைகளும் பெருந் தியாகங்களும் புரிய வேண்டியிருக்கும். இது ஸ்தாபன ஒழுங்கமைப்புக்கும் போராட்டத்துக்குமான ஒரு புதிய வடிவமாகும்; கற்ற றிந்து கொள்ள வேண்டிய ஒன்றாகும் இதுவும்; பிழைகளும் தோல்விகளும் இல்லாமல் அறிவு கைவரப்பெறுவதில்லை. வர்க்கப் போராட்டத்தின் இந்த வடிவத்துக்கும் தேர்தல் களில் பங்கெடுத்துக் கொள்வதற்குமுள்ள உறவு, ஒரு கோட்டையின் மீதான தாக்குதலுக்கும் படை சூழ்ச்சி முறைகள் அல்லது படையணி இடப்பெயர்ச்சி அல்லது அகழ்வரிகளில் காத்திருப்பதற்குமுள்ள உறவைப் போன் றதே ஆகும். வரலாறு இந்தப் போராட்ட வடிவத்தை நிகழ்ச்சி நிரலுக்குக் கொண்டு வருவது அடிக்கடி நிகழ்வ தல்ல, ஆனால் இதன் முக்கியத்துவமும் விளைவுகளும் பல பத்தாண்டுகளுக்கு நீடித்துச் செயல்படுகிறவை. இத்தகைய போராட்ட முறைகள் கையாளப்படக் கூடிய, கையாளப் படவும் வேண்டிய நாட்கள், பிற வரலாற்றுச் சகாப்தங் களில் இருபது ஆண்டுக் காலகட்டங்களுக்குச் சமமானவை ஆகும்.

கா. காவுத்ஸ்கியையும் கா. லேகினையும் ஒப்பிட்டுப் பாருங்கள்; காவுத்ஸ்கி எழுதுகிறார்:

''கட்சி சிறியதாக இருந்த வரை யுத்தத்துக்கு எதி ரான கண்டனச் செயல் ஒவ்வொன்றும் பிரசாரத் துறை யில் தீரச் செயலாக இருந்தது.... ருஷ்ய, செர்பியத் தோழர்களது செயல்முறைக்கு சமீபத்தில் பொதுப் பாராட்டு கிடைத்துள்ளது. எவ்வளவுக்கு எவ்வளவு ஒரு கட்சி வலுமிக்கதாகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதிக மாக அதன் தீர்மானங்களின் நோக்கங்களில் பிரசாரப் பலன்கள் நடைமுறை விளைவுகளின் கணிப்புடன் பின்னிப் பிணைந்துவிடுகின்றன, இருவகை நோக்கங்களிலும் தக்க கவனம் செலுத்துவது அவ்வளவுக்கு அவ்வளவு கடின மாகிவிடுகிறது; ஆயினும் இரண்டில் எதையும் ஒதுக்கிவிட

முடியாது. ஆகவே நாம் எவ்வளவு அதிகமான பலம் பெறுகிறோமோ, சிக்கலான ஒவ்வொரு புதிய சூழ்நிலையிலும் அவ்வளவு அதிகச் சுலபமாக நம்மிடையே கருத்து வேறுபாடுகள் எழுகின்றன'' (சர்வதேசியமும் யுத்தமும், பக்கம் 30).

காவுத்ஸ்கியின் இந்த வாதங்கள் லேகினுடைய வாதங்களிலிருந்து வேறுபடுவதெல்லாம், இவை பாசாங்குத்தனமானவை, பேடித்தனமானவை என்பதில் மட்டும்தான். புரட்சிகரச் செயல்களை இழிவான முறையில் லேகின்கள் நிராகரிப்பதற்கு காவுத்ஸ்கி ஆதரவளித்து நியாயம் கற்பிக்கிறார், ஆனால் தம் உள்ளத்திலிருப்பதைத் தெளிவாக வெளியிட்டுவிடாமல் நரித்தனமாக இதைச் செய்கிறார்; சூசகமாகப் பேசித் தந்திரம் புரிந்து, ஒருபுறம் லேகினையும் மறுபுறம் ருஷ்யர்களது புரட்சிகரச் செயல்முறையையும் பாராட்டுவதுடன் நின்றுவிடுகிறார். புரட்சிக்காரர்கள் குறித்து இவ்விதமான போக்கினை ருஷ்யர்களாகிய நாம் மிதவாதிகளிடம் மட்டுமே கண்டு வந்திருக்கிறோம். புரட்சிக்காரர்களது ''வீரதீரத்தை'' அங்கீகரிக்க மிதவாதிகள் எப்போதுமே தயாராயிருக்கின்றனர், ஆனால் அதேபோது எக்காரணத்தை முன்னிட்டும் அவர்கள் தமது அதீத சந்தர்ப்பவாத நடைமுறைத் தந்திரத்தைக் கைவிட மாட்டார்கள். தன்மானமுள்ள புரட்சிக்காரர்கள் காவுத்ஸ்கியின் ''பாராட்டு மொழிகளை'' ஏற்றுக் கொள்ள மாட்டார்கள், பிரச்சினை இவ்விதம் எடுத்துரைக்கப்படுவதை அவர்கள் ஆத்திரமாக நிராகரிக்கவே செய்வார்கள். புரட்சிகரச் சூழ்நிலை இல்லையேல், புரட்சிகரச் செயலுக்காகப் பிரசாரம் செய்வது அவசியக் கடமையல்ல என்றால் ருஷ்யர்களும் செர்பியர்களும் அனுசரிக்கும் செயல்முறை பிழையானதாகும், அவர்களது நடைமுறைத் தந்திரம் தவறானதாகும். லேகினையும் காவுத்ஸ்கியையும் போன்ற மாவீரர்கள் தமது கருத்துகளே சரியானவை என்ற துணிவையாவது வெளிக்காட்டி, பகிரங்கமாக இப்படிச் சொல்லிவிட வேண்டும்.

இவ்வாறன்றி, ருஷ்ய, செர்பிய சோஷலிஸ்டுகளின் நடைமுறைத் தந்திரம் ''பாராட்டுக்கு'' உரியதென்றால், ஜெர்மன், பிரெஞ்சு முதலான ''வலுமிக்க'' கட்சிகள் அனுசரிக்கும் இதற்கு நேர்மாறான நடைமுறைத் தந்

திரம் நியாயமானதே என்று வாதாடுவது தவறாகும் என்பதோடு மன்னிக்க முடியாத குற்றமும் ஆகும். வலுமிக்க பெரிய கட்சிகள், அரசாங்கத்தால் தமது ஸ்தாபனங்கள் கலைக்கப்பட்டு, தமது நிதிகள் முடக்கி வைக்கப்பட்டு, தமது தலைவர்கள் கைது செய்யப்பட்டுவிடும் சாத்தியப்பாட்டைக் கண்டு பயந்து நடுங்கின என்ற தெட்டத்தெளிவான உண்மையைக் காவுத்ஸ்கி வேண்டுமென்றே தெளிவற்ற ஒரு தொடரை—''நடைமுறை விளைவுகள்''—கொண்டு மூடிமறைக்கிறார். புரட்சிகர நடைமுறைத் தந்திரத்திலிருந்து கசப்பான ''நடைமுறை விளைவுகள்'' உண்டாகுமென்று வாதாடி காவுத்ஸ்கி சோஷலிசத்துக்கு இழைக்கப்பட்ட துரோகத்துக்கு நியாயம் கூறுகிறார் என்றுதான் இதற்கு அர்த்தம். இது மார்க்சியத்தைச் சீரழிப்பதன்றி வேறு என்னவாம்?

யுத்தக் கடன்களை ஆதரித்து ஆகஸ்டு 4இல் வாக்களித்த சமூக-ஜனநாயகப் பிரதிநிதிகளில் ஒருவர் பெர்லினில் தொழிலாளர் கூட்டம் ஒன்றில், ''இல்லையேல் நாங்கள் சிறையில் தள்ளப்பட்டிருப்போம்'' என்று அறிவித்தாராம். உடனே தொழிலாளர்கள் பலத்த குரலில், ''அதனால் என்ன? நல்லதுதானே!'' என்று பதிலளித்தார்களாம்.

ஜெர்மனி, மற்றும் பிரான்சின் தொழிலாளர் பெருந்திரளினரிடையே புரட்சிகர உணர்ச்சிகளை ஊட்டி, புரட்சிகரச் செயல்களுக்குத் தயார் செய்ய வேண்டிய அவசியத்தை அறிவுறுத்துவதற்குக் குறிச்சின்னமான நிகழ்ச்சி வேறு எதுவும் இல்லையெனில், துணிகரப் பேச்சுக்காக நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவர் கைது செய்யப்படுவது பல்வேறு நாடுகளின் பாட்டாளிகள் அவர்களது புரட்சிகரப் பணியில் ஒற்றுமை பெறும்படி விடுக்கப்படும் அறைகூவலாகப் பயன்பட்டிருக்கும். இம்மாதிரியான ஒற்றுமையை ஏற்படுத்துவது சுலபமல்ல, ஆகவே நாடாளுமன்ற உறுப்பினர்கள், அவர்களது உயர்ந்த பதவியின் காரணமாக அனைத்து அரசியல் அரங்கினையும் விரிவாகப் பார்க்கும்படியான நிலையிலுள்ள இவர்கள் முன்முயற்சி எடுப்பது இதே அளவுக்கு அவர்களுக்குரிய கடமையாகிவிடுகிறது.

யுத்த காலத்தில் மட்டுமின்றி, நிச்சயமாக எந்தக் கடுமையான அரசியல் சூழ்நிலையிலும்கூட—புரட்சிகரமான

எவ்வித வெகுஜனச் செயலுக்குரிய காலங்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்—மிகமிக சுதந்திரமான முதலாளித்துவ நாடுகளிலும்கூட அரசாங்கங்கள் எப்போதும் சட்டபூர்வமான ஸ்தாபனங்களைக் கலைக்கவும் அவற்றின் நிதிகளைக் கைப்பற்றவும் அவற்றின் தலைவர்களைக் கைது செய்யவும் இதே வகைப்பட்ட மற்ற ''நடைமுறை விளைவுகளை'' உண்டாக்கப் போவதாகவும் அச்சுறுத்தவே செய்யும். அப்போது நாம் என்ன செய்யலாம்? இந்தக் காரணங்களை முன்னிட்டு, காவுத்ஸ்கி செய்வது போல, சந்தர்ப்பவாதிகளின் நிலை நியாயமே என்று வாதாடலாமா? அப்படிச் செய்தால், சமூக-ஜனநாயகக் கட்சிகள் தேசிய-மிதவாதத் தொழிலாளர் கட்சிகளாக மாற்றமடைவதைப் போற்றிப் புனிதமாக்குவதாகத்தான் அதற்கு அர்த்தம்.

சோஷலிஸ்டாக இருப்பவர் வந்தடையக் கூடிய முடிவு ஒன்றேயொன்றுதான்: ''ஐரோப்பியக்'' கட்சிகளது கலப்பற்ற சட்டபூர்வமான செயலானது, இது ஒன்றே தவிர வேறு ஏதுமல்ல என்பதானது இப்போது காலத்துக்கு ஒவ்வாததாகிவிட்டது; ஏகாதிபத்தியத்துக்கு முந்திய கட்டத்தில் முதலாளித்துவத்தினது வளர்ச்சியின் விளைவாக முதலாளித்துவத் தொழிலாளர் கொள்கைக்கான அடிப்படையாகிவிட்டது என்பதுதான். இதனுடன் கூட சட்டவிரோத அடித்தளத்தை, சட்டவிரோத ஸ்தாபனத்தை, சட்டவிரோத சமூக-ஜனநாயகப் பணியைத் தோற்றுவித்துச் சேர்த்துக் கொண்டாக வேண்டும்; ஆனால் எந்தவொரு சட்டபூர்வமான நிலையையும் கைவிட்டு விடாமல் இதைச் செய்தாக வேண்டும். இந்தப் பாதையை மேற்கொள்ள வேண்டுமென்ற விருப்பமும் இது அவசியமாகுமென்ற உணர்வும் இருக்குமானால், அனுபவமானது இதை எப்படிச் செய்வதென்று தெளிவாகக் காட்டும். இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும் என்பதை ருஷ்யாவின் புரட்சிகர சமூக-ஜனநாயகவாதிகள் 1912—1914இல் நிரூபித்துக் காட்டினர். டூமாவில் தொழிலாளர் பிரதிநிதியாக இருந்த முரானவ்—வழக்கு விசாரணையின் போது ஏனையோரைக் காட்டிலும் இவர் சிறந்த முறையில் நடந்து கொண்டார், சைபீரியாவுக்கு ஜாரிஸ்டு அதிகாரிகளால் கடத்தப்பட்டார்—அமைச்சராவதற்குரிய நாடாளு

மன்றவாதத்தைத் தவிர (ஹெண்டர்சன், செம்பா, வண் டர்வேல்டேவிலிருந்து ஸூடேக்கும், ஷெய்டமன் வரை எல்லோரும் இதைச் சேர்ந்தவர்களே, கடைசியில் கூறப் பட்ட இருவரும் முன்னறைக்கு மேல் உள்ளே நுழைய அனுமதிக்கப்படவில்லை என்றாலும் இவர்களும்கூட முற்றிலும் ''அமைச்சராவதற்குரிய'' பேர்வழிகளே!) சட்ட விரோத, புரட்சிகர நாடாளுமன்றவாதம் இருக்க முடியு மென்பதைத் தெளிவாகவே நிரூபித்துக் காட்டினார். கசோவ்ஸ்கிகளும் பத்ரேசவ்களும் அடிவருடிகளது ''ஐரோப்பிய'' நாடாளுமன்றவாதத்தை மெச்சிப் புகழட் டும் அல்லது ஏற்றுக் கொள்ளட்டும்—இத்தகைய சட்ட வர்தம், லேகின், காவுத்ஸ்கி, ஷெய்டமன் ரகத்தைச் சேர்ந்த இத்தகைய சமூக-ஜனநாயகம் இகழ்ச்சிக்கே அன்றி வேறு எதற்கும் தகுதியுடையதல்ல என்பதை ஓயா மல் தொழிலாளர்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டுதான் இருப்போம்.

## 9

தொகுத்துரைப்போமாக.

ஐரோப்பாவிலுள்ள அதிகாரபூர்வமான சமூக-ஜன நாயகக் கட்சிகளில் பெரும்பாலானவை தமது பற்றுக் கோள்களுக்கும் ஷ்டுட்கார்ட்டிலும் பாஸெலிலும் ஏற்கப் பட்ட புனிதமான தீர்மானங்களுக்கும் அப்பட்டமாக இழைத்த துரோகத்தில் இரண்டாவது அகிலத்தின் தகர் வானது மிகமிக எடுப்பான முறையில் வெளியாகிறது. ஆனால் சந்தர்ப்பவாதத்தின் முழுநிறை வெற்றியையும் சமூக-ஜனநாயகக் கட்சிகள் தேசிய-மிதவாதத் தொழி லாளர் கட்சிகளாக மாற்றமடைந்ததையும் குறிக்கும் இந்தத் தகர்வு இரண்டாவது அகிலத்துக்குரிய ஒரு முழு சகாப்தத்தின் —19ஆம் நூற்றாண்டின் இறுதியும் 20ஆம் நூற்றாண்டின் ஆரம்பமுமாகிய இந்தச் சகாப்தத்தின்— விளைவே ஆகும். மேற்கு ஐரோப்பிய முதலாளித்துவ மற்றும் தேசியப் புரட்சிகளது நிறைவிலிருந்து சோஷலிசப் புரட்சிகளது துவக்கத்துக்கு மாறிச் செல்வதற்குரிய இந்தச் சகாப்தத்தின் புறவய நிலைமைகள் சந்தர்ப்ப வாதத்தைத் தோற்றுவித்து அதற்கு ஊட்டமளித்தன. இந்தக் காலகட்டத்தில் சில ஐரோப்பிய நாடுகளது தொழி

லாளி வர்க்க, சோஷலிச இயக்கத்தில் பிரதானமாக சந்தர்ப்பவாதத்தின் எல்லை நெடுகிலுமான வெடிப்பாக அமையும் பிளவு ஏற்படக் காண்கிறோம் (பிரிட்டன், இத்தாலி, ஹாலந்து, பல்கேரியா, ருஷ்யா), ஏனைய நாடுகளில் இதே எல்லை நெடுகிலும் போக்குகளுக்கிடையிலான விடாப்பிடியான நீண்ட போராட்டம் நடைபெறக் காண்கிறோம் (ஜெர்மனி, பிரான்ஸ், பெல்ஜியம், ஸ்வீடன், ஸ்விட்சர்லாந்து). பெரிய யுத்தத்தால் உண்டாக்கப்பட்ட நெருக்கடியானது மேல் உறைகள் யாவற்றையும் கிழித்தெறிந்து, சம்பிரதாயங்களை உதறித் தள்ளி, நெடுங்காலமாகவே பெருத்து விட்ட சீழ்க் கட்டியைப் பட்டவர்த்தனமாக்கி, சந்தர்ப்பவாதத்தை முதலாளி வர்க்கத்தின் கூட்டாளியாக இருந்து அது ஆற்றிடும் மெய்யான பாத்திரத்தில் வெளிப்படச் செய்தது. தொழிலாளர் கட்சிகளிலிருந்து இந்தக் கூறு ஸ்தாபன வழியில் அறவே துண்டித்து அகற்றப்படுவது அவசர அவசியமாகியுள்ளது. ஒரே கட்சியில் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படையினரும் தொழிலாளி வர்க்கத்தின் பகுதியளவு அற்பவாத மேற்குலத்தினரும்—தமது ''சொந்த'' தேசத்தின் ''பேரரசு'' அந்தஸ்தால் கிடைக்கும் தனியுரிமைகளில் சில கவளங்களைப் பெற்றுக் கொள்ளும் இந்த மேற்குலத்தினரும்—ஒருங்கே இருப்பதற்கு ஏகாதிபத்தியச் சகாப்தம் அனுமதிப்பதன்று. சந்தர்ப்பவாதமானது ''கடைக்கோடி நிலைகளை'' அறியாத ஒரே கட்சியில் இருக்கும் ''நியாயமான வண்ணச் சாயலே'' என்பதான பழைய தத்துவம் இப்போது தொழிலாளர்களை ஏமாற்றும் மிகப் பெரிய மோசடியாகவும் தொழிலாளி வர்க்க இயக்கத்துக்கு மிகப் பெரிய முட்டுக்கட்டையாகவும் மாறிவிட்டது. தொழிலாளிப் பெருந்திரளினரை உடனடியாகவே விலகி ஓடச் செய்யும்படியான ஒளிவுமறைவற்ற சந்தர்ப்பவாதமானது சாலச்சிறந்த நடுவழி என்பதான இந்தத் தத்துவத்தைப் போல அவ்வளவு பயங்கரமானதல்ல, அந்த அளவுக்குக் கேடு விளைவிப்பதல்ல. இந்த நடுவழித் தத்துவம் மார்க்சியத் தொடர்களை உபயோகித்து சந்தர்ப்பவாத நடைமுறைக்கு நியாயம் கற்பிக்கிறது, வரிசையாகப் பல குதர்க்கங்களைக் கையாண்டு புரட்சிகரச் செயல்களுக்கு இன்னும் காலம் வரவில்லை

என்றும் இன்ன பலவாறாகவும் நிரூபிக்க முயலுகிறது. இந்தத் தத்துவத்தின் மிகவும் பிரபலமான பிரதிநிதியும் இரண்டாவது அகிலத்தில் மெத்தப் பெரியவராக விளங்கு பவருமான காவுத்ஸ்கி கபட வேடம் பூணுவதில் தாம் ஒப்புயர்வற்றவர் என்பதையும் மார்க்சியத்தைச் சீரழிக் கும் கலையில் தாம் கைதேர்ந்தவர் என்பதையும் நிரூ பித்துக் காட்டியிருக்கிறார். ஸூடேக்கும்களாலும் ஷெய் டமன்களாலும் அத்தனை ஆர்வத்தோடு கண்ணும் கருத்து மாகப் பாதுகாக்கப்படும் இம்மாதிரியான ''மெத்தப் பெரியவரிடமிருந்து'', பத்துலட்சம் உறுப்பினர்களைக் கொண்ட ஜெர்மன் கட்சியில் சற்றேனும் நேர்மையும் வர்க்க உணர்வும் புரட்சித் தன்மையும் கொண்ட உறுப் பினர்கள் எல்லோரும் வெகுண்டெழுந்து விலகி விட்டனர்.

தேசியவெறி தலைவிரித்தாடும் சூழலில், இராணுவச் சட்டத்தின், யுத்தகாலத் தணிக்கை முறையின் நிர்ப்பந் தத்துக்கு இடையில், பாட்டாளி வர்க்கப் பெருந்திரளினர் —இவர்களது பழைய தலைவர்களில் அனேகமாகப் பத் தில் ஒன்பது பகுதியானோர் முதலாளி வர்க்கத்தின் தரப் புக்கு ஓடி விட்டவர்களாவர்—ஒற்றுமை இழந்தவர்களாக, திக்கற்ற நிலையில் விடப்பட்டிருக்கிறார்கள். ஆயினும் யுத்தத்தால் தோற்றுவிக்கப்பட்ட புறவய புரட்சிகரச் சூழ்நிலை, விரிவடைந்தும் ஆழமடைந்தும் வரும் இந்தச் சூழ்நிலை, தவிர்க்கவொண்ணாத முறையில் புரட்சிகர உணர்ச்சிகளை ஊக்குவித்துச் செல்கிறது. மிகச் சிறந்த, மிகவும் வர்க்க உணர்வு படைத்த பாட்டாளி கள் அனைவரையும் இது பக்குவம் பெறச் செய்து, அவர் களுக்கு அறிவொளி ஊட்டி வருகிறது. மக்கள் பெருந்திர ளினரது மனோபாவத்தில் திடீர் மாற்றம் ஏற்படுவது சாத்தியமென்பது மட்டுமல்ல, மேலும் மேலும் இது எதிர்பார்க்கக் கூடியதாகி வருகிறது. ருஷ்யாவில் 1905 ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் ''கப்போன் இயக்கம்''[45] சம்பந்தமாக ஏற்பட்டதற்கு ஒப்பான ஒரு மாற்றமாக இருக்கக் கூடியது இது. அப்போது ருஷ்யாவில் சில மாதங் களுக்குள், சில சந்தர்ப்பங்களில் சில வாரங்களுக்குள்ளாக வும்கூட, பிற்பட்ட பாட்டாளி வர்க்கத் திரளினரிட மிருந்து லட்சக்கணக்கானோரைக் கொண்ட சேனை ஒன்று உருப்பெற்று வெளிப்பட்டு, பாட்டாளி வர்க்கத்தின்

புரட்சிகர முன்னணிப் படையைப் பின்தொடர்ந்து நடை போட்டது. சக்தி வாய்ந்த புரட்சிகர இயக்கம் இந்த யுத்தத்துக்குப் பின்னர் உடனடியாக வளர்ச்சியடையுமா, அல்லது இந்த யுத்தத்தின் போதே வளர்ச்சியடையுமா என்பவை குறித்து நாம் முடிவாகக் கூறுவதற்கில்லை. ஆனால் எப்படியும் இந்தத் திசையிலான பணி மட்டுமே சோஷலிசப் பணியென்று அழைக்கப்படுவதற்குரிய தகுதி உடையதாகும். உள்நாட்டு யுத்தம் என்னும் கோஷம் இந்தப் பணியினைத் தொகுத்துரைத்து, நெறியாண்மை புரியும் கோஷமாகும். பாட்டாளி வர்க்கம் அதனுடைய சொந்த அரசாங்கத்துக்கும் சொந்த முதலாளி வர்க்கத்துக்கும் எதிராக நடத்தும் புரட்சிகரப் போராட்டத்துக்குத் துணை புரிய விரும்புவோரை ஒன்றுபட வைத்து, உறுதி பெறச் செய்யும் கோஷமாகும் இது.

ருஷ்யாவில் புரட்சிகர சமூக-ஜனநாயகப் பாட்டாளி வர்க்கக் கூறுகள் குட்டி முதலாளித்துவச் சந்தர்ப்பவாதக் கூறுகளிலிருந்து அறவே துண்டித்துக் கொண்டு வெளிவருவதற்குத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வரலாறு அனைத்தாலுமே தயார் செய்யப்பட்டுள்ளது. அந்த வரலாற்றினைக் கவனியாது ஒதுக்கி விட்டு, ''உட்குழுவாதத்துக்கு'' எதிராகச் சண்டமாருதம் புரிவதன் மூலம் ருஷ்யாவில் பாட்டாளி வர்க்கக் கட்சியானது சந்தர்ப்பவாதத்தின் பல்வேறு வகைகளுக்கும் எதிராகப் பல ஆண்டுகளாகப் போராட்டம் புரிந்து வளர்ந்து உருவாகிய மெய்யான நிகழ்ச்சிப் போக்கினைப் புரிந்து கொள்ளும் திறனற்றவர்களாகத் தம்மை ஆக்கிக் கொள்வோர் அந்த இயக்கத்துக்குப் படுமோசமான சேவை புரிவோரே ஆவர். தற்போதைய யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் எல்லாப் ''பேரரசுகளிலும்'' ருஷ்யா மட்டும்தான் அண்மையில் ஒரு புரட்சியை அனுபவித்த அரசாகும். பாட்டாளி வர்க்கம் தீர்மானகரமாகப் பங்காற்றிய அந்த புரட்சியின் பூர்ஷ்வாத் தன்மையானது, தொழிலாளி வர்க்க இயக்கத்தினுள் பூர்ஷ்வாப் போக்குக்கும் பாட்டாளி வர்க்கப் போக்குக்கும் இடையே பிளவினை உண்டாக்காமல் இருப்பதற்கில்லை. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகம்(1883—1894இல் இருந்ததைப் போல, சித்தாந்தப் போக்காக மட்டுமின்றி) தொழிலாளி வர்க்கப் பெருந்திரளினரது இயக்

கத்துடன் இணைப்பு கொண்ட ஸ்தாபனமாகவும் இருந்துள்ள இந்த ஏறத்தாழ இருபது ஆண்டுகளில் (1894—1914), பாட்டாளி வர்க்கப் புரட்சிப் போக்குகளுக்கும் குட்டி முதலாளித்துவச் சந்தர்ப்பவாதப் போக்குகளுக்குமிடையே போராட்டம் நடைபெற்றது. 1894—1902ஆம் ஆண்டுகளிலான ''பொருளாதாரவாதம்''[46] இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்த ஒரு போக்கே என்பதில் ஐயமில்லை. அதன் வாதங்களிலும் சித்தாந்த இயல்புகளிலும் பலவும்—''ஸ்துரூவேவாத'' வழியில் ''மார்க்சியத்தைத் திரித்துப் புரட்டுதல், சந்தர்ப்பவாதத்துக்கு நியாயம் கூறும் பொருட்டு ''மக்கள் பெருந்திரளினரைக்'' குறிப்பிட்டு ஆதாரம் தேடுதல் போன்றதாகிய பலவும்—காவுத்ஸ்கி, குனோவ், பிளௌஹானவ் முதலானோரது இன்றைய கொச்சைப்படுத்தப்பட்ட மார்க்சியத்தைக் குறிப்பிடத்தக்க அளவுக்கு ஒத்திருக்கின்றன. பழைய ரபோச்சயா மீசிலும், ரபோச்சியே தேலோவும்[47] இன்றைய காவுத்ஸ்கிக்கு இசைவானவையாக இருந்ததை சமூக-ஜனநாயகவாதிகளது தற்போதைய தலைமுறையினருக்கு நினைவுபடுத்துவோமானால் அது நன்றிக்குரிய ஒரு சேவையாக இருக்கும்.

அடுத்த காலகட்டத்துக்குரிய(1903—1908)''மென்ஷிவிசமானது'' சித்தாந்த வழியிலும் ஸ்தாபன வழியிலும் ''பொருளாதாரவாதத்தின்'' நேரடி வாரிசாகும். ருஷ்யப் புரட்சியின் போது அது, புறநிலையில் பாட்டாளி வர்க்கம் மிதவாத முதலாளி வர்க்கத்தைச் சார்ந்ததாகி, குட்டி முதலாளித்துவச் சந்தர்ப்பவாதப் போக்குகளைப் பிரதிபலிப்பதாக அமைந்த ஒரு நடைமுறைத் தந்திரத்தைப் பின்பற்றியது. இதற்கு அடுத்த காலகட்டத்தில் (1908—1914) மென்ஷிவிசப் போக்கின் பிரதான பெருக்கு கலைப்புவாதத்தைத் தோற்றுவித்தது; இந்தப் போக்கின் வர்க்க உட்பொருள் அம்பலமாகிவிடவே, மென்ஷிவிசத்தின் சிறந்த பிரதிநிதிகள் பலரும் நாஷா ஸர்யா கோஷ்டியின் கொள்கையை எதிர்த்து ஓயாமல் கண்டனக் குரலெழுப்பி வந்தனர். இதே கோஷ்டிதான்—கடந்த ஐந்தாறு ஆண்டுகளாகத் தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகர மார்க்சியக் கட்சிக்கு எதிராகப் பெருந்திரளினரிடையே முறையாகச் செயல்பட்டு வந்திருக்கும் ஒரே கோஷ்டியான இதுதான்—1914—1915ஆம் ஆண்டு யுத்

தத்தின்போது சமூக-தேசியவெறிக் கோஷ்டியாகியுள்ளது! எதேச்சாதிகாரம் இன்னமும் நிலவுகின்ற ஒரு நாட்டில், பூர்ஷ்வாப் புரட்சி நிறைவு பெறாமல் நெடுந் தொலைவு பிற்பட்டும் நாட்டு மக்கள்தொகையில் நாற்பத்து மூன்று சதவிகிதத்தினர் ருஷ்யர்களல்லாத தேசிய இனங்களைச் சேர்ந்தோரான பெரும்பான்மையினரை ஒடுக்கிக் கொண்டும் இருக்கின்ற ஒரு நாட்டில் இப்படி நிகழக் காண்கிறோம். குட்டி முதலாளிகளில் குறிப்பிட்ட சில பிரிவினர், குறிப்பாக அறிவுத்துறையினரும் அற்பசொற்பப் பிரிவினராகிய தொழிலாளர் மேற்குலத்தோரும் அவர்களது "சொந்த" தேசத்தின் "பேரரசு" அந்தஸ்துக்குரிய தனியுரிமைகளில் பங்கு பெறும்படியான இந்த "ஐரோப்பிய" ரக வளர்ச்சிக்கு ஒத்த ருஷ்யப் பிரதியும் ஒன்று இருக்கவே செய்கிறது.

ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கத்தையும் தொழிலாளர்களது சமூக-ஜனநாயகக் கட்சியையும் அவற்றின் வரலாறு அனைத்துமே "சர்வதேசியவாத" நடைமுறைத் தந்திரத்துக்கு, அதாவது மெய்யாகவே புரட்சிகரமானதும் முரணின்றிப் புரட்சிகரமானதுமாகிய இந்த நடைமுறைத் தந்திரத்துக்குத் தயார் செய்துள்ளது.

---

பின்குறிப்பு: இந்தக் கட்டுரை ஏற்கெனவே அச்சேறிவிட்ட ஒரு நேரத்தில் காவுத்ஸ்கியும் ஹாஸேயும் பெர்ன்ஷ்டைனும் கூட்டாக வெளியிட்ட ஓர் "அறிக்கை" பத்திரிகைகளில் வெளி வந்திருக்கிறது. மக்கள் பெருந்திரளினர் இடதுசாரியை நோக்கி விரைந்து செல்வதை இவர்கள் பார்க்கிறார்கள், ஆகவே இப்போது இவர்கள் இடதுசாரியினருடன் "சமாதான உடன்பாட்டுக்கு வரத்" தயாராயிருக்கிறார்கள்—இயல்பாகவே, ஸுடேக்கும்களுடன் "சமாதானத்தை" பாதுகாத்துக் கொள்வதென்ற நிபந்தனையின் பேரில்தான் இதற்கு அவர்கள் தயாராயிருக்கிறார்கள். சந்தேகம் வேண்டாம், Mädchen für alle!

*1915 மே பிற்பாதியிலும்*
*—ஜூன் முற்பாதியிலும்*
*எழுதப்பட்டது*

நூல் திரட்டு,
தொகுதி 26,
பக்கங்கள் 209—265

# தொழிற்சங்கங்கள், இன்றைய நிலைமை, தோழர்கள் திரோத்ஸ்கி, புஹாரின் தவறுகள் குறித்து மீண்டும் ஒரு முறை[48]

ஒரு காங்கிரசுக்கு முன்னால் நடைபெறுவதைப் போல ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கட்சியின் பத்தாவது காங்கிரசுக்கு நடைபெறவிருக்கும் தேர்தலுக்கு முன்பாகவும் தேர்தலுடன் தொடர்புடையதுமான கட்சி விவாதமும் கோஷ்டிவாதப் போராட்டமும் சூடுபிடித்து வருகின்றன. முதலாவது கோஷ்டிவாத பிரகடனம் தோழர் திரோத்ஸ்கியால் ''பல பொறுப்பான ஊழியர்கள் சார்பில்'' அவரது ''கொள்கைப் பிரசுரத்தில்'' (தொழிற்சங்கங்களின் பங்கும் பணிகளும் 1920 டிசம்பர் 25இல் எழுதிய முகவுரையுடன்) செய்யப்பட்டது. இதைத் தொடர்ந்து ரு.க.க.இன் பெத்ரோகிராத் கிளை ஒரு கடுமையான பிரகடனத்தை (இது தக்க முறையில் கடுமையாக இருப்பதை பின்நிகழ்வில் இருந்து வாசகர் பார்க்க முடியும்) வெளியிட்டது (1921 ஜனவரி 6ந் தேதி பெத்ரோகிராத்ஸ்கயா பிராவ்தா மற்றும் கட்சியின் மத்திய ஏடான மாஸ்கோ பிராவ்தா 1921 ஜனவரி 13ந் தேதி வெளியிட்ட கட்சிக்கு வேண்டுகோள்). பிறகு மாஸ்கோ கமிட்டி (பிராவ்தா இதே இதழில்) பெத்ரோகிராத் கிளைக்கு எதிராக வெளிவந்தது. அதற்குப் பின் 1920 டிசம்பர் 30ந் தேதி நடைபெற்ற ஒரு மிகப் பெரிய முக்கியமான கட்சிக் கூட்டத்தில், அதாவது சோவியத்துகளின் எட்டாவது காங்கிரசில் நடந்த ரு.க.க. பிரிவின் கூட்டத்தில் நடைபெற்ற விவாதத்தின் சொல்லுக்குச் சொல் அடங்கிய அறிக்கை தொழிற்சங்கங்களின் அகில ருஷ்ய மத்தியக் கவுன்சிலின் ரு.க.க. பிரிவின் காரியாலயத்தால் வெளியிடப்பட்டது. இதன் தலைப்பு உற்பத்தியில் தொழிற்சங்கங்களின் பங்கு என்பதாகும் (இதில் 1921 ஜனவரி 6ந் தேதி எழுதப்பட்ட முகவுரையும் உட்படும்). விவாதிக்கப்பட்ட விவரங்கள் அனைத்தும் இதில் அடங்கிவிட்டதாக எவ்வகையிலும் கருத முடியாது என்பது திண்ணம். இந்தப் பிரச்சினைகளை விவாதிப்பதற்கான கட்சிக் கூட்டங்கள் கிட்டத்தட்ட எல்லா இடங்களிலும் நடந்து

வருகின்றன. 1920 டிசம்பர் 30ந் தேதி, ''நடைமுறை விதிகளில் இருந்து விலகிச் சென்றேன்'' என்பதாக நான் அப்போது குறிப்பிட்ட நிலைமைகளில், அதாவது நான் விவாதத்தில் கலந்து கொள்ளவோ, முன்னும் பின்னும் பேசியவர்கள் உரைகளைக் கேட்கவோ இயலாத நிலைமைகளில் நான் ஒரு கூட்டத்தில் பேசினேன். இப்போது அதற்குப் பரிகாரம் செய்ய முயன்று மேலும் ''முறையான'' பாணியில் விளக்கம் தருவேன்.

### கோஷ்டிவாதப் பிரகடனங்களால் கட்சிக்கு ஏற்படும் அபாயம்

தோழர் திரோத்ஸ்கியின் **தொழிற்சங்கங்களின் பங்கும் பணிகளும்** எனும் பிரசுரம் ஒரு கோஷ்டிவாதப் பிரகடனமா? அதன் உள்ளடக்கம் எதுவாயினும், இந்த வகையான ஒரு பிரகடனத்தால் கட்சிக்கு ஏதேனும் அபாயம் உண்டா? இந்தக் கேள்வியைக் கிளப்பாமல் அமுக்கிவிடும் முயற்சிகள் விசேஷமாக மாஸ்கோ கமிட்டி உறுப்பினர்களின் விருப்ப விளையாட்டாக இருக்கின்றன (இதில் தோழர் திரோத்ஸ்கி விதிவிலக்கு என்பது தெளிவு). இவர்களும் தோழர் புஹாரினும் பெத்ரோகிராத் தோழர்களின் கோஷ்டிவாதப் போக்கைக் காண்கிறார்கள், ஆனால் தோழர் புஹாரின் ''இடைப்பட்ட குழுவின்''[49] சார்பில் 1920 டிசம்பர் 30ந் தேதி பின்வரும் அறிக்கையினை வெளியிடும் கட்டாயத்திற்கு ஆளானார்:

''...ஒரு ரயில் வண்டித் தொடர் வீழ்ச்சி நோக்கிச் சரியும் போது ஒரு இடைப்பட்ட அடிதாங்கி இருப்பது மோசமானதல்ல'' (1920 டிசம்பர் 30ந் தேதிய விவாதம் பற்றிய அறிக்கை, பக்கம் 45).

எனவே வீழ்ச்சியடைகின்ற அபாயம் ஏதோ இருக்கிறது. இந்த அபாயம் எவ்வாறு, எங்கே, எப்பொழுது எழுந்தது என்னும் கேள்வி குறித்து அறிவார்ந்த கட்சி உறுப்பினர்கள் அசட்டையாக இருப்பார்கள் என்று நாம் கருத முடியுமா?

திரோத்ஸ்கியின் பிரசுரம், ''இது கூட்டுப் பணியின் பலன்'' என்றும் ''பல பொறுப்பான ஊழியர்கள், குறிப்பாக தொழிற்சங்கவாதிகள் (தொழிற்சங்கங்களின் அகில

ருஷ்ய மத்தியக் கவுன்சில் தலைமைக் குழு உறுப்பினர்கள், உலோகத் தொழிலாளர் சங்க மத்தியக் கமிட்டியின் உறுப்பினர்கள், திசெக்த்ரான்* உறுப்பினர்கள் மற்றும் பிறர்) இதைத் தொகுப்பதில் பங்கெடுத்தார்கள்'' என்றும் இது ஒரு ''கொள்கைப் பிரசுரம்'' என்றும் தெரிவிக்கின்ற ஒரு அறிவிப்புடன் தொடங்குகிறது. ''வரப்போகும் கட்சிக் காங்கிரஸ் தொழிற்சங்க இயக்கத்தின் அகத்தே இருக்கும் இரு போக்குகளின் இடையே ஒன்றைத் தேர்வு செய்ய (அழுத்தம் திரோத்ஸ்கியுடையது) வேண்டி நேரும்'' என்று 4ஆவது ஆராய்ச்சியுரையின் இறுதியில் நாம் படித்தோம்.

இது மத்தியக் கமிட்டி உறுப்பினர் ஒருவர் மூலம் உருவாக்கப்பட்ட கோஷ்டிப் பிரிவு அல்ல என்றால், இது ''ஒரு வீழ்ச்சியை நோக்கிச் சரிவது'' ஆகாது என்றால் தோழர் புஹாரினோ, அவரது சக சிந்தனையாளர் வேறு யாருமோ ''கோஷ்டிவாதம்'' மற்றும் ''கட்சி ஒரு வீழ்ச்சியை நோக்கிச் சரிவது போலத் தோன்றுகிறது'' என்னும் தொடர்களுக்கு வேறு சாத்தியமான அர்த்தம் ஏதேனும் இருப்பின் அதைக் கட்சிக்கு விளக்கிக் கூறுவார்களாக. ''இடைப்பட்ட அடிதாங்கியாகச்'' செயல்பட விரும்பியும் அத்தகைய ''வீழ்ச்சி அபாயம்'' குறித்துத் தம் கண்களை மூடிக் கொண்டும் இருக்கும் மனிதர்களை விட யார் அதிக அறிவுக்குருடர்களாக இருக்க முடியும்?

சற்றே சிந்தியுங்கள்: தோழர் திரோத்ஸ்கியின் தற்படைப்பு நகல் ஆராய்ச்சியுரைகள் மற்றும் கட்சி சார்பில் அவர் ஆதரிக்கும் தொழிற்சங்கக் கொள்கை முழுவதையும் பற்றிய முன் என்றும் கண்டிராத அளவுக்கு நீண்ட நெடிய, விரிவான, காரசாரமான விவாதத்தில் மத்தியக் கமிட்டியின் இரு பேரவைக் கூட்டங்களை (நவம்பர் 9, டிசம்பர் 7) செலவிட்ட பிறகு, மத்தியக் கமிட்டியின் ஒரு உறுப்பினர், பத்தொன்பது பேரில் ஒருவர், மத்தியக் கமிட்டிக்கு வெளியே ஒரு குழுவை நிறுவி அதன் ''கூட்டு'' ''முயற்சியை'' ''கொள்கை'' என்று முன்வைத்து, ''இரு

---

* ரயில்வேத் தொழிலாளர் மற்றும் நீர்வழிப் போக்குவரத்துத் துறைத் தொழிலாளர் ஐக்கிய சங்கத்தின் மத்தியக் கமிட்டி.—ப-ர்.

போக்குகளுக்கு இடையே தேர்வு செய்து கொள்ளும்படி'' கட்சிக் காங்கிரசை அழைக்கிறார்!! 1920 டிசம்பர் 25இல் இரண்டு போக்குகள், இரண்டு போக்குகள் மட்டுமே இருப்பதாகத் தோழர் திரோத்ஸ்கி அறிவித்துள்ளார் என்னும் உண்மை ஒரு புறம் இருக்க, நவம்பர் 9இல் புஹாரின் ஓர் ''இடைப்பட்ட அடிதாங்கியாக'' வெளியே வந்த பிறகும் கூட இது நிகழ்ந்திருப்பது, படுமோசமான, மிகவும் பாதகமான வகைப்பட்ட கோஷ்டிவாதத்தின் உடந்தையாளர்கள் என்ற முறையில் புஹாரின் கோஷ்டியின் மெய்யான வேடத்தைப் பச்சையாக அம்பலப்படுத்துவதாகும். இதை இடையில் குறிப்பிடுகிறேன். ஆனால், நான் எந்த ஒரு கட்சி உறுப்பினரிடமும் கேட்கிறேன்: இந்தத் தாக்குதலும் தொழிற்சங்க இயக்கத்தில் இரு போக்குகளுக்கு இடையே ''தேர்வு'' செய்து கொள்ளும்படி வற்புறுத்துவதும் ஓரளவு திடீரென்று காட்சி தருவதாகத் தோன்றவில்லையா? மூன்று ஆண்டு காலப் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்துக்குப் பிறகு இந்த இரு போக்குகள் பற்றிய பிரச்சினையை இந்த வழியில் ''தாக்குவதற்கு'' ஒரு கட்சி உறுப்பினரையாவது காண முடிந்தது குறித்து வியப்பால் விழிப்பதன்றி நாம் செய்யக் கூடியது வேறு என்ன?

எல்லாம் இத்துடன் தீர்ந்து விடவில்லை. இந்தப் பிரசுரத்தில் நிரம்பி வழியும் கோஷ்டிவாதத் தாக்குதல்களைப் பாருங்கள். முதலாவது ஆராய்ச்சியுரையிலேயே ''தொழிற்சங்க இயக்கத்திலுள்ள ஒரு சில ஊழியர்கள்'' மீது ஒரு அச்சுறுத்தும் ''சாடை'' இருத்தல் காண்கிறோம். இவர்கள் ''கட்சியால் நெடுங் கால முன்பே கோட்பாட்டு பூர்வமாக மறுத்து நிராகரிக்கப்பட்ட, சாமான்யமான தொழிற்சங்கவாதத்தினுள்'' தள்ளப்பட்டவர்கள் (கட்சியானது, மத்தியக் கமிட்டியின் பத்தொன்பது உறுப்பினர்களில் ஒரே ஒரு உறுப்பினரால் மட்டுமே பிரதிநிதித்துவப் படுத்தப்படுகிறது போலும்). 8ஆவது ஆராய்ச்சியுரை ''உயர் மட்ட தொழிற்சங்க ஊழியர்கள் மத்தியில் நிலவும் தனித் தொழில் வைதிகப் போக்கை'' ஆரவாரமான முறையில் கண்டனம் செய்கிறது (''உயர் மட்டத்தின்'' மீது மெய்யான அதிகார வர்க்க முறையில் கவனம் ஒன்று குவிக்கப்படுவதைக் கவனித்து கொள்ளுங்கள்!). 11ஆவது

ஆராய்ச்சியுரையின் தொடக்கம், ரு. க. கட்சியின் ஒன்ப தாவது காங்கிரஸ் தீர்மானங்களுக்குப் ''பெரும்பான்மை தொழிற்சங்கவாதிகள்'' ''சம்பிரதாயமான, அதாவது சொல்லளவிலான அங்கீகாரம் மட்டுமே தருகிறார்கள்'' என்று அதிசயிக்கத் தக்க வகையில் சாமர்த்தியமாகவும் முடிவானதாகவும் செய்முறையாகவும்... (இதற்கு நய நாகரிகமான சொல் எதுவோ) ''சாடை'' காட்டுகிறது.

தொழிற்சங்கவாதிகளில் பெரும்பான்மை(!!) கட்சி முடிவுகளுக்குச் சொல்லளவில் மட்டுமே அங்கீகாரம் தரு கிறது என்று கூறும் மிகவும் அதிகாரச் செல்வாக்குள்ள நீதிபதிகள் நம்மிடையே இருப்பதைக் காண்கிறோம்!

12ஆவது ஆராய்ச்சியுரை கூறுவதாவது:

''...ஒருங்கிணைவுக்கான வாய்ப்பை எதிர்த்து பல தொழிற்சங்கவாதிகள் மேலும் அதிக பகைமை கொண்ட தான, சமரசத்திற்கு இடமற்ற நிலையை மேற்கொள் கிறார்கள்... அவர்கள் மத்தியில் தோழர்கள் தோம்ஸ்கி யும் லசோவ்ஸ்கியும் இருக்கக் காண்கிறோம். இதற்கும் மேல், பல தொழிற்சங்கவாதிகள் புதிய கடமைகள் மற் றும் முறைகளைத் தடைப்படுத்துவது மூலம் தம் மத்தியில் தனிக் குழு உணர்வையும் பொருளாதாரத்தின் சம்பந் தப்பட்ட துறைகளில் ஈர்க்கப்பட்டு வரும் புதிய ஊழியர் கள் பால் பகைமையான ஒரு உணர்வையும் வளர்த்துக் கொள்ளப் பார்க்கிறார்கள், அதன் மூலம் தொழிற்சங் கங்களில் ஒழுங்கமைக்கப்பட்ட தொழிலாளர் மத்தியில் ஒதுக்க தொழிற்சங்கவாதத்தின் எச்சங்களை உண்மை யிலேயே ஊட்டி வளர்க்கிறார்கள்.''

இந்த வாதங்களை வாசகர் கவனமாகப் பரிசீலித்துத் தீரச் சிந்தித்துப் பார்ப்பாராக. இவற்றில் ''முத்துக்கள்'' அப்படியே நிரம்பி வழிகின்றன. முதலாவதாக, இந்தப் பிரகடனம் கோஷ்டிவாதத்தின் நோக்கு நிலையில் இருந்து மதிப்பீடு செய்யப்பட வேண்டும்! திரோத்ஸ்கியும் ''வேறு பல'' இராணுவத் துறை ஊழியர்களும் அதிகார வர்க்க உணர்வை வளர்த்துக் கொண்டு இருக்கிறார்கள், காட்டு மிராண்டித்தனத்தின் எச்சங்களை ஊக்குவிக்கிறார்கள் என்று குற்றம் சாட்டி தோம்ஸ்கி ஒரு கொள்கை விளக் கத்தை வெளியிட்டிருப்பாரானால், திரோத்ஸ்கி என்ன சொல்லியிருப்பார், அதை அவர் எப்படிச் சொல்லியிருப் பார் என்பதைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். இங்கே

பகைமைத் தன்மை, கோஷ்டித் தன்மை அனைத்தையும் காணத் தவறுகின்ற, திட்டவட்டமாகவும் கவனிக்கத் தவறுகின்ற, அறவே கவனிக்கத் தவறுகின்ற, இது பெத்ரோகிராத் தோழர்களின் அறிவிப்பைக் காட்டிலும் மேலும் எவ்வளவு அதிக கோஷ்டித் தன்மை வாய்ந்தது என்பதைப் பார்க்க மறுக்கின்ற புஹாரின், பிரியொபிரழேன்ஸ்கி, செரெப்ரியக்கோவ் மற்றும் இதரர்களது "பங்கு" என்ன?

இரண்டாவதாக, இந்த விஷயம் எப்படி அணுகப்படுகிறது என்பதை நெருக்கமாகப் பார்ப்போம்: பல தொழிற்சங்கவாதிகள் "தமது மத்தியில் ஒரு உணர்வை வளர்க்கப் பார்க்கிறார்கள்"... இது முற்றிலும் ஒரு அதிகார வர்க்க அணுகுமுறை. இதில் முழுமையாகக் காணும் அம்சம் கோடிக்கணக்கான மக்கள் திரளினரின் வளர்ச்சி மட்டமோ, வாழ்க்கை நிலைமைகளோ அல்ல, மாறாக "தமது மத்தியில்" தோம்ஸ்கியும் லசோவ்ஸ்கியும் வளர்க்க முயலும் "உணர்வே".

மூன்றாவதாக, அவரும் "இடைப்பட்ட அடிதாங்கித் தன்மையுடைய" புஹாரின், இதரர்களும் இத்தகைய கவனத்துடன் தட்டிக் கழிப்புச் செய்தும் மூடிமறைத்தும் வரும் இந்த முழுச் சர்ச்சையின் சாரத்தையும் தோழர் திரோத்ஸ்கி தம்மை அறியாமலே வெளிப்படுத்தி விட்டார்.

விவாதத்தின் சாரம் மற்றும் போராட்டத்தின் மூல ஊற்று என்ன? பல தொழிற்சங்கவாதிகள் புதிய கடமைகள், முறைகளைத் தடை செய்து, புதிய அலுவலர்கள் குறித்துத் தம் மத்தியில் ஒரு பகைமை உணர்வை வளர்த்து வர முயல்கிறார்கள் என்ற விவரமா?

அல்லது, தொழிற்சங்கங்களில் ஒழுங்கமைக்கபட்ட தொழிலாளர் திரளினர் நியாயமாகவே கண்டனம் தெரிவித்து வருகின்றனர், அதிகார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல்களைத் திருத்தி அகற்ற மறுக்கும் புதிய அலுவலர்களை வெளியே தள்ளுவதற்குத் தவிர்க்க முடியாத வகையில் அவர்கள் தயார் நிலையைக் காட்டும் விவரமா?

யாரோ சிலர் "புதிய கடமைகளையும் முறைகளையும்" புரிந்து கொள்ள மறுத்து விட்டார்களா?

அல்லது யாரோ சிலர் புதிய கடமைகள், முறைகள்

பற்றி ஏராளமாகப் பேசி, அதிகார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல்களைத் தாம் தாங்கி ஆதரிப்பதை மறைக்க விகாரமான முயற்சி செய்கிறார்களா?

முழுச் சர்ச்சையின் இந்த சாரத்தைத்தான் வாசகர் மனத்தில் இருத்த வேண்டும்.

### சம்பிரதாய ஜனநாயகமும் புரட்சிகர அக்கறையும்

''தொழிலாளர்களின் ஜனநாயகம் குருட்டு வழிபாட்டிலிருந்து விடுபட்டது'' என்று தோழர் திரோத்ஸ்கி தமது ஆராய்ச்சியுரைகளில் எழுதுகிறார், இவை ''கூட்டு வேலையின் பலனாகும்''. ''இதன் ஏக நோக்கம் புரட்சிகர அக்கறையாகும்'' (ஆராய்ச்சியுரை 23).

தோழர் திரோத்ஸ்கியின் இந்த ஆராய்ச்சியுரைகள் அவரைக் குளறுபடியில் தள்ளி விட்டன. அவற்றில் சரியாக இருக்கும் பகுதி புதியதல்ல, இதற்கும் மேல் இது அவருக்கு எதிராகத் திரும்பியுள்ளது. புதிதாக இருக்கும் பகுதி அனைத்தும் பிழையானது.

தோழர் திரோத்ஸ்கியின் சரியான முன்கூற்றுகளை நான் எழுதி வைத்திருக்கிறேன். அவை 23ஆவது ஆராய்ச்சியுரையில் உள்ள கருத்தைப் பொறுத்தவரை மட்டுமன்றி (கிலாவ்பலிட்பூட்* குறித்து) மற்றவற்றையும் பொறுத்தவரை அவருக்கு எதிராக உள்ளன.

சம்பிரதாய ஜனநாயக விதிகளின் கீழ், திரோத்ஸ்கிக்கு மத்தியக் கமிட்டி முழுவதற்கும் எதிராகக் கூட ஒரு கோஷ்டிவாதக் கொள்கை விளக்கத்துடன் முன்வருவதற்கான ஓர் உரிமை இருந்தது. இது மறுக்க முடியாதது. 1920 டிசம்பர் 24இல் ஏற்கப்பட்ட விவாத சுதந்திரம் பற்றிய அதன் முடிவு மூலம் மத்தியக் கமிட்டி இந்த சம்பிரதாய உரிமையை அங்கீகாரம் செய்து விட்டது என்பதும் கூட மறுக்க முடியாதது. இடைப்பட்ட அடிதாங்கித் தன்மையுடைய புஹாரின் இந்த சம்பிரதாய உரிமையை திரோத்ஸ்கி விஷயத்தில் அங்கீகரித்தார், ஆனால் பெத்ரோகிராத் கிளையின் விஷயத்தில் அங்கீகரிக்கவில்லை.

---

* கிலாவ்பலிட்பூட்—ரயில்வே போக்குவரத்துத் துறை மக்கள் கமிசாரகத்தின் பிரதான அரசியல் இலாகா. —ப-ர்.

காரணம், 1920 டிசம்பர் 30ந் தேதி ''தொழிலாளர் ஜனநாயகம் என்னும் புனித கோஷத்திற்குள்'' அவர் சொற்பொழிவாற்றத் தொடங்கி விட்டதே போலும் (சுருக்கெழுத்தாளர் அறிக்கை, பக்கம் 45)...

நல்லது, புரட்சிகர அக்கறை விஷயம் என்ன?

''திசெக்த்ரான்'' அல்லது ''இடைப்பட்ட'' கோஷ்டியின் கோஷ்டிவாதத் தற்பெருமையால் கண்ணவிந்து போகாத காரியவாத மனப்பாங்குடைய எவரேனும், சரியான மனநிலையில் இருக்கும் எவரேனும் தொழிற்சங்க இயக்கம் பற்றிய பிரச்சினை மீது திரோத்ஸ்கி போன்ற அத்தகைய முக்கிய தலைவர் செய்யும் அத்தகைய பிரகடனம் புரட்சிகர அக்கறையை ஊக்குவிக்கிறது என்று கூறுவாரா??

திரோத்ஸ்கியின் ''புதிய கடமைகளும் முறைகளும்'' உண்மையில் எவ்வளவு பிழைபட்டனவாக இருக்கின்றனவோ (அவை குறித்து பின்னர் விளக்குவோம்), அந்த அளவுக்கு பிழையில்லாதவை என்று வைத்துக் கொண்டாலும் கூட, அவரது இத்தகைய அணுகுமுறையே அவருக்கும் கட்சி, தொழிற்சங்க இயக்கம், லட்சக்கணக்கான தொழிற்சங்க உறுப்பினர்களின் பயிற்சி மற்றும் குடியரசுக்கு தீங்கு விளைக்கும் என்பதை மறுக்க முடியுமா??

இந்தப் பட்டம் அவர்கள் மீது திணிக்கும் கடமைகள் பற்றி நினைக்கப் போவதில்லை என்று அவர்கள் உறுதியாக முடிவு செய்திருப்பதன் காரணத்தால்தான், கருணைமிகு புஹாரினும் அவரது குழுவும் தம்மை ''இடைப்பட்ட'' குழுவினர் என்று அழைத்துக் கொள்கிறார்கள் போலத் தோன்றுகிறது.

## தொழிற்சங்க இயக்கத்திலான பிளவுகளின் அரசியல் அபாயம்

முதலில் முற்றிலும் அற்பமானதாகத் தோற்றமளிக்கும் சின்னஞ்சிறு வேறுபாட்டில் இருந்து பெரிய கருத்து வேறுபாடு சில சமயம் வளர்ந்தெழுகிறது என்பதை எல்லோரும் அறிவார்கள். ஒவ்வொருவரும் தமது வாழ்நாட்களில் பலமுறை பட்டுக் கொள்ளும் சிறு வெட்டுக் காயம், அல்லது சிராய்ப்பு புண்ணாகும் பட்சத்தில், அந்தக் குருதி

யில் நஞ்சு கலக்கும் பட்சத்தில் அது மிகவும் ஆபத்தான தாகிவிடும், உயிருக்கே உலை வைப்பதாகும் என்பதை எல்லோரும் அறிவார்கள். இது எந்த வகையான மோதலிலும் முற்றிலும் தனிப்பட்ட தகராறிலும்கூட நேரலாம். இது அரசியலிலும் நிகழ்கிறது.

எந்த ஒரு வேறுபாடும் அற்பமான ஒன்றாக இருந்தாலும்கூட அது ஒரு பிளவாக வளர்வதற்கு சந்தர்ப்பம் இருக்கும் பட்சத்தில் அரசியல் ரீதியில் அபாயகரமான தாகித் தீரும். அரசியல் கட்டமைப்பு முழுவதையும் குலுக்கி நாசமாக்கி விடும் அல்லது தோழர் புஹாரினின் உவமையைப் பயன்படுத்திக் கூறினால் வீழ்ச்சிக்கு இட்டுச் செல்லும் வகைப்பட்டதான பிளவையே இங்கு நான் குறிப்பிடுகிறேன்.

பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் கீழ் இருக்கும் ஒரு நாட்டில் பாட்டாளிகளின் அணிகளிலோ, பாட்டாளி வர்க்கக் கட்சிக்கும் பாட்டாளி மக்கள் திரளுக்கும் இடையிலோ ஒரு பிளவு ஏற்படுவது, குறிப்பாக பாட்டாளி வர்க்கம் மக்கள் தொகையில் ஒரு சிறுபான்மையாக அமைந்திருக்கும் பொழுது, சற்று ஆபத்தானது என்பதல்ல, மிகவும் அதிக ஆபத்தானதாகும் என்பது தெளிவு. தொழிற்சங்க இயக்கத்திலான பிளவுகள் (இந்த இயக்கத்தைக் கிட்டத்தட்ட ஸ்தாபனத் திரட்சியுள்ள பாட்டாளிகள் முழுமையின் இயக்கம் என்று 1920 டிசம்பர் 30இல் ஆற்றிய எனது உரையில் வலியுறுத்துவதற்குக் கடுமையாக முயன்றிருக்கிறேன்) பாட்டாளி மக்கள் திரளில் பிளவுகள் என்றே துல்லியமாகப் பொருள்படும்.

இதனால்தான், 1920 நவம்பர் 2—6ந் தேதிகளில் நடந்த தொழிற்சங்கங்களின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாட்டில் இந்த விவகாரம் முழுவதும் துவங்கிய போது (இங்குதான் இது அவ்வாறு துவங்கியது) மாநாடு முடிந்த உடனே—நான் தவறு செய்கிறேன், மாநாட்டின் போது—தோழர் தோம்ஸ்கி அரசியல் குழுவின் முன்னால் கடுஞ் சினத்துடன் தோன்றி, மிகவும் சுமுக மனநிலை கொண்ட தோழர் ருத்சுதாக்கினுடைய முழு ஆதரவுடன், மாநாட்டில் தோழர் திரோத்ஸ்கி தொழிற்சங்கங்களை ''துப்புரவாக்குவது'' பற்றிப் பேசினார் என்றும் அவர் (தோம்ஸ்கி) இதை எதிர்த்தார் என்றும் விவரிக்கத் தொடங்கினார்.

அது நிகழ்ந்த போது, கொள்கைதான் (அதாவது கட்சி யின் தொழிற்சங்கக் கொள்கை) சர்ச்சையின் மூலவேராக இருக்கிறது என்றும் தோழர் தோம்ஸ்கிக்கு எதிராகத் தோழர் திரோத்ஸ்கி தனது ''துப்புரவாக்கும்'' கொள் கையுடன் வந்தது முற்றிலும் தவறானது என்றும் அங் கேயே அப்பொழுதே நான் முடிவு செய்தேன். ஏனென் றால் ''புதிய கடமைகள், முறைகள்'' மூலம் (திரோத்ஸ்கி யின் ஆராய்ச்சியுரை 12) இந்த ''துப்புரவாக்கும் கொள்கை'' ஓரளவுக்கு நியாயப்படுத்தப்பட்டாலும்கூட, இது ஒரு பிளவை ஏற்படுத்துவதாக அச்சுறுத்துவதால் இந்த சமயத் தில் இந்த நிலைமையில் இதை அனுமதிக்க முடியாது.

''மேலிருந்து துப்புரவாக்கும்'' கொள்கை தம் மீது சார்த்தப்படுவது தோழர் திரோத்ஸ்கிக்குப் ''படுமோச மான கேலிப் போலித்தனமாக'' இப்போது தோன்று கிறது (லே. திரோத்ஸ்கி, பெத்ரோகிராத் தோழர்களுக்கு ஒரு பதில்'', பிராவ்தா, இதழ் 9, 1921 ஜனவரி 15). ஆனால் ''துப்புரவாக்குதல்'' என்பது ஒரு மெய்யான ''கோஷம்'', தோழர் திரோத்ஸ்கியால் தொழிற்சங்கங்களின் ஐந்தா வது அகில ருஷ்ய மாநாட்டில் உச்சரிக்கப்பட்ட பிறகு கட்சி முழுவதிலும் தொழிற்சங்கங்களிலும் ''பற்றிக் கொண்டு விட்டது'' என்று கூறப்படும் பொருளில் மட்டு மல்ல, துரதிருஷ்டவசமாக இன்றும்கூட மேலும் அதிகக் கருத்தாழமான அர்த்தத்தில் இது உண்மையில் நிலவு கிறது. இது மட்டுமே தொழிற்சங்கங்களின் பங்கும் பணிகளும் எனும் தலைப்பிலான கொள்கை விளக்கப் பிரசுரத்தின் முழு உணர்வையும் முழுப் போக்கையும் பொழிப்பு செய்து அளிக்கிறது. தோழர் திரோத்ஸ்கியின் இந்தக் கொள்கை விளக்கப் பிரசுரம் ''மேலிருந்து துப்புரவாக்கும்'' கொள் கையின் உணர்வைத் தன்னுள் ஏற்றுக் கொண்டிருக்கிறது. ''அவர்கள் தம் மத்தியில் புதிய ஊழியர்கள் பால் பகைமை யான ஒரு உணர்வை வளர்த்துக் கொள்ளப் பார்க் கிறார்கள்'' என்று தோழர் தோம்ஸ்கி மீதும் அல்லது ''பல தொழிற்சங்கவாதிகள்'' மீதும் கூறப்படும் குற்றச் சாட்டை நினைவு கூருங்கள் போதும்!

தொழிற்சங்கங்களின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாடு (1920 நவம்பர் 2—6) பிளவுகள் ஏற்படக் கூடியதான ஒரு சுற்றுச் சூழலின் எதிர்காலக் கூறுகளை மட்டுமே

கண்டது என்றால், திசெக்த்ரானின் அகத்தேயான பிளவு[50] 1920 டிசம்பரிலேயே மெய்நடப்பாகி விட்டது.

இந்த நிகழ்வு நமது சர்ச்சைகளின் அரசியல் சாரத்தைப் புரிந்து கொள்வதற்கு அடிப்படையானது, முக்கியமானது; இதை அமுக்கி வைப்பது காரியங்களுக்கு உதவியாக இருக்கும் என்று கருதுவார்களானால் தோழர்கள் திரோத்ஸ்கியும் புஹாரினும் அதனால் தவறு புரிந்தவர்களாவார்கள். இந்த விஷயத்தில் அமுக்கி வைத்தல் ஒரு ''அடிதாங்கி''விளைவை ஏற்படுத்தாது, மாறாக உணர்ச்சிகளைக் கிளறி விடும். காரணம், இந்தப் பிரச்சினை சம்பவங்களால் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பது மட்டுமல்ல, தோழர் திரோத்ஸ்கியால் தமது கொள்கைப் பிரசுரத்தில் வலியுறுத்தப்பட்டும் உள்ளது. இந்தப் பிரசுரம்தான் நான் மேற்கோள் காட்டியுள்ள வாசகங்களில், குறிப்பாக 12ஆவது ஆராய்ச்சியுரையில், இந்த விவகாரத்தின் சாரம், ''பல தொழிற்சங்கவாதிகள் தம் மத்தியில் புதிய ஊழியர்கள் பால் பகைமையான ஒரு உணர்வை வளர்த்துக் கொள்ளப் பார்க்கிறார்கள்'' என்பதா அல்லது அதிகார வர்க்கத்தின் ஒரு சில பயனற்ற, பாதகமான மிகைச் செயல்கள் காரணமாக (உதாரணமாக திசெக்த்ரானில்) **மக்கள்** திரளிடையே எழும் ''பகைமை'' நியாயமானதா என்ற கேள்வியை மீண்டும் மீண்டும் எழுப்புகிறது.

1920 டிசம்பர் 30இல் அவர் ஆற்றிய ஆக முதலாவது உரையிலேயே தோழர் ஸினோவியெவ் இப்பிரச்சினையை மொட்டையாகவும் சரியாகவும் சாற்றினார். ''தோழர் திரோத்ஸ்கியின் நிதானம் தவறிய ஆதரவாளர்கள்'' தான் ஒரு பிளவைக் கொண்டு வந்தார்கள் என்று அவர் கூறினார். இதனால்தான் தோழர் புஹாரின் தோழர் ஸினோவியெவின் உரையை ''ஏராளமான வெப்பக் காற்று'' என்று நிந்தனையாக வருணித்தார் போலும்? ஆனால் 1920 டிசம்பர் 30ந் தேதி விவாதத்தைப் பற்றிய சுருக்கெழுத்தாளர் அறிக்கையைப் படிக்கும் ஒவ்வொரு கட்சி உறுப்பினரும் இது உண்மை அல்ல என்பதைப் பார்க்க முடியும். தோழர் ஸினோவியெவ்தான் மெய்விவரங்களை மேற்கோள் காட்டிச் செயல்படுகிறார் என்பதையும் திரோத்ஸ்கியும் புஹாரினும் மெய்விவரங்கள் இல்லாத,

அறிவுஜீவிகளியல்பான ''சொல்லடுக்குகளில்'' ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதையும் அவர் காண முடியும்.

''திசெக்த்ரான் மண்கால்களில் நிற்கிறது, ஏற்கெனவே மூன்று பகுதிகளாகப் பிளந்து விட்டது'' என்று தோழர் ஸினோவியெவ் கூறிய போது தோழர் சஸ்னோவ்ஸ்கி குறுக்கிட்டுச் சொன்னார்:

''அது நீங்கள் ஊக்குவித்துள்ள பிளவாகும்'' (சுருக்கெழுத்தாளர் அறிக்கை, பக்கம் 15).

இது மிகவும் கடுமையான குற்றச்சாட்டு. இது நிரூபிக்கப்படுமானால் தொழிற்சங்கங்களில் ஒன்றிலாயினும் கூட பிளவை ஊக்குவித்த குற்றம் புரிந்த நபர்களுக்கு மத்தியக் கமிட்டியிலோ, ரு. க. கட்சியிலோ, நமது குடியரசின் தொழிற்சங்கங்களிலோ இடமில்லை என்பது நிச்சயம். நல்ல காலம் இந்தக் கடுமையான குற்றச்சாட்டு ஒரு தோழரால் முன்யோசனை அற்ற முறையில் முன்வைக்கப்பட்டது. இவர் இதற்கு முன்பும் முன்யோசனை அற்ற வாதங்களில் அடிக்கடி ''வசமிழந்து போனவர்'' என்பதை வருத்தத்துடன் கூற வேண்டியிருக்கிறது. தோழர் சஸ்னோவ்ஸ்கி மற்றபடி மிகச் சிறந்ததான தமது கட்டுரைகளில், உதாரணமாக உற்பத்திப் பிரசாரம் என்ற பெயரில் ''ஒரு குடம் தேனில் ஒரு துளி விஷம்'' நுழைக்க ஏற்பாடு செய்திருக்கிறார். இது அதன் ஆக்க அம்சங்கள் அனைத்தையும் மறுத்து விட்டது. சில நபர்கள் (தோழர் புஹாரின் போன்றவர்கள்) அவர்களது மன அமைவு நலம் காரணமாகவே மிகவும் கடுமையான போராட்டத்தின் போதும் கூடத் தமது தாக்குதலில் வன்மம் ஏற்கும் சக்தியற்று இருக்கிறார்கள், மற்றவர்கள் அத்தகைய மன அமைவு நலம் இன்மையால் அவ்வாறு செய்யக் கூடியவர்கள், மிகவும் அடிக்கடி செய்யவும் செய்கிறார்கள். இந்த விஷயத்தில் தனது நடவடிக்கைகளைப் பற்றித் தோழர் சஸ்னோவ்ஸ்கி கவனம் செலுத்துவது நல்லது, இதில் தமது நண்பர்களின் உதவியையும் கோரலாம்.

இந்தக் குற்றச்சாட்டு முன்யோசனை இன்றி, துரதிருஷ்டவசமான முறையில், வெளிப்படையான ''கோஷ்டி வாத'' வடிவில் தொடுக்கப்பட்ட போதிலும் அது இருக்கவே செய்கிறது என்று சிலர் கூற முடியும். முக்கியமான ஒரு காரியத்தில் மோசமான சொற்களில் சித்திரிக்கப்படும்

உண்மை சொல்லாமல் அமுக்கி விடுவதை விடவும் ஏற்புடையதாகும்.

காரியம் முக்கியமானது என்பதில் ஐயத்திற்கே இடமில்லை. காரணம், இந்தப் பிரச்சினையின் அறுதிக்கூறு, பொதுவாக சந்தேகிக்கப்படுவதை விடவும் அதிக அளவுக்கு இந்த வட்டாரத்தில்தான் காணக்கிடக்கிறது. இதை நான் மீண்டும் கூறுகிறேன். அதிருஷ்டவசமாக தோழர் சஸ்னோவ்ஸ்கியின் வாதத்திற்குச் சாரத்தில் ஒரு விடையை வழங்குவதற்குரிய போதியளவு பாரபட்சமற்றதான, முற்ற முடிவான மெய்விவரங்கள் நம்மிடம் உள்ளன.

முதலாவதாக, சுருக்கெழுத்தாளர் அறிக்கை வெளியிடப்பட்டுள்ள அதே பக்கத்தில், தோழர் சஸ்னோவ்ஸ்கியின் குற்றச்சாட்டை மறுத்தும் முடிவான மெய்நடப்புகளைத் துல்லியமாகச் சுட்டிக் காட்டியும் வெளியிடப்பட்டதான தோழர் ஸினோவியெவின் அறிக்கையும் உள்ளது. தோழர் திரோத்ஸ்கி முன்வைக்க விரும்பிய குற்றச்சாட்டு (கோஷ்டிவாத உணர்ச்சி வெறி மூலம் செய்யப்பட்டது என்பது தெளிவு என்று நான் சேர்த்துக் கூறுகிறேன்) தோழர் சஸ்னோவ்ஸ்கியின் குற்றச்சாட்டில் இருந்து முற்றிலும் வேறுபட்டது என்று தோழர் ஸினோவியெவ் காட்டினார். செப்டெம்பரில் நடைபெற்ற ரு. க. கட்சியின் அகில ருஷ்ய மாநாட்டில் தோழர் ஸினோவியெவ் ஆற்றிய உரை பிளவை ஏற்படுத்த உதவியது அல்லது பிளவை ஏற்படுத்தியது என்பதே தோழர் திரோத்ஸ்கியின் குற்றச்சாட்டு. (இந்தக் குற்றச்சாட்டு முற்றிலும் ஏற்கத்தகாதது, காரணம், ஸினோவியெவின் செப்டெம்பர் உரை சாரத்தில் மத்தியக் கமிட்டியாலும் கட்சியாலும் ஒத்துக்கொள்ளப்பட்டது, அதற்குப் பின்னும் சம்பிரதாயமான எதிர்ப்பு ஆட்சேபம் எதுவும் இல்லை என்பதை இடைக் குறிப்பாகச் சொல்லி வைக்கிறேன்.)

மத்தியக் கமிட்டிக் கூட்டத்தில் தோழர் ருத்சுதாக் குறிப்பேடுகளைப் பயன்படுத்தி, ''தனது (ஸினோவியெவ்) உரைகளோ, அகில ருஷ்ய மாநாடோ நடைபெறுவதற்கு நெடுங் காலம் முன்பே இந்த விஷயம் (திசெக்த்ரான் அதிகார வர்க்கத்தின் ஒரு சில பயனற்ற, பாதகமான மிகைச் செயல்கள் பற்றியது) சைபீரியாவில், வோல்கா பிரதேசத்தில், வடக்கு மற்றும் தெற்குப் பகுதிகளில் பரி

சீலிக்கப்பட்டு விட்டதாக'' நிரூபித்துக் காட்டினார் என்று தோழர் ஸினோவியெவ் பதிலளித்தார்.

அது மெய்நடப்பின் முற்றிலும் துல்லியமான, தெட்டத் தெளிவான ஒரு அறிவிப்பு ஆகும். மிகவும் பொறுப்பு வாய்ந்த ஆயிரக்கணக்கான கட்சி உறுப்பினர்கள் முன்னிலையில் தமது முதல் உரையில் இந்த அறிவிப்பு தோழர் ஸினோவியெவால் செய்யப்பட்டது. அவர் வெளியிட்ட மெய்விவரங்களை பின்னால் இரண்டு தடவை பேசிய தோழர் திரோத்ஸ்கியோ, பின்னால் பேசிய தோழர் புஹாரினோ மறுக்கவில்லை.

இரண்டாவதாக, அதே சுருக்கெழுத்தாளர் அறிக்கையில் தரப்பட்டிருந்த; நீர்வழிப் போக்குவரத்துத் துறையில் வேலை செய்து வரும் கம்யூனிஸ்டுகளுக்கும் திசெக்த்ரான் மாநாட்டிலான கம்யூனிஸ்டு குழுவுக்கும் இடையிலான தகராறு சம்பந்தமான ரு. க. கட்சியின் மத்தியக் கமிட்டி பேரவைக் கூட்டத்தின் தீர்மானம், (1920 டிசம்பர் 7ந் தேதியது) தோழர் சஸ்னோவ்ஸ்கியின் குற்றச்சாட்டை மேலும் திட்டவட்டமாகவும் அதிகாரபூர்வமாகவும் மறுத்துள்ளது. திசெக்த்ரான் பற்றிக் குறிப்பிடும் இத்தீர்மானத்தின் பகுதி கூறுவதாவது:

''திசெக்த்ரானுக்கும் நீர்வழிப் போக்குவரத்துத் துறைத் தொழிலாளர்களுக்கும் இடையிலான தகராறு தொடர்பாக மத்தியக் கமிட்டி: 1) இணைக்கப்பட்ட திசெக்த்ரானின் அகத்தே ஒரு நீர்வழிப் போக்குவரத்துத் துறைப் பிரிவை நிறுவுவது என்றும் 2) ஒரு புதிய திசெக்த்ரானுக்கு சகஜமான தேர்தல்களை நடத்துவதற்காக பிப்ரவரியில் ரயில்வேத் தொழிலாளர் மற்றும் நீர்வழிப் போக்குவரத்துத் துறைத் தொழிலாளரின் காங்கிரசைக் கூட்டுவது என்றும் 3) அது வரையில் செயல்படும்படி பழைய திசெக்த்ரானை அதிகாரப்படுத்துவது என்றும் 4) உடனடியாகவே கிலாவ்பலிட்வோட்* மற்றும் கிலாவ்பலிட்பூட் இரண்டையும் ஒழித்து அவற்றின் எல்லா நிதிகள் மற்றும் ஆதார உடைமைகளையும் சகஜமான ஜனநாயக வழிகளில் தொழிற்சங்கத்துக்கு மாற்றி ஒப்படைப்பது என்றும் தீர்மானிக்கிறது.''

---

* கிலாவ்பலிட்வோட்—நீர்வழிப் போக்குவரத்துத் துறை மக்கள் கமிசாரகத்தின் பிரதான அரசியல் இலாகா. —ப-ர்.

நீர்வழிப் போக்குவரத்துத் துறைத் தொழிலாளர்கள் எவ்வகையிலும் கண்டிக்கப்படவில்லை என்பது மட்டுமன்றி, அவர்கள் முக்கியமான எல்லா அம்சங்களிலும் சரியாகவே நடந்து கொண்டிருக்கிறார்கள் என்று கருத வேண்டும் என்பதையும் இது காட்டுகிறது. இருப்பினும் 1921 ஜனவரி 14ந் தேதிய பொதுவான கொள்கை விளக்கத்தில் கையொப்பமிட்ட மத்தியக் கமிட்டி உறுப்பினர்கள் எவரும் (காமெனெவ் தவிர) இந்தத் தீர்மானத்தை ஆதரித்து வாக்களிக்கவில்லை (இங்கு குறிக்கப்படும் கொள்கை விளக்கம் தொழிற்சங்கங்களின் பங்கும் பணிகளும். மத்தியக் கமிட்டி மற்றும் தொழிற்சங்க கமிஷன் உறுப்பினர்களின் ஒரு பிரிவு மத்தியக் கமிட்டிக்குச் சமர்ப்பித்த ரு. க. கட்சியின் பத்தாவது காங்கிரசின் நகல் முடிவு. இதில் கையொப்பமிட்டவர்கள் மத்தியில் மத்தியக் கமிட்டி உறுப்பினரல்லாத, தொழிற்சங்க கமிஷன் உறுப்பினரான லசோவ்ஸ்கி உட்படுவார். மற்றையோர் தோம்ஸ்கி, கலீனின், ருத்சுதாக், ஸினோவியெவ், ஸ்தாலின், லெனின், காமெனெவ், பெத்ரோவ்ஸ்கி மற்றும் அர்த்தியோம் செர்கேயெவ் ஆவர்).

இந்தத் தீர்மானம் மேலே பட்டியலிட்டுத் தரப்பட்ட மத்தியக் கமிட்டி உறுப்பினர்களுக்கு எதிராக, அதாவது எமது பிரிவுக்கு எதிராக நிறைவேற்றப்பட்டது. ஏனென்றால் நாங்கள் பழைய திசெக்த்ரான் தற்காலிகமாகத் தொடர்ந்து இருக்கும்படி அனுமதிப்பதற்கு எதிராக வாக்களித்திருப்போம். நாம் நிச்சயமாக வெற்றி பெறுவோம் என்பதனால், திரோத்ஸ்கி புஹாரின் தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்களிக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார். இல்லாவிடில் எங்கள் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கும். நவம்பர் மாதத்தில் திரோத்ஸ்கிக்கு ஆதரவாக இருந்த தோழர் ரீக்கவ் டிசம்பரில் திசெக்த்ரானுக்கும் நீர்வழிப் போக்குவரத்துத் துறை தொழிலாளர்களுக்கும் இடையிலான தகராறைப்[51] பரிசீலித்த தொழிற்சங்கக் கமிஷனில் பங்கு கொண்டார், பிந்திய தரப்பினர் நிலை சரி என்பதை அவர் கண்டார்.

தொகுத்துக் கூறுவோம்: மத்தியக் கமிட்டியின் டிசம்பர் 7ந் தேதிக் கூட்டத்தின் பெரும்பான்மையில் தோழர்கள் திரோத்ஸ்கி, புஹாரின், பிரியொபிரஷேன்ஸ்கி,

செரெப்ரியக்கோவ், மற்றவர்கள் இருந்தனர். இவர்கள் திசெக்த்ரானுக்கு எதிராக ஒருதலைப்பட்சமானவர்கள் என்று சந்தேகிக்க முடியாதவர்கள். இருப்பினும் அவர் களது தீர்மானத்தின் சாரம் நீர்வழிப் போக்குவரத்துத் தொழிலாளர்களைக் கண்டனம் செய்யவில்லை, மாறாக திசெக்த்ரானைக் கண்டனம் செய்தது. அதை அவர்கள் அங்கேயே அப்பொழுதே கலைத்து விடாததோடு நின்று விட்டார்கள். இது சஸ்னோவ்ஸ்கியின் குற்றச்சாட்டுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை என்பதை நிரூபிக்கிறது.

தெளிவின்மைக்கு இடம் தராமல் இருக்க வேண்டு மானால், கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயம் இருக் கிறது. நான் திரும்பத் திரும்பக் குறிப்பிட்டிருக்கும் ''அதி கார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல் கள்'' என்ன? இந்தக் குற்றச்சாட்டுக்கு ஆதாரம் இல்லை அல்லது மிகைப்படுத்தப்பட்டிருக்கிறது அல்லவா?

மீண்டும் ஒருமுறை தோழர் ஸினோவியெவ் 1920 டிசம்பர் 30இல் நிகழ்த்திய தனது முதல் உரையிலேயே இதற்கு மறுமொழி வழங்குகிறார். இந்தப் பதில் எவரும் எதிர்பார்க்கும் வகையில் துல்லியமாக உள்ளது. அவர் தோழர் ஸோஃபினுடைய 1920 மே 3ந் தேதி நீர்வழிப் போக்குவரத்துச் சுற்றறிக்கையில் இருந்து மேற்கோள் காட்டினார்: ''கமிட்டி செக்கடி வேலை ஒழிக்கப்பட் டது''.[52] இது ஒரு அடிப்படையான தவறு என்று தோழர் ஸினோவியெவ் கூறியது முற்றிலும் சரியே. இது அதிகார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல்களை யும் ''பதவி நியமன அமைப்பு முறையையும்'' சான்று மூலம் மெய்ப்பித்துக்காட்டியது. ஆனால் நியமனம் பெற்ற சில நபர்கள் தோழர் ஸோஃபைப் போலப் ''பாதி அள வுக்குக் கூட அனுபவமோ, தேர்ச்சியோ உடையவர்கள் அல்ல'' என்று அங்கேயே அப்பொழுதே தோழர் ஸினோவி யெவ் கூறினார். மத்தியக் கமிட்டி ஸோஃபை மிகவும் மதிப்பு வாய்ந்த ஊழியர் என்று குறிப்பிட்டிருப்பதைக் கேட்டிருக்கிறேன், இது பாதுகாப்புக் கவுன்சிலில் நான் வைத்துள்ள என் சொந்த மதிப்பீடுகளில் இருந்தே முற்றி லும் நிரூபிக்கப்படும். இத்தகைய தோழர்களது அதி காரச் செல்வாக்கை அரித்தழிக்க வேண்டும் அல்லது (தோழர் திரோத்ஸ்கி தனது அறிக்கையின் 25ஆம் பக்கத்

தில் சிறிதும் நியாயமின்றி உத்தேசிப்பது போல) அவர்களை வீண்பழிக்கு இரையாக்க வேண்டும் என்றோ எவருடைய மனதிலும் தோன்றவில்லை. ''நியமனம் பெற்றவர்களின்'' தவறுகளைத் திருத்த முயல்வோரால் அவர்களது அதிகாரச் செல்வாக்கு அரித்தழிக்கப்படவில்லை, ஆனால் அவர்கள் தவறு செய்யும் போதுகூட தாங்கி ஆதரிப்பவர்களால்தான் அரித்தழிக்கப்படுகிறது.

எனவே தொழிற்சங்க இயக்கத்திற்குள் பிளவுகள் ஏற்படும் அபாயம் கற்பனை அல்ல, மாறாக மெய்யானது. உண்மையான கருத்து வேறுபாடுகள், அதிகார வர்க்கத்தின் ஒரு சில பயனற்ற, பாதகமான மிகைச் செயல்கள், பதவி நியமன அமைப்பு முறை ஆகியவற்றை நியாயப்படுத்தக் கூடாது, தாங்கி ஆதரிக்கக் கூடாது, மாறாக அவை திருத்தப்பட வேண்டும் என்ற அளவுக்கே உண்மையில் சுருக்கமடைகின்றன. இதில் காணப்படுவதெல்லாம் இவை மட்டுமே.

### கோட்பாட்டின் மீது கருத்து வேறுபாடுகள்

கோட்பாட்டின் மீது ஆழமான, அடிப்படையான கருத்து வேறுபாடுகள் இருப்பதால், இவை மிகவும் கடுமையான கோஷ்டிவாதப் பிரகடனங்களின் நியாய நிறுவீடாகக் காட்சி தரவில்லையா என்று நம்மிடம் கேட்கப்படலாம். முற்றிலும் புதியதான, புரிந்து கொள்ளக் கடினமான சில கருத்துகளை ஆழப்பதில் வைப்பது தேவையாக இருக்கும் பட்சத்தில் ஒரு பிளவு என்னும் விஷயத்தை நியாயம் என்று சில சமயம் நிறுவிக் காட்டுவது சாத்தியமா?

வேறுபாடுகள் உண்மையிலேயே மிகவும் ஆழமானவையாக இருந்து, கட்சி அல்லது தொழிலாளி வர்க்கத்தின் கொள்கையிலான தவறான போக்கைத் திருத்த வேறு வழி இல்லை என்னும் நிலையில் இது சாத்தியம் என்பது திண்ணம்.

ஆனால் அத்தகைய வேறுபாடுகள் எதுவும் இல்லை என்பதே முழுமையான விஷயம். தோழர் திரோத்ஸ்கி அவற்றைச் சுட்டிக்காட்ட முயன்றார், தோல்வியடைந்தார். அவரது பிரசுரம் வெளியிடப்படுவதற்கு முன்னால்

(டிசம்பர் 25) நிபந்தனையான அல்லது சமரசமான ஒரு அணுகுமுறை சாத்தியமாக, அவசியமாக இருந்தது (''இத் தகைய அணுகுமுறை வேறுபாடுகள் மற்றும் தெளிவற்ற புதிய பணிகள் விஷயத்தில்கூட தள்ளப்பட வேண்டும்''); ஆனால் அது பிரசுரிக்கப்பட்டதற்குப் பின்னால் நாம் கூற வேண்டி வந்தது: தோழர் திரோத்ஸ்கி தமது புதிய முடிவுகள் எல்லாவற்றிலும் சாராம்சத்தில் தவறு செய் கிறார்.

தோழர் திரோத்ஸ்கியின் ஆராய்ச்சியுரைகளைத் தொழிற்சங்கங்களின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாட் டால் (நவம்பர் 2—6) ஏற்றுக் கொள்ளப்பட்ட ருத்சுதாக் கின் ஆராய்ச்சியுரைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இது மிகவும் தெளிவாகத் தெரிய வரும். பின்னதை நான் எனது டிசம்பர் 30ந் தேதி உரையிலும் பிராவ்தாவின் ஜனவரி 21ந் தேதிய இதழிலும் மேற்கோள் காட்டினேன்.[53] அவை திரோத்ஸ்கியின் ஆராய்ச்சியுரைகளை விடவும் அதிக முழுமையாகவும் மேலும் சரியானவையாகவும் இருக் கின்றன, திரோத்ஸ்கி எங்கெல்லாம் ருத்சுதாக்கிடம் இருந்து மாறுபடுகிறாரோ அங்கெல்லாம் தவறு செய் கிறார்.

டிசம்பர் 7ந் தேதிய மத்தியக் கமிட்டித் தீர்மானத்தில் தோழர் புஹாரின் நுழைப்பதற்கு அவசரப்பட்ட இந்தப் புகழார்ந்த ''உற்பத்தி ஜனநாயகம்'' பற்றிப் பார்ப்போம். இது ஒரு கட்டுரை அல்லது உரையில் மட்டும் தோன்றி இருக்குமானால் இந்தத் தீங்குறப் பிறந்த, அறிவுஜீவிகளி யல்பான செயற்கைச் சொற்களை (''தந்திரமான சொல் லணி'') பற்றி வெறும் சொல்வாதம் புரிதல் கேலிக்கிட மானது. ஆனால் இந்தச் சொற்களின் மீது தமது ஆராய்ச்சி யுரைகளை விடாது வற்புறுத்துவது மூலம் திரோத்ஸ்கியும் புஹாரினும்தான் இந்தக் கேலிக்கிடமான நிலைமைக்குத் தம்மைஆளாக்கிக்கொண்டார்கள்.அவர்களது''கொள்கை விளக்கங்களை'' தொழிற்சங்கங்களால் ஏற்றுக்கொள் ளப்பட்டதான ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளில் இருந்து இனம் பிரித்துக் காட்டும் ஒரே அம்சம் இந்தச் சொற்களே!

இந்தச் சொற்கள் தத்துவார்த்த முறையில் தவ றானவை. இறுதியாக ஆய்வு செய்யும் போது ஒவ்வொரு

வகைப்பட்ட ஜனநாயகமும் பொதுவான அரசியல் மேற் கட்டுமானம் என்ற முறையில் (இது வர்க்கங்கள் ஒழிக்கப் பட்டு, வர்க்கங்கள் இல்லாத சமுதாயம் நிறுவப்படும் வரை நிலவ வேண்டும்) உற்பத்திக்குத் துணை செய்கிறது, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் உற்பத்தி உறவுகளால் இறுதியாக நிர்ணயிக்கப்படுகிறது. எனவே ''உற்பத்தி ஜனநாயகம்'' என்பதைத் தனித்துச் சுட்டுவது பொரு ளற்றது, காரணம் இது குழப்பத்துக்கு இட்டுச் செல்லும், இதன் பலன் வெறும் போலியே ஆகும். இதுவே முதல் கருத்து.

இரண்டாவதாக, டிசம்பர் 7ந் தேதிய மத்தியக் கமிட்டிப் பேரவைக் கூட்டத்திற்கு புஹாரின் எழுதிய தீர்மானத்தில் தரப்பட்டிருக்கும் அவர் சொந்த விளக் கத்தைப் பார்ப்பீர்களானால் அவர் பின்வருமாறு கூறு வதைக் காணலாம்: ''இதற்கேற்ப தொழிலாளர் ஜன நாயகத்தின் முறைகள் உற்பத்தி ஜனநாயகத்தினுடைய வையாக இருத்தல் வேண்டும். இதன் பொருள்...'' ''இதன் பொருள்'' என்பதைக் குறித்துக் கொள்க! உண்மை என்னவென்றால், புஹாரின் மக்கள் திரளுக்கான தனது வேண்டுகோளை அத்தகைய வடிவமைதி அற்ற சொற்களில் தொடங்குவதால் அவற்றிற்கு ஒரு விசேஷ விளக்கத்தைத் தர வேண்டியுள்ளது. இது ஜனநாயக நோக்கு நிலையில் இருந்து ஜனநாயக விரோதமானது என்று நான் கருதுகிறேன். ஒரு அகராதி தேவைப்படக் கூடிய சொற்களைப் பயன்படுத்தாமல் மக்கள் திரளுக்காக நீங் கள் எழுத வேண்டும். ''உற்பத்தி'' நோக்கு நிலையில் இருந்து இது மோசமானது, காரணம், அவசியமில்லாத தொடர்களை விளக்குவதில் நேரம் வீணாகிறது. அவர் கூறுகிறார்: ''இதன் பொருள், வேட்பாளர் பெயர் முன் மொழிதல், வழிமொழிதல், தேர்தல்கள், இதரவை அவர் களது அரசியல் பற்றுறுதி மட்டுமன்றி, அவர்களது காரியமாற்றும் திறமை, நிர்வாக அனுபவம், தலைமை ஆற்றல், உழைக்கும் மக்கள் திரளினரின் பொருளாயத மற்றும் ஆன்மீக நலன்கள் மீது அவர்களது நிரூபிக்கப்பட்ட அக்கறை ஆகியவற்றின் மீதும் கவனம் செலுத்திச் செய்யப் பட வேண்டும்.''

அங்கு வாதமிடும் முறை தெளிவாகச் செயற்கை

யானது, தவறானது. காரணம், ஜனநாயகம் என்பது ''வேட்பாளர் பெயர் முன்மொழிதல், வழிமொழிதல், தேர்தல்கள், இதரவற்றை'' விடவும் அதிகமான ஒன்று என்பது தெரிந்த விஷயமாகும். அப்புறம், மேலும் எல்லாத் தேர்தல்களும் அரசியல் பற்றுறுதி மற்றும் காரியமாற்றும் திறமை மீது கவனம் செலுத்தி நடத்தப்பட வேண்டும் என்பதில்லை. தோழர் திரோத்ஸ்கி எப்படி இருந்த போதிலும், பல கோடிப் பேர் கொண்ட ஒரு அமைப்புக்கு ஒரு சில சதவிகிதம் ஆதரவு திரட்டுவோரும் அதிகார வர்க்கத்தினரும் இருக்க வேண்டும் (இன்னும் பல ஆண்டுகளுக்கு நல்ல அதிகார வர்க்கத்தினர் இல்லாமல் நாம் காரியம் செய்ய முடியாது). ஆனால் நாம் ''ஆதரவு திரட்டல்'' மற்றும் ''அதிகார வர்க்க'' ஜனநாயகம் பற்றிப் பேசவில்லை.

மூன்றாவதாக, தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், நிறுவன ஒழுங்கமைப்பாளர்கள், நிர்வாகிகள் ஆகியோர் மட்டுமே என்று கருதிப் பார்ப்பது தவறாகும். எப்படியும் அவர்கள் சிறுபான்மையான தலைசிறந்த மனிதர்கள் தான். நாம் கவனத்தில் கொள்ள வேண்டுவது மக்கள் திரளை, சாமான்ய அணிகளையே. இதை ருத்சுதாக் மேலும் எளிதான, புரிந்து கொள்ளக் கூடிய, தத்துவார்த்த முறையில் மேலும் தவறில்லாத வகையில் விளக்குகிறார் (ஆராய்ச்சியுரை 6):

> ''...அவரது உற்பத்திப் பணிகள் பொருத்தமானவை, முக்கியமானவை என்பதை உற்பத்தியில் பங்கெடுக்கும் ஒவ்வொருவர் மனதிலும் பதியவைக்க வேண்டும்; உற்பத்தியில் பங்கெடுக்கும் ஒவ்வொருவரும் தனக்கு ஒதுக்கப்பட்ட பணியை நிறைவேற்றுவதில் கைகொடுத்தால் மட்டும் போதாது, மாறாக, உற்பத்தித் துறையில் ஏதேனும் தொழில்நுணுக்க, ஸ்தாபனக் குறைகள் இருப்பின் அவற்றைத் திருத்தி அகற்றுவதில் அறிவுப் பூர்வமான பங்கும் கூட வகிக்க வேண்டும்.''

நான்காவதாக, ''உற்பத்தி ஜனநாயகம்'' என்னும் சொற்கள் தவறான விளக்கத்துக்குத்தானே இடமளிக்கின்றன. இவற்றை சர்வாதிகாரம் மற்றும் தனிநபர் அதிகாரத்தை மறுத்து நிராகரிப்பது என்ற பொருளில் கொள்ளலாம்; சாமான்ய ஜனநாயகத்தை அமுல் நிறுத்தி

வைத்தல் அல்லது அதைத் தட்டிக் கழிப்பதற்கான சாக்குப்போக்கு என்ற பொருளில் இவற்றை கொள்ளலாம். இந்த இரு விளக்கங்களும் தீங்கு விளைப்பவை, நீண்ட விசேஷ விளக்கவுரைகள் இன்றி இவற்றைத் தவிர்க்க முடியாது.

இதே கருத்துகளைப் பற்றிய ருத்சுதாக்கின் நேரடியான அறிவிப்பு மேலும் சரியானது, மேலும் வாய்ப்பானது. ஜனவரி 11ந் தேதி **பிராவ்தா** இதழில் **உற்பத்தி ஜனநாயகம்** என்னும் திரோத்ஸ்கியின் கட்டுரை, அவரது பதம் பிழையானது, பொருத்தமற்றது என்பதை மறுக்கத் தவறிவிட்டது மட்டுமல்ல (அவர் இந்த முழுப் பிரச்சினையையும் திசை திருப்பி தனது ஆராய்ச்சியுரைகளை ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளுடன் ஒப்பிடத் தவறிவிடுகிறார்), இதை ''போர் ஜனநாயகம்'' பற்றிய சொற்களுடன் இணைப்பதன் மூலம் மறைமுகமாக உறுதிப்படுத்துகிறது. அதிருஷ்டவசமாக எனது நினைவுக்கு எட்டிய வரையில் இந்த வகையான பதம் பற்றி நாம் என்றுமே ஒரு கோஷ்டிவாதச் சர்ச்சையில் ஈடுபட்டதில்லை.

திரோத்ஸ்கியின் ''உற்பத்திச் சூழ்நிலை'' என்னும் பதம் உண்மையில் இருந்து வெகுவாகத் திரும்பியதாக இருக்கிறது. ஸினோவியெவ் இதைப் பற்றி ஏளனம் செய்தது முற்றிலும் நியாயமே. இதனால் திரோத்ஸ்கி மிகவும் கோபமடைந்தார், பின்வரும் வாதத்துடன் முன் வந்தார்: ''நாம் ஒரு சமயம் போர் சூழ்நிலையைப் பெற்றிருந்தோம்.... இப்போது மேலோட்டமாக மட்டுமன்றி தொழிலாளர் திரளின் அடி ஆழத்திலும் உற்பத்திச் சூழ்நிலை இடம் பெற வேண்டும். முன்னர் போர்முனைகள் பால் வெளிக்காட்டப்பட்டது போன்று இது உற்பத்தித் துறையிலான முனைப்பான நடைமுறை அக்கறையாக இருக்க வேண்டும்.'' மிக நன்று, அப்படித்தான்: இந்தச் செய்தி ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளின் மொழியில் கூறுவதானால் ''தொழிலாளர் திரளின் அடி ஆழத்துக்கு'' கொண்டு செல்லப்பட வேண்டும். காரணம், ''உற்பத்திச் சூழ்நிலை'' போன்ற சொற்கள் ஒரு புன்னகையையோ, அசட்டைக் குறிப்பையோதான் பெற்றுத் தரும். தோழர் திரோத்ஸ்கியின் ''உற்பத்திச் சூழ்நிலை'' சாராம்சத்தில் உற்பத்திப் பிரசாரம் போன்று அதே பொருளைக் கொண்

டிருக்கிறது. ஆனால் தொழிலாளர் திரளின் அடி ஆழத்தில் உற்பத்திப் பிரசாரம் நடத்தப்படும் போது இத்தகைய தொடர்களைத் தவிர்க்க வேண்டும். மக்கள் திரள் மத்தியில் இதை எவ்வாறு செய்யாமல் இருப்பது என்பதற்கு இந்தப் பதம் ஒரு உதாரணமாகும்.

### அரசியலும் பொருளியலும். இயக்கவியலும் கதம்பவாதமும்

இத்தகைய சாதாரண பிரச்சினைக்கு நாம் திரும்ப வேண்டியிருப்பது விசித்திரமே, ஆனால் துரதிருஷ்டவசமாக திரோத்ஸ்கி மற்றும் புஹாரின் பொருட்டு நாம் இவ்வாறு செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது. பிரச்சினையைத் திடீரென்று "மாற்றியதற்காகவும்" அவர்கள் "பொருளாதார" அணுகுமுறையைப் பின்பற்றுகின்ற பொழுது நான் "அரசியல்" அணுகுமுறையை மேற்கொள்வதற்காகவும் அவர்கள் இருவருமே என்னை இடித்துரைக்கின்றனர். புஹாரின் இதைத் தனது ஆராய்ச்சியுரைகளில் வழங்கியுள்ளதோடு, மேலும் இவை இரண்டையும் தான் இணைத்து வருவதாகக் கூறும் பாங்கில் இருதரப்புகளுக்கும் "மேலே எழுவதற்கு" முயன்றுள்ளார்.

இது வெளிப்படையான தத்துவார்த்தத் தவறாகும். எனது "அரசியல்" அணுகுமுறை ஒரு மார்க்சியவாதிக்கு முரணான முறையில், ஏற்பில்லாத முறையில் இடித்துரைக்கப்பட்டிருப்பதை முன்பே கேள்விப்பட்ட காரணத்தால் நான் எனது உரையில் அரசியல் என்பது பொருளியலின் ஒரு முனைப்படுத்தப்பட்ட வெளிப்பாடு என்று மறுபடியும் கூறினேன். எல்லா வகைகளிலும் அரசியல் பொருளியலை விட தலைமையான முக்கியத்துவமுடையது. வேறு வகையாக வாதம் செய்வது என்பது மார்க்சியத்தின் அரிச்சுவடியையே மறந்துவிடுவதாகும்.

நான் எனது அரசியல் மதிப்பீட்டில் தவறு செய்துள்ளேனா? அப்படி நீங்கள் கருதினால் அதைக் கூறுங்கள் மற்றும் நிரூபியுங்கள். ஆனால் அரசியல் அணுகுமுறை "பொருளாதார" அணுகுமுறைக்குச் சமமானது என்று நீங்கள் கூறும் போது (அல்லது மறைகுறிப்பாகவும் கூட

சுட்டும் போது), ''இரண்டையும் ஒன்றாக எடுத்துக் கொள்ளலாம்'' என்று சொல்லும் போது நீங்கள் மார்க்சியத்தின் அரிச்சுவடியையே மறந்து விடுகிறீர்கள்.

வேறு சொற்களில் கூறினால், அரசியல் அணுகுமுறை என்பதன் அர்த்தம் என்ன? தொழிற்சங்கங்கள் பாலான தவறான போக்கு சோவியத் ஆட்சி அதிகாரத்தை நாசப் படுத்தும், பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைக் குப்புறக் கவிழ்க்கும் என்பதே. (ருஷ்யாவைப் போன்ற ஒரு விவசாய நாட்டில் தொழிற்சங்கங்களுக்கும் கட்சிக்கும் இடையே கட்சியின் தவறு காரணமாகப் பிளவு ஏற்பட்டால் சோவியத் ஆட்சி அதிகாரம் சரிந்து விழுவது நிச்சயம்). இந்தக் கருத்துரை அடிப்படையில் சோதிக்கப்பட முடியும் (சோதிக்கப்பட வேண்டும்), இதன் பொருள் இந்த அணுகுமுறையின் சரியான அம்சங்களையும் தவறான அம்சங்களையும் பரிசீலித்து ஒரு முடிவை எடுக்க வேண்டும் என்பதாகும். உங்களது அரசியல் அணுகு முறையை நான் ''பாராட்டி வரவேற்கிறேன்'', "ஆனால்" அது அரசியல் அணுகுமுறை மட்டுமே ஆகும், நமக்கு ஒரு ''பொருளாதார அணுகுமுறையும்கூட'' வேண்டும் என்று சொல்வது, அந்தக் குறிப்பிட்ட நடவடிக்கையை மேற் கொள்வது மூலம் நீங்கள் உங்கள் கழுத்தை முறித்துக் கொள்ள நேரலாம் என்னும் உங்கள் கருத்தை நான் ''பாராட்டி வரவேற்கிறேன்'', ஆனால் நிர்வாணமாகவும் பட்டினியாகவும் இருப்பதைக் காட்டிலும் நன்கு உண்டும் உடுத்தும் இருப்பது நல்லது என்பதையும்கூட நீங்கள் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லுவதற்குச் சமமானதாகும்.

அரசியல் மற்றும் பொருளாதார அணுகுமுறைகளை இணைக்க வேண்டும் என்ற புஹாரினின் பிடிவாதம் அவரைத் தத்துவார்த்த ரீதியில் கதம்பவாதத்தில் கொண்டு போய்த் தள்ளிவிட்டது.

தாம் உற்பத்தி வளர்ச்சியில் அக்கறை கொண்டிருப்பதாகவும் அப்படியிருக்க நம் மனதில் சம்பிரதாய ஜனநாயகத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பது போலவும் நிலைநாட்ட திரோத்ஸ்கியும் புஹாரினும் முயல்கிறார்கள்.ஆனால் இந்தப் படப்பிடிப்பு தவறானது. காரணம், இந்தப் பிரச்சினை பற்றி பின்வரும் நிர்ணயிப்

புக்கு மட்டுமே (இதைத்தான் மார்க்சிய நோக்கு நிலையும் அனுமதிக்கிறது) வர முடியும்: இந்தக் காரியத்தில் சரியான அரசியல் அணுகுமுறை இல்லாமல் சம்பந்தப்பட்ட வர்க்கத்தால் ஆட்சியில் நிலைத்திருக்க முடியாது, பின்விளைவாக அது தனது உற்பத்திப் பிரச்சினைக்குத் தீர்வு காணவும் திராணியற்றதாகிவிடும்.

ஸ்தூலமான ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். ஸினோவியெவ் கூறுகிறார்: ''தொழிற்சங்கங்களுக்கு உள்ளே விவகாரங்களை ஒரு பிளவு வரை கொண்டு செல்வதன் மூலம் நீங்கள் ஒரு அரசியல் தவற்றைச் செய்கிறீர்கள். பொதுக் குளிப்பறைகள் கட்டுவதை ஒரு உதாரணமாகச் சுட்டி முன்பே 1920 ஜனவரியிலேயே நான் உற்பத்தி வளர்ச்சி குறித்துப் பேசினேன், எழுதினேன்''. திரோத்ஸ்கி விடையளிக்கிறார்: ''பொதுக் குளிப்பறைகளை உதாரணம் காட்டிப் பிரசுரம் எழுதுவது எளிதானது (பக்கம் 29), ஆனால் தொழிற்சங்கங்களின் பணிகள் குறித்து உங்களிடம் 'ஒரு வார்த்தை கூட இல்லை' '' (பக்கம் 22).

இது தவறு. பொதுக் குளிப்பறை உதாரணம், இந்தச் சிலேடையைப் பொறுத்துக் கொள்வீர்களானால், ஒரு சில ''உற்பத்தி ஜனநாயகங்கள்'', இடையே வீசப்பட்டதான ஒரு டஜன் ''உற்பத்திச் சூழ்நிலைகள்'' தம்மை விட மதிப்புடையது. அது தொழிற்சங்கங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை மக்கள் திரளிடம், மக்கள் திரளின் ''அடி ஆழத்திடம்'' கூறுகிறது, இதை மிகவும் எளிதான, புரிந்து கொள்ளக் கூடிய பதங்களில் எடுத்துக் கூறுகிறது. அப்படி இருக்க இந்த ''உற்பத்திச் சூழ்நிலைகள்'' மற்றும் ''ஜனநாயகங்கள்'' யாவும் உழைக்கும் மக்கள் திரளின் பார்வையை மறைக்கும் இருட்டாக, அவர்களது புரிவை மழுக்கடிப்பதாக இருக்கின்றன.

''தொழிற்சங்கப் பொறியமைவு என்று அறியப்படும் நெம்புகோல்களால் வகிக்கப்பட வேண்டிய, தற்போது வகிக்கப்பட்டு வரும் பாத்திரம் குறித்து'' ''லெனின் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை'' (பக்கம் 66) என்று தோழர் திரோத்ஸ்கி என்னைக் கடிந்து கொண்டார்.

தோழர் திரோத்ஸ்கியே, நான் இதில் வேறுபடு

கிறேன். ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளை முழுமையாகவும் படித்து அவற்றை அங்கீகரித்தது மூலம் இப் பிரச்சினை மீது நான் ஒரு அறிக்கை செய்தேன். அது உங்கள் ஆராய்ச்சியுரைகள், உங்களது அறிக்கை அல்லது உப அறிக்கை, விவாதத்திற்குப் பதிலளித்து ஆற்றிய உரை ஆகிய அனைத்தையும் விட அதிக கூடுதலானது, முழுமையானது, சரியானது, எளிமையானது, மேலும் தெளிவானது. ''உற்பத்தி ஜனநாயகம்'', ''ஒருங்கிணைவு'' பற்றி முற்றிலும் சூட்சுமமான (எனவே வெறுமையான) பேச்சினை விடவும் பெருமளவு அதிகமாக பண்டவகை போனசுகளும் கட்டுப்பாடு சம்பந்தமான தோழர்கள் நீதிமன்றமும் பொருளாதார வளர்ச்சிக்கும் தொழில்துறை நிர்வாகத்துக்கும் உற்பத்தியில் மேலும் விரிவான தொழிற் சங்கப் பங்கேற்புக்கும் வகை செய்வன என்று நான் வற் புறுத்திக் கூறுகிறேன்.

''உற்பத்தி'' நோக்கு நிலையினை முன்வைக்கவும் (திரோத்ஸ்கி) அல்லது ஒரு தலைப்பட்சமான அரசியல் அணுகுமுறையைச் சமாளித்து அகற்றி அதைப் பொருளாதார அணுகுமுறையுடன் இணைக்கவும் (புஹாரின்) செய்யும் முயற்சியின் பின்னே நாம் காண்பதாவது:

1) மார்க்சியத்தைப் புறக்கணிப்பது, இது அரசியலுக்கும் பொருளியலுக்கும் இடையிலான உறவைத் தத்துவார்த்த ரீதியில் தவறான, கதம்பவாத முறையில் வரையறுப்பதில் வெளிப்படுகிறது;

2) அரசியல் தவறைத் தாங்கி ஆதரிப்பது அல்லது மூடி மறைப்பது, திரோத்ஸ்கியின் கொள்கைப் பிரசுரம் முழுவதிலும் விரவிக் கிடக்கும் துப்புரவாக்கும் கொள்கையில் இது வெளிப்பட்டுள்ளது. இத்தவறு ஒத்துக்கொள்ளப் பட்டுத் திருத்தப்படாவிட்டால் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் வீழ்ச்சிக்கு இட்டுச் செல்லும்;

3) முற்றிலும் பொருளாதார, உற்பத்தி சம்பந்தமான காரியங்களிலும் உற்பத்தியை எவ்வாறு அதிகரிப்பது என்னும் பிரச்சினையிலும் ஓர் அடி பின்னே; இது ஸ்தூலமான, நடைமுறையான, ஜீவாதாரமான, அவசரமான கடமைகளுடன் கூடிய (உற்பத்திப் பிரசாரத்தை அபிவிருத்தி செய்தல், பண்டவகை போனசுகளைச் சரியாக வினியோகிக்கத் தெரிந்து கொள்ளல், கட்டுப்பாடு

சம்பந்தமான தோழர்கள் நீதிமன்றம் மூலம் பலவந்தப் படுத்தலைச் சரியாகப் பயன்படுத்த அறிந்து கொள்ளல்) ருத்சுதாக்கின் செயல்தகைமையுள்ள ஆராய்ச்சியுரைகளில் இருந்து, மிகவும் நடைமுறை சாத்தியமும் காரியகரமுமான அனைத்தையும் அசட்டை செய்யும் சூட்சுமமான, கருத்தியலான, ''வெறுமையான'', தத்துவார்த்த ரீதியில் தவறான, அறிவுஜீவிகளியல்பான முறையில் வரையறுக்கப்பட்ட பொது ஆராய்ச்சியுரைகளை நோக்கி உண்மையிலேயே ஓர் அடி பின் செல்வதாகும்.

அரசியல் மற்றும் பொருளியல் பற்றிய இந்தப் பிரச்சினை மீது இங்கு ஸினோவியெவும் நானும் ஒரு புறமும், திரோத்ஸ்கியும் புஹாரினும் மறுபுறமுமாக இந்த முறையில்தான் உண்மையில் நிற்கிறோம்.

எனவே டிசம்பர் 30ந் தேதி அவர் ஆற்றிய உரையில் தோழர் திரோத்ஸ்கி எழுப்பிய பின்வரும் ஆட்சேபத்தைப் பற்றி நான் படித்த போது என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ''சோவியத்துகளின் எட்டாவது காங்கிரசில் நமது நிலைமை பற்றிய விவாதத்தில் நிகழ்த்திய தமது தொகுப்புரையில் தோழர் லெனின் நமக்குக் குறைவான அரசியலும் அதிகமான பொருளியலும் வேண்டும் என்று கூறினார், ஆனால் தொழிற்சங்கப் பிரச்சினைக்கு வந்த போது இந்த விவகாரத்தின் அரசியல் அம்சத்தை வலியுறுத்தினார்'' (பக்கம் 65). இந்தச் சொற்கள் ''மிகவும் பொருத்தமானவை'' என்று தோழர் திரோத்ஸ்கி கருதினார். உள்ளபடியே அவை கருத்துகளின் ஒரு பயங்கரமான குழப்பத்தை, உண்மையிலேயே மிகவும் மோசமான ஒரு ''சித்தாந்தக் குழப்பத்தை'' வெளிப்படுத்துகின்றன. நமக்கு அதிகமான பொருளியலும் குறைவான அரசியலும் தேவை என்று நான் எப்பொழுதும் சொல்லி வந்திருக்கிறேன், தொடர்ந்து சொல்லி வருவேன் என்பது திண்ணம். ஆனால் இதைப் பெற வேண்டுமானால் நாம் அரசியல் அபாயங்களையும் அரசியல் தவறுகளையும் திட்டவட்டமாக ஒழித்துக்கட்ட வேண்டும். தோழர் புஹாரினால் மேலும் உக்கிரமூட்டப்பட்ட தோழர் திரோத்ஸ்கியின் அரசியல் தவறுகள் பொருளாதாரப் பணிகளில் இருந்தும் ''உற்பத்தி'' வேலையில் இருந்தும் நமது கட்சியின் கவனத்தைத் திசைதிருப்புகின்றன;

இவற்றைத் திருத்துவதிலும் சிண்டிகலிசத் திரிபுவாதத்துடன் (இது பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் வீழ்ச்சிக்கு இட்டுச் செல்கிறது) தர்க்கம் செய்வதிலும் தொழிற்சங்க இயக்கத்தின் பாலான தவறான அணுகுமுறையை (இது சோவியத் ஆட்சி அதிகாரத்தின் வீழ்ச்சிக்கு இட்டுச் செல்கிறது) ஆட்சேபிப்பதிலும் நவம்பர் 2—6இல் நடைபெற்ற ஐந்தாவது அகில ருஷ்யத் தொழிற்சங்க மாநாட்டால் ஏற்கப்பட்ட ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளின் அடிப்படையில் பண்டவகை போனசுகளை வினியோகிப்பது, தோழர்கள் நீதிமன்றங்களை[54] நிறுவுவது, ஒன்றிணைவது[55] ஆகியவற்றில் சராத்தவ் மாவுமில் தொழிலாளர், தன்பாஸ் சுரங்கத் தொழிலாளர், பெத்ரோகிராத் உலோகத் தொழிலாளர் அல்லது வேறு இதர பிரிவினரில் யாருக்குச் சிறந்த பலன்கள் கிடைத்தன என்பது குறித்த ஒரு நடைமுறை காரியகரமான ''பொருளியல்'' விவாதம் நடத்துவதற்குப் பதிலாக பொதுவான ''ஆராய்ச்சியுரைகள்'' பற்றி விவாதம் செய்வதிலும் துரதிருஷ்டவசமாக நமது நேரத்தை வீணடிக்கும்படி செய்கின்றன.

ஒரு ''பரந்த விவாதத்தில்'' என்ன நன்மை இருக்கிறது என்பதை இப்பொழுது ஆராய்வோம். அரசியல் தவறுகள் பொருளாதாரப் பணிகளில் இருந்து கவனத்தைத் திசைதிருப்புவதை மீண்டும் காண்கிறோம். இந்தப் ''பரந்த'' விவாதத்தை நான் ஆதரிக்கவில்லை. ஒரு காரியகரமான விவாதத்தை நடத்தியிருக்க வேண்டிய தொழிற்சங்கக் கமிஷனின் வேலையை தோழர் திரோத்ஸ்கி சீர்குலைத்தது தவறு, ஒரு அரசியல் தவறு என்று நான் கருதினேன், இன்னும் கருதுகிறேன். அடிதாங்கியின் பணிகளை (இதில் அவர்கள் மீண்டும் இயக்கவியலுக்குப் பதிலாகக் கதம்பவாதத்தைக் கடைப்பிடித்தனர்) தப்பாகப் புரிந்து கொள்ளும் அரசியல் தவற்றை புஹாரினின் இடைப்பட்ட குழு செய்து விட்டது என்று நினைக்கிறேன். ''அடிதாங்கி'' நோக்கு நிலையிலிருந்தே அவர்கள் எந்த ஒரு பரந்த விவாதத்தையும் தீவிரமாக எதிர்த்திருக்க வேண்டும், இந்த விஷயம் தொழிற்சங்கக் கமிஷனால் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று கோரியிருக்கவும் வேண்டும். இதிலிருந்து விளைந்தது இதோ:

''தொழிலாளர் ஜனநாயகம் எனும் புதிய, புனிதமான

கோஷத்தை நாம் பறைசாற்றியுள்ளோம்.இதன் பொருள், எல்லாப் பிரச்சினைகளையும் குறுகிய சபைகளிலோ, சிறிய கூட்டங்களிலோ, எந்தவொரு தமது சொந்த கார்ப்பொரேஷனிலோ இனிமேல் விவாதிக்கக் கூடாது, மாறாக பெரிய கூட்டங்களில் விவாதத்திற்கு வைக்க வேண்டும் என்பதாகும். இதைப் போன்ற இத்தகைய ஒரு பெரிய கூட்டத்தின் முன் தொழிற்சங்கங்களின் பங்கு பற்றிய பிரச்சினையை எடுத்துச் செல்வது மூலம் நாம் பின்னோக்கி அடி வைக்கவில்லை, முன்னோக்கியே அடி வைக்கிறோம்'' (பக்கம் 45) என்று சொல்லும் அளவுக்கு டிசம்பர் 30ந் தேதி புஹாரின் முன் சென்றார். ஸினோவியெவ் வீண் சொற்களைப் பேசுவதாகவும் ஜனநாயகத்தை மிகையாக வலியுறுத்துவதாகவும் இந்த மனிதர் குற்றம் சாட்டினார்! அவர் தான் ஏராளமான வீண் சொற்களைத் தந்துள்ளார், குளறுபடிகளைத் தோற்றுவித்திருக்கிறார் என்று நான் கூறுகிறேன். சம்பிரதாய ஜனநாயகம் புரட்சிகர அக்கறைக்குக் கீழ்ப்பட்டதாகவே இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ள அவர் முற்றிலும் தவறி விட்டார்!

திரோத்ஸ்கியின் நிலையும் இதுவே. ''இந்த விஷயத்தின் சாரத்தைப் பற்றிய விவாதத்தை எப்பாடுபட்டும் தவிர்க்கவோ,விலக்கிவைக்கவோ தான் லெனின் விரும்புகிறார்'' (பக்கம் 65) என்பது அவரது குற்றச்சாட்டு. அவர் கூறுகிறார்: ''கமிஷனில் சேவை புரிய மறுத்ததற்கான எனது காரணங்கள் மத்தியக் கமிட்டியில் தெளிவாகக் கூறப்பட்டன: கட்சிப் பத்திரிகைகளில் இந்தப் பிரச்சினைகள் பற்றி முழுமையாகக் கருத்துரைக்க இதர தோழர்களுக்குச் சமமாக நானும் அனுமதிக்கப்படும் காலம் வரை இந்த விவகாரங்களை ஒதுக்கமான முறையில் பரிசீலனை செய்வதால், பின்விளைவாக இந்தக் கமிஷன் பற்றிய பணிகளால் எவ்வித நன்மையும் ஏற்படும் என்று நான் எதிர்பார்க்கவில்லை'' (பக்கம் 69).

இதன் பலன் என்ன? டிசம்பர் 25இல் இந்தப் ''பரந்த விவாதத்தை'' திரோத்ஸ்கி தொடங்கி சற்றே ஒரு மாதம் கடந்துள்ளது. இந்த விவாதத்தில் அறவே சலிப்படையாத, இதன் பயனின்மையை (மேலும் மோசமாகக் கூறாவிடில்) உணராத பொறுப்பான கட்சி ஊழியர் நூற்றில் ஒருவரைக் கூடக் காண்பது அரிது. வெறும் சொற்களை

யும் மோசமான ஆராய்ச்சியுரைகளையும் விவாதிப்பதன் பேரில் திரோத்ஸ்கி கட்சி நேரத்தை வீணாக்கும்படி செய்திருக்கிறார். கமிஷனில் உண்மையிலேயே காரியகரமான பொருளாதார விவாதத்தை ''ஒதுக்கமானது'' என்று ஏளனம் செய்துள்ளார். இந்தக் கமிஷன் நடைமுறை அனுபவத்தை ஆராய்ந்து சரிபார்த்து அதன் படிப்பினைகளை, சுறுசுறுப்பான செயல்பாட்டுக்குப் பதில் எல்லா விதமான ''உற்பத்தி சூழ்நிலைகளிலும்'' நடத்தும் சொற்சிலம்பத்தை நோக்கிய பின்னேற்றத்திற்கு மாற்றாக மெய்யான ''உற்பத்தி'' வேலையில் முன்னேற்றம் நாடி முன்வைத்திருக்கிறது.

இந்த இகழார்ந்த ''ஒருங்கிணைவை'' எடுத்துக் கொள்ளுங்கள். இந்த விஷயத்தில் மௌனம் சாதிக்க வேண்டும் என்பதே டிசம்பர் 30இல் நான் கூறிய யோசனையாகும். காரணம், நாம் நமது சொந்த நடைமுறை அனுபவத்தையே ஆராய்ந்திருக்கவில்லை, அது இல்லாமல் ஒருங்கிணைவு பற்றிய எந்த ஒரு விவாதமும் ''வீண் சொற்களில்'' இறங்குவதில்தான் போய் முடியும், கட்சியின் சக்திகளைப் பொருளாதார வேலையில் இருந்து விலக்கி விடும். தேசிய பொருளாதாரக் கவுன்சில்களில் மூன்றில் ஒரு பங்கில் இருந்து பாதியும், பாதியில் இருந்து மூன்றில் இரண்டு பங்கும் தொழிற்சங்கவாதிகளைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்று திரோத்ஸ்கி தமது ஆராய்ச்சியுரைகளில் பிரேரணை செய்வதானது அதிகார வர்க்கத் தன்மை கொண்ட வீண் திட்டமிடலாகும் என்று நான் கூறினேன்.

இதற்காக புஹாரின் என்னைக் கடிந்து கொண்டார்; ''எதையேனும் விவாதிக்க மக்கள் கூடும் போது அவர்கள் செவிட்டு ஊமைகள் போல நடந்து கொள்ளக் கூடாது'' (அதன் வாசகப்படி!) என்ற கருத்தை அவர் எனக்கு விரிவாகவும் மிகவும் விவரமாகவும் நிரூபித்து எடுத்துரைத்ததை அறிக்கையின் 49ஆம் பக்கத்தில் இருந்து காண்கிறேன். திரோத்ஸ்கியும் கோபமடைந்து கூறியிருப்பதாவது.

''இந்தக் குறிப்பிட்ட தேதியில் தோழர் லெனின் இதை ஒரு அதிகார வர்க்கத் தீமை என்று வர்ணித்ததை நீங்கள்

ஒவ்வொருவரும் தயவு செய்து குறித்து வைத்துக் கொள் ளுங்கள். தொழிற்சங்கங்களின் அகில ருஷ்ய மத்தியக் கவுன்சில், தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன்சில், உலோகத் தொழிலாளர் சங்க மத்தியக் கமிட்டி, உலோகத் துறைப் பிரிவு ஆகியவற்றின் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கு முதல் பாதி வரையானவர்கள் பொது வில் இருக்க வேண்டும் என்பதை இன்னும் சில மாதங்களில் நமக்கு வழிகாட்டியாகவும் நோக்கமாகவும் ஏற்றுக் கொள்ளத்தான் போகிறோம் என்று முன்கூட்டியே கூற உரிமை எடுத்துக் கொள்கிறேன்...'' (பக்கம் 68).

இதை நான் படித்த போது ஒருங்கிணைவு சம்பந்த மாக அச்சடிக்கப்பட்ட அறிக்கைகளைத் தருமாறு தோழர் மில்யூத்தினை (தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன் சிலின் துணைத் தலைவர்) கேட்டுக் கொண்டேன். நான் எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன்: நமது நடை முறை அனுபவம் பற்றி ஆராய ஒரு சிறு துவக்கம் செய் தால் என்ன? மெய்விவரங்கள் இல்லாமல், கருத்து வேறு பாடுகளையும் நிர்ணயிப்புகளையும் ''உற்பத்தி ஜனநாய கங்களையும்'' கற்பனை செய்து கொண்டு பயன் ஏது மில்லாமல் ''பொதுக் கட்சி வீண் பேச்சில்'' (இது புஹா ரின் பயன்படுத்திய பதம், பக்கம் 47, ''துப்புரவாக்குதல்'' போன்று இதுவும் ஒரு ''கவர்ச்சிகரமான கோஷமாக'' மாற எல்லா வாய்ப்பும் உண்டு) ஈடுபடுவது மிகவும் சலிப் பூட்டுவதாக உள்ளது.

தோழர் மில்யூத்தின் எனக்கு சில புத்தகங்களை அனுப் பினார், சோவியத்துகளின் எட்டாவது அகில ருஷ்யக் காங் கிரசுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட தேசிய பொருளாதாரத் தலை மைக் கவுன்சிலின் அறிக்கை இவற்றில் உட்படும் (மாஸ்கோ, 1920; முன்னுரை, டிசம்பர் 19, 1920). இதன் 14ஆம் பக்கத்தில் நிர்வாக அமைப்புகளில் தொழிலாளர்களின் பங்கேற்பைக் காட்டும் ஒரு அட்டவணை இருக்கிறது. இதோ அந்த அட்டவணை (குபெர்னிய தேசிய பொருளா தாரக் கவுன்சில்கள் மற்றும் தொழிற்சாலைகளின் ஒரு பகுதியைப் பற்றிய விவரங்கள் மட்டுமே இதில் இடம் பெற்றுள்ளன):

| நிர்வாக அமைப்பு | உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை | தொழிலாளர்கள் | | நிபுணர்கள் | | அலுவலக ஊழியர்களும் ஏனையோரும் | |
|---|---|---|---|---|---|---|---|
| | | தொகை | சதவிகிதம் | தொகை | சதவிகிதம் | தொகை | சதவிகிதம் |
| தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன்சில், குபெர்னிய தேசிய பொருளாதாரக் கவுன்சில்களின் தலைமைக் குழு | *187* | *107* | *57.2* | *22* | *11.8* | *58* | *31.0* |
| பிரதம நிர்வாகங்கள், அமைப்பு இலாகாக்கள், மத்திய போர்டுகள், தலைமை அலுவலகங்களின் கூட்டுக் குழுக்கள் | *140* | *72* | *51.4* | *31* | *22.2* | *37* | *26.4* |
| தொழிற்சாலைகளின் கூட்டு முறை மற்றும் ஒரு நபர் நிர்வாகங்கள் | *1143* | *726* | *63.5* | *398* | *34.8* | *19* | *1.7* |
| மொத்தம் | *1470* | *905* | *61.6* | *451* | *30.7* | *114* | *7.7* |

ஆக, இப்பொழுதே நிர்வாக அமைப்புகளின் அலுவலர்களில் சராசரி 61.6 சதவிகிதம் பேர், அதாவது பாதிக்கும் அதிகமாகக் கிட்டத்தட்ட மூன்றில் இரண்டு பங்கினர் தொழிலாளர்கள் என்பதைக் காணலாம்! இந்த விஷயமாகத் திரோத்ஸ்கி தனது ஆராய்ச்சியுரைகளில் என்ன எழுதினாரோ அது அதிகார வர்க்க தோரணையின் செயலே என்பதை இது ஏற்கெனவே நிரூபிக்கிறது. ''மூன்றில் ஒரு பங்கில் இருந்து பாதி வரை'' என்றும் ''பாதியில் இருந்து மூன்றில் இரண்டு பங்கு வரை'' என்றும் பேசுவதும் தர்க்கம் செய்வதும் கொள்கை அறிக்கைகள் எழுதுவதும் மிகவும் பயனற்ற வகையைச் சேர்ந்த ''பொதுக் கட்சி வீண் பேச்சு''. இது உற்பத்தி வேலையில் இருந்து காலம், கவனம் மற்றும் மூல வளங்களைத் திசை திருப்புகிறது. இது ஆழ்ந்த பொருள் இல்லாத, வெட்டித்தனமான அரசியலாகும். இந்த நேரம் முழுவதிலும் கமிஷனில் பெருமளவுக்கு நல்ல வேலைகள் செய்திருக்க முடியும். மெய்விவரங்களை ஆராயாமல் எந்த ஆராய்ச்சியுரைகளையும் எழுத முடியாது என்று அனுபவமுள்ள நபர்கள் இங்கு மறுத்திருப்பார்கள்; உதாரணமாக, ஆயிரம் ''பொது ஊழியர்களில்'' இருந்து ஒரு டஜன் பேர்களைத் தேர்ந்தெடுப்பது மூலமும் எதார்த்தமான புள்ளிவிவரங்களுடன் அவர்களது மனப் பதிவுகளையும் முடிவுகளையும் ஒப்புநோக்குவது மூலமும் வருங்காலத்திற்குரிய நடைமுறை வழிகாட்டுதலைப் பெற முயல்வது மூலமும் அனுபவத்தைச் சரிபார்த்து செயல்பட இசைந்திருப்பார்கள். நமது அனுபவம் இவ்வாறு இருக்கும் நிலையில் நாம் உடனடியாக அதே பாதையில் போகிறோமா, அல்லது நமது பாதையில், வழிமுறைகளில், அணுகுமுறையில் ஏதேனும் மாற்றம் செய்கிறோமா, மற்றும் அதை எப்படிச் செய்கிறோம்; அல்லது லட்சியத்தின் நலனை முன்னிட்டு நின்று நிதானித்து அனுபவத்தை மீண்டும் மீண்டும் சீர்தூக்கிப்பார்த்து அங்குமிங்குமாகச் சில மாற்றங்கள் செய்கிறோமா, இதரவற்றைக் கருதிப் பார்த்திருப்பார்கள்.

தோழர்களே, மிகவும் முன்னேற்றமடைந்த நாடுகளிலும்கூட முதலாளிகளும் டிரஸ்டுகளைத் தோற்றுவிப்பவர்களும் தமது சொந்த மற்றும் பிறருடைய நடைமுறை

அனுபவத்தை ஆராய்ந்து சோதித்துப் பார்ப்பதற்கும் எண்ணிறந்த தொடக்கங்களையும் திருத்தங்களையும் செய்து ஒரு நிர்வாக முறையை உருவாக்குவதற்கும் தமது குறிப்பிட்ட தொழில், வர்த்தகத் துறைக்குத் தகுதியுள்ள நிர்வகிக்கும் முறை, முதுநிலை மற்றும் இளநிலை நிர்வாகி களைத் தேர்வு செய்வதற்கும் ஆண்டுக் கணக்கில் சில சமயம் பத்தாண்டுகளும் அதற்கு மேலும் பிடிக்கிறது என்பதை ஒரு உண்மையான ''பொருளாதார ஊழியர்'' (''உற்பத்திப் பிரசாரம்'' பற்றியும் சொல்ல என்னை அனுமதியுங்கள்!) நன்கு அறிவார். முதலாளித்துவத்தின் கீழ் இது பொது விதியாக இருந்தது. முதலாளித்துவமானது நாகரிக உலகம் முழுவதிலும் தனது பொருளாதார நட வடிக்கைகளை நூற்றாண்டுகள் கால அனுபவத்தையும் பழக்கங் களையும் அடிப்படையாக்கிப் புரிந்து வருகிறது. புது வழி கண்டு வரும் நாம் மக்களுக்குப் புதுப்பயிற்சி அளிக்க வும் முதலாளித்துவத்திடமிருந்து நமக்கு வந்துள்ள பழைய பழக்கங்களை மாற்றவும் நீடித்த, விடாப்பிடி யான, பொறுமையான முயற்சிகளைச் செய்ய வேண்டும். ஆனால் இதனைச் சிறிது சிறிதாகத்தான் செய்ய முடியும். திரோத்ஸ்கியின் அணுகுமுறை முற்றிலும் தவறானது. அவர் தமது டிசம்பர் 30ந் தேதி உரையில் வியந்து கேட் டார்: ''நமது தொழிலாளர்கள், கட்சி மற்றும் தொழிற் சங்க ஊழியர்களுக்கு உற்பத்திப் பயிற்சி ஏதேனும் உண்டா இல்லையா? ஆம் அல்லது இல்லை? நான் சொல் கிறேன்: இல்லை'' (பக்கம் 29). இது கேலிக்கூத்தான அணுகுமுறை. ஒரு டிவிஷனுக்குப் போதுமான கம்பளிக் காலணிகள் இருக்கிறதா? ஆம் அல்லது இல்லை? என்று பதில் கூறும்படி கேட்பது போல் இது இருக்கிறது.

இன்றிலிருந்து பத்து ஆண்டுகளுக்குப் பிறகும் கூட, எப்படி இராணுவ இலாகா, தொழிற்சங்கங்கள் மற்றும் கட்சியைச் சேர்ந்த எல்லா ஊழியர்களும் போதிய இரா ணுவப் பயிற்சி பெற்றிருக்க மாட்டார்களோ அதே போன்ற வழியில் நமது கட்சி மற்றும் தொழிற்சங்கங்களின் ஊழியர்கள் அனைவரும் போதிய உற்பத்திப் பயிற்சி பெற்றிருக்க மாட்டார்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். ஆயினும் சுமார் ஆயிரம் தொழிலாளர் களையும் தொழிற்சங்க உறுப்பினர்களையும் பிரதிநிதி

களையும் நிர்வாகத்தில் பங்கேற்கச் செய்வது மூலமும் தொழிற்சாலைகளையும் தலைமை அலுவலகங்களையும் இதர உயர்மட்ட அமைப்புகளையும் இயக்கி நடத்தும்படி செய்வது மூலமும் உற்பத்திப் பயிற்சியில் ஒரு துவக்கத்தைச் செய்திருக்கிறோம். ''உற்பத்திப் பயிற்சியின்''—நம்மை, பழைய தலைமறைவு ஊழியர்களையும் முழுநேரப் பத்திரிகையாளர்களையும் பயிற்றுவிப்பதன் — அடிப் படைக் கோட்பாடு என்ன? ''எண்ணித் துணிக கருமம்'' என்ற பொது விதியின்படி நாம் நமது சொந்த நடைமுறை அனுபவத்தை மிகுந்த பிரயாசையுடனும் விவரமாகவும் ஆராயத் தொடங்க வேண்டும், அவ்வாறு செய்யும்படி மற்றவர்களுக்கும் போதிக்க வேண்டும் என்பதே. ''உற் பத்திப் பயிற்சியின்'' பின்னால் இருக்கும் முக்கியமான, அடிப்படையான, பரமமான பொது விதி என்னவெனில், இந்த ஆயிரம் பேர் என்ன செய்திருக்கிறார்கள் என்பதை முறைமையான, எச்சரிக்கையுடனான, நடைமுறை ரீதி யான, காரியகரமான வழியில் சரிபார்ப்பதும் அவர்களது வேலையை மேலும் அதிக எச்சரிக்கையுடனான, காரிய கரமான முறையில் திருத்தம் செய்வதும் ஒரு குறிப்பட்ட நிர்வாக முறைமை, அமைப்பு, விகிதாசாரம், நபர்களின் தேர்வு முதலியவை பயனுள்ளவை என்பதற்குப் போது மான சான்று கிட்டும் பொழுது மட்டுமே முன்னோக்கி அடி எடுத்து வைப்பதும் ஆகும். இந்தப் பொது விதியைத் தான் தோழர் திரோத்ஸ்கி தனது எல்லா ஆராய்ச்சியுரை கள் மற்றும் அணுகுமுறையின் மூலம் மீறியிருக்கிறார். அவரது ஆராய்ச்சியுரைகள் அனைத்தும், அவரது கொள் கைப் பிரசுரம் முழுவதும் மிகவும் தவறானவையாக இருப் பதால், அவை கட்சியின் கவனத்தையும் நன்மை வாய்ப்பு களையும் நடைமுறை ''உற்பத்தி'' வேலையில் இருந்து கவைக்குதவாத வெறும் பேச்சுக்குத் திசைதிருப்பி யுள்ளன.

### இயக்கவியலும் கதம்பவாதமும். ''பள்ளியும்'' ''பொறியமைவும்''

தோழர் புஹாரினுடைய பல மிகச் சிறந்த தனி இயல்பு களின் இடையே அவரது தத்துவார்த்த ஆற்றல், ஒவ் வொரு பிரச்சினையின் தத்துவார்த்த அடிவேரையும்

தேடிக் காண்பதிலான ஆர்வமிக்க அக்கறை ஆகியவை உட்படும். இது மிகவும் மதிப்பு மிகுந்த தனி இயல்பாகும். காரணம், ஒரு தவற்றைச் செய்யும் ஒருவரின் உணர்வு பூர்வமான அடிப்படை முதற்கோள்களின் மத்தியில் கிடக்கும் அதன் தத்துவார்த்த அடிவேர்களை ஆழத் தோண்டிப் பார்க்கா விட்டால், அரசியல் தவறு மட்டு மன்றி எந்தத் தவற்றையும் பற்றி நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது.

இந்த அவாவுக்கு இசைந்த முறையில் தோழர் புஹா ரின் இந்தச் சர்ச்சையினைத் தத்துவார்த்தத் துறைக்கு டிசம்பர் 30ந் தேதி விவாதம் முதல், ஏன் அதற்கு முன்பே கூட, நகர்த்திட நாட்டம் கொண்டார்.

அவர் அன்று ஆற்றிய உரையில் பின்வருமாறு கூறி னார்:

''அரசியல் காரணியோ, பொருளாதாரக் காரணியோ எதையும் புறக்கணிக்க முடியாது என்பது முற்ற முழுமை யாக மறுக்க முடியாதது என்று நான் கருதுகிறேன். அதுவே இங்கு ''இடைப்பட்ட குழு'' அல்லது அதன் சித் தாந்தம் என்று அறியப்படுவதன் தத்துவார்த்த சாரம்...'' (பக்கம் 47).

இந்த இடத்தில் தோழர் புஹாரினுடைய தவற்றின் தத்துவார்த்தப் பொழிப்பு, மார்க்சியத்தில் நாம் காணும் அரசியல் மற்றும் பொருளியலின் இயக்கவியல் பாணி இடை விளைவுக்குப் பதில் கதம்பவாதத்தை மாற்றீடு செய்ததேயாகும். ''ஒன்றும் மற்றதும்'', ''ஒரு புறமும் மறு புறமும்'' என்பதே அவரது தத்துவார்த்த நிலை. இது கதம்பவாதம் ஆகும். உறவுகளை துண்டு துக்காணி களின் ஒட்டு வேலையாக அன்றி அவற்றின் ஸ்தூலமான வளர்ச்சியில் சர்வாம்சமாகச் சிந்தித்துத் தெளிவது என் பது இயக்கவியலுக்குத் தேவை. இது அவ்வாறானது என் பதை அரசியல் மற்றும் பொருளியல் உதாரணங்கள் மூலம் நான் எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

''இடைப்பட்ட அடிதாங்கி'' உதாரணம் இந்த அபிப் பிராயத்தை வலுப்படுத்தியுள்ளது. கட்சி ரயில் ஒரு வீழ்ச்சியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் பொழுது உங்களுக்கு ஓர் அடிதாங்கி அவசியம், இது பயனுடையது.

இதைப் பற்றி ஐயம் ஏதுமில்லை. ஸினோவியெவ் மற்றும் திரோத்ஸ்கியிடமிருந்து இங்குமங்கும் துண்டுகளைத் திரட்டி புஹாரின் தமது ''அடிதாங்கிப்'' பிரச்சினையைக் கதம்பவாதப் போக்கில் உருவாக்கியிருக்கிறார். ஓர் ''இடைப்பட்ட அடிதாங்கி'' என்ற முறையில் செயல் படும் புஹாரின், ஒவ்வொரு தனி நபர் அல்லது பிரிவு எங்கே, எப்பொழுது, எப்படி தமது தவறுகளைச் செய் துள்ளனர், இது தத்துவார்த்தத் தவறா, அரசியல் நயப் பாங்கின்மை, கோஷ்டிவாதப் பிரகடனம் அல்லது மிகைப் படுத்தலின் தவறா என்பதை தமக்குத் தாமே முடிவு செய்திருக்க வேண்டும். அவர் அதைச் செய்துவிட்டு இத் தகைய தவறுகள் ஒவ்வொன்றையும் எதிர்த்துக் கடுமையாகத் தாக்கி இருக்க வேண்டும். ஆனால் அவர் ''இடைப்பட்ட அடிதாங்கி'' என்ற முறையில் தமது பணியைப் புரிந்து கொள்ளத் தவறி விட்டார். இதற்கு இங்கு நல்ல சான்று இருக்கிறது.

திசெக்த்ரானின் (ரயில்வேத் தொழிலாளர் மற்றும் நீர்வழிப் போக்குவரத்துத் துறைத் தொழிலாளர் சங்க மத்தியக் கமிட்டி) பெத்ரோகிராத் காரியாலயத்தின் கம்யூனிஸ்டு பிரிவு திரோத்ஸ்கியுடன் அனுதாபமுடைய அமைப்பு. இது தனது கருத்து என்ற முறையில், ''உற் பத்தியில் தொழிற்சங்கங்களின் பங்கு எனும் பிரதான பிரச்சினையில் தோழர்கள் திரோத்ஸ்கியும் புஹாரினும் ஒரே கண்ணோட்டத்தின் வெவ்வேறு வடிவங்களாக இருக் கும் கருத்துகளையே கொண்டிருக்கிறார்கள்'' என்று நேரடியாக சாற்றியது. இது 1921 ஜனவரி 3இல் பெத் ரோகிராதில் தோழர் புஹாரின் சமர்ப்பித்த அறிக்கை யைப் பிரசுரமாக வெளியிட்டுள்ளது (நி. புஹாரின், **தொழிற்சங்கங்களின் பணிகள் குறித்து,** பெத்ரோகிராத் 1921). அது கூறுவதாவது:

''தொழிற்சங்கத் தலைமை அகற்றப்பட வேண்டும், அந்த இடங்களில் தகுதி வாய்ந்த தோழர்கள் நியமிக்கப் பட வேண்டும் என்பனவே தோழர் திரோத்ஸ்கியின் ஆரம்ப வரையறுப்பு. இதற்கு முன்னால் அவர் ஒரு 'துப் புரவாக்கும்' நடவடிக்கையையும் ஆதரித்தார், இப்போது அந்தக் கருத்தைக் கைவிட்டு விட்டார், எனவே அதை இப்போது அவருக்கு எதிரான ஒரு வாதமாகப் பயன் படுத்துவது முற்றிலும் அபத்தமானது'' (பக்கம் 5).

இந்த அறிக்கையில் இருக்கும் மெய்த்தகவல் பற்றிய பல தவறுகளையும் அப்படியே சுட்டாது விட்டு விடுகிறேன். (''துப்புரவாக்குதல்'' எனும் பதத்தைத் திரோத்ஸ்கி நவம்பர் 2—6இல் நடந்த தொழிற்சங்கங்களின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாட்டில் பயன்படுத்தினார். அவர் நவம்பர் 8இல் மத்தியக் கமிட்டிக்குச் சமர்ப்பித்த தமது ஆராய்ச்சியுரைகளில் 5ஆவது பாராவில் ''தலைமைத் தேர்வு'' பற்றிப் பிரஸ்தாபிக்கிறார். இதற்கிடையில் இவற்றை அவரது ஆதரவாளர்கள் சிலர் தனிப் பிரசுரமாக வெளியிட்டுள்ளனர். **தொழிற்சங்கங்களின் பங்கும் பணிகளும்** என்னும் திரோத்ஸ்கியின் டிசம்பர் 25ந் தேதிய பிரசுரம் முழுவதும் நான் முன்பு சுட்டிக் காட்டிய அதே வகையான மனப்பாங்கினையே, அதே உணர்வையே வெளிப்படுத்துகிறது. இந்தப் போக்கை அவர் எப்போது, எவ்வாறு ''கைவிட்டார்'' என்பது மர்மமாகவே இருக்கிறது.) நான் இப்போது வேறு ஒரு விவகாரத்தை எடுத்துக் கவனிக்கிறேன். ''இடைப்பட்ட அடிதாங்கி'' ஒருவர் ஒரு கதம்பவாதியாக இருக்கும் பொழுது அவர் சில தவறுகளைத் தவிர்த்து விடுகிறார், வேறு சிலவற்றைக் கொண்டு வருகிறார். ருஷ்யா முழுவதிலிருந்தும் வந்த ஆயிரக்கணக்கான ரு.க.க. ஊழியர்களிடம் 1920 டிசம்பர் 30ந் தேதி மாஸ்கோவில் பேசும் போது தவறுகள் குறித்து அவர் எதுவுமே சொல்வதில்லை. ஆனால் 1921 ஜனவரி 3இல் அவர் தவறுகளைப் பற்றி பெத்ரோகிராதில் பேசுகிறார். ''இடைப்பட்ட அடிதாங்கி'' ஒருவர் ஒரு இயக்கவியல்வாதியாக இருக்கும் பொழுது, இரு பக்கங்களிலும் அல்லது எல்லாப் பக்கங்களிலும் தாம் காணும் ஒவ்வொரு தவற்றையும் குறியாக்கி முழுவேகத்துடன் தாக்குதல் தொடுக்கிறார். இதையே புஹாரின் செய்வதில்லை. துப்புரவாக்குதல் கொள்கையின் வெளிச்சத்தில் திரோத்ஸ்கியின் பிரசுரத்தைப் பரிசீலனை செய்யக் கூட அவர் முயலவில்லை. அதைப் பற்றி அறவே எதுவும் சொல்வதில்லை. அவரது அடிதாங்கி நடிப்பைக் கண்டு எல்லோரும் சிரித்ததில் வியப்பென்ன?

மேலே செல்வோம். அதே பெத்ரோகிராத் உரையில் புஹாரின் கூறியதாவது (பக்கம் 7):

''தோழர் திரோத்ஸ்கியின் தவறு, கம்யூனிசத்தின் பள்ளிக்கூடம் என்ற காரணிக்குப் போதுமான ஆதரவு அளிக்கவில்லை என்பதே.''

டிசம்பர் 30ஆம் தேதிய விவாதத்தின் போது புஹாரின் பின்வருமாறு வாதித்தார்:

''தொழிற்சங்கங்கள் கம்யூனிசத்தின் பள்ளிக்கூடம் என்று தோழர் ஸினோவியெவ் கூறியுள்ளார். அவை உற்பத்தியை நடத்துவதற்கான தொழில்நுணுக்க மற்றும் செயலாட்சி நிர்வாகத்தின் பொறியமைவு என்று திரோத்ஸ்கி கூறியுள்ளார். இதில் எந்த ஒரு முன்மொழிவும் தவறானது என்று நிரூபிப்பதற்குத் தர்க்க ரீதியான காரணம் எதையும் நான் காணவில்லை. இரு கருத்து நிலைகளும், இரண்டும் சேர்ந்த இணைப்பும் சரியானவைதான்'' (பக்கம் 48).

புஹாரினும் அவரது ''குழுவினர்'' அல்லது ''கோஷ்டியினரும்'' இதே கருத்தைத்தான் தமது ஆராய்ச்சியுரை 6இல் வெளியிட்டுள்ளனர்: ''...ஒரு புறம் அவை (தொழிற்சங்கங்கள்) கம்யூனிசத்தின் பள்ளிக்கூடம்... மறு புறம் அவை—மேன்மேலும்—பொருளாதாரப் பொறியமைவின், பொதுவாக அரசு அதிகாரப் பொறியமைவின் ஓர் இணைக்கூறாக விளங்குகின்றன...'' (பிராவ்தா, ஜனவரி 16).

அங்குதான் தோழர் புஹாரினின் அடிப்படையான தத்துவார்த்தத் தவற்றினைக் காண்கிறோம். அவர் கதம்பவாதத்தை (இது பல்வேறு ''புதுப்பாணி'' மற்றும் பிற்போக்குத் தத்துவஞான அமைப்புகளின் மூலவர்களிடையே விசேஷமாகப் பரவியிருக்கிறது) மார்க்சிய இயக்கவியலுக்கு மாற்றீடு செய்கிறார்.

தோழர் புஹாரின் ''தர்க்க ரீதியான'' காரணங்கள் பற்றிப் பேசும் போது அவர் ஒருக்கால் தன்னை அறியாமலே சம்பிரதாய அல்லது பாண்டித்திய பாணித் தர்க்கத்தின் நிலையை மேற்கொள்கிறார், இயக்கவியல் அல்லது மார்க்சியத் தர்க்கத்தை அல்ல என்பதை அவரது வாதம் முழுவதும் காட்டுகிறது. தோழர் புஹாரின் தருகின்ற சாதாரண உதாரணத்தை எடுத்துக் கொண்டு இதை நான் விளக்குகிறேன். டிசம்பர் 30ந் தேதிய விவாதத்தில் அவர் பின்வருமாறு கூறினார்:

''தோழர்களே, நடப்புச் சர்ச்சை இது போன்ற ஏதோ ஒன்றை யோசனையாக முன்வைப்பதை நீங்கள் காண லாம்: இரண்டு மனிதர்கள் உள்ளே வந்து பிரசங்க மேடை யின் மீது இருக்கும் டம்ளரைப் பற்றிய இலக்கணம் கூறும் படி பரஸ்பரம் கேட்டுக் கொள்கிறார்கள். ஒருவர் சொல் கிறார்: 'இது ஒரு கண்ணாடி உருளையாகும், வேறு வித மாகச் சொல்பவன் சாபத்துக்காளாவான்'. மற்றவர் சொல்கிறார்: 'டம்ளர் குடிப்பதற்கான பாத்திரம், வேறு விதமாகச் சொல்பவன் சாபத்துக்காளாவான்' '' (பக்கம் 46).

புஹாரினின் உதாரணம் ஒருதலைப் போக்கான சிந்தனையின் தீமையைப் பற்றிய ஒரு ஜனரஞ்சக விளக் கத்தை எனக்குத் தரும் உத்தேசம் கொண்டது என்பதை வாசகர் காண்பார். இதை நன்றியுடன் ஏற்றுக் கொள் கிறேன், ஒரு நன்மைக்குப் பதில் மற்றொரு நன்மை செய்யும் உணர்வில் இயக்கவியலுக்கும் கதம்பவாதத்துக் கும் இடையிலான வேறுபாடு குறித்த ஒரு ஜனரஞ்சக மான விளக்கத்தைத் தருகிறேன்.

ஒரு டம்ளர் என்பது ஒரு கண்ணாடி உருளையும் ஒரு குடிக்கும் பாத்திரமும் ஒருங்கே ஆகும் என்பது நிச்சயம். ஆனால் அதற்கு இந்த இரண்டு தன்மைகளை விடவும் அதிகமான தன்மைகள் அல்லது பண்புகள் அல்லது இயல்பு கள் உள்ளன. அவற்றின் எண்ணிக்கைக்கு அளவே இல்லை. உலகின் இதர பொருட்களுடனான அளவிட முடியாத ''இடைச் சாதனங்களும்'' இடை உறவுகளும் தன்மை களும் பண்புகளும் இயல்புகளும் கொண்டு அது நிலவு கிறது. ஒரு டம்ளர் கனமான பொருள், அதை ஒரு வீசு கணையாகப் பயன்படுத்த முடியும்; அது ஒரு தாள் கட்டை யாகவோ, பிடித்துவைத்த பட்டுப் பூச்சியின் கூடாகவோ, கலைச்சிறப்புள்ள சித்திர வேலை அல்லது வண்ண அழகு செய்யப்பட்ட மதிப்புடைய பரிசுப் பொருளாகவோ பயன்படுத்தப்படலாம். ஆனால் இதற்கும் இது குடிப் பதற்குப் பயன்படுமா, பயன்படாதா, இது கண்ணாடி யால் செய்யப்பட்டதா, இது உருளை வடிவிலானதா அல்லது அந்தளவுக்கு இல்லையா, இதரவற்றுக்கும் எவ் விதச் சம்பந்தமும் கிடையாது.

மேலும், குடிப்பதற்கென்று இப்பொழுது எனக்கு ஒரு டம்ளர் தேவைப்படுமானால் அது எவ்வளவுக்கு

உருளை வடிவில் இருக்கிறது, உண்மையிலேயே கண்ணாடியால் செய்ததுதானா என்பது சற்றும் பொருட்டல்ல. இதன் அடியில் ஓட்டைகள் ஏதேனும் இருக்கின்றனவா என்பதை, நான் குடிக்கும் போது எனது உதடுகளை வெட்டி விடும் ஏதேனும் இருக்கிறதா என்பதைப் பற்றியே கவலைப்படுவேன். ஆனால் எனக்குக் குடிப்பதற்காக ஒரு டம்ளர் தேவையில்லை, ஆனால் ஒரு கண்ணாடி உருளை பயன்படுத்தக் கூடிய காரியத்துக்கே வேண்டும் என்று இருப்பின் அடியில் உடைந்து போன அல்லது அடியில்லாத ஒரு டம்ளர் கூட இதற்குப் போதுமானது.

சம்பிரதாயமான தர்க்கவியல், பள்ளிக்கூடங்களைப் பொறுத்த வரையில் (கீழ் வகுப்புகளுக்குத் தக்கதான திருத்தங்களுடன் வைக்கப்பட வேண்டும்) சம்பிரதாயமான வரையறுப்புகளையே எடுத்துக் கவனிக்கிறது, எது மிகவும் பொதுவானதோ, பச்சையானதோ அதனை அணுகுகிறது, அதோடு நின்று விடுகிறது. இரண்டு அல்லது அதற்கும் கூடுதலாக வெவ்வேறு வரையறுப்புகள் குருட்டாம் போக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டு இணைக்கப்படும் போது (கண்ணாடி உருளை மற்றும் குடிக்கும் பாத்திரம்) அதன் விளைவு ஒரு கதம்பவாத வரையறுப்பே ஆகும். இது பொருளின் பல்வேறு இயல்புகளைச் சுட்டுகிறது, வேறு எதுவும் இல்லை.

முதலாவதாக,இயக்கவியல் தர்க்கவியல் நாம் இன்னும் முன்செல்ல வேண்டும் என்று கோருகிறது. ஒரு பொருளைப் பற்றிய மெய்யான அறிவு பெற வேண்டுமானால், நாம் அதன் எல்லா இயல்புகளையும் அதன் தொடர்புகளையும் ''இடைச் சாதனங்களையும்'' பார்த்துப் பரிசீலனை செய்ய வேண்டும். இதை நாம் முழுமையாக அடைவோம் என்று என்றுமே எதிர்பார்க்க முடியாது. ஆனால் ஒரு பொருளின் எல்லா இயல்புகளைப் பற்றிய கோரிக்கை தவறுகள் மற்றும் கட்டிறுக்கத் தன்மைக்கு எதிரான பாதுகாவலாகும். இரண்டாவதாக, இயக்கவியல் தர்க்கவியல், ஒரு பொருளை அதன் வளர்ச்சியில், மாற்றத்தில், ''சுய இயக்கத்தில்'' (சில சமயம் ஹெகல் கூறுவது போன்று) எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கோருகிறது. ஒரு டம்ளர் போன்ற பொருள் விஷயத்தில் இது நேரடியாகக் கண்கூடானதல்ல. ஆனால் டம்ளர் கூட மாறா நிலையில்

இருக்கவில்லை. டம்ளரின் நோக்கம், பயன் மற்றும் சுற்றுமுள்ள உலகத்துடனான அதன் தொடர்பு விஷயத்தில் இது விசேஷமாக மெய்யாகவே இயங்குகிறது. மூன்றாவதாக, ஒரு பொருளின் முழுமையான ''வரையறுப்பில்'' முற்றான மானுட அனுபவம், உண்மையின் அளவுகோல் மற்றும் மானுடத் தேவைகளுடனான அதன் தொடர்பின் நடைமுறை அறிகுறி என்னும் இரு வகைகளிலுமானது உட்படும். நான்காவதாக, இயக்கவியல் தர்க்கவியலானது, ஹெகலைப் பின்பற்றி காலஞ்சென்ற பிளெஹானவ் கூற விரும்பிய மாதிரியில் ''உண்மை எப்போதும் ஸ்தூலமானது, என்றுமே சூக்குமமானதல்ல'' என்று வலியுறுத்துகிறது. (பிளெஹானவின் தத்துவஞான நூல்கள் அனைத்தையும் படித்து அறியாமல்—படித்து ஆராய்வதையே குறிப்பிடுகிறேன்—நீங்கள் மெய்யான அறிவுள்ள கம்யூனிஸ்டுகளாக ஆக முடியாது, காரணம், அந்த நூல்களை விடச் சிறந்ததாக மார்க்சியம் பற்றி உலகில் வேறெங்குமே எழுதப்படவில்லை என்பதை இளம் கட்சி உறுப்பினர்களின் நன்மைக்காக இடைக்குறிப்பாகச் சேர்த்துக் கூறுகிறேன்.*)

இயக்கவியல் தர்க்கவியலின் கருத்துப் படிவம் முழுவதையும் நான் சொல்லித் தீர்த்து விடவில்லை என்பது உறுதி, ஆனால் நான் சொல்லியிருப்பது இப்போதைக்குப் போதும். டம்ளரில் இருந்து தொழிற்சங்கங்களுக்கும்

---

* இப்பொழுது பிளெஹானவின் நூல்களைக் கொண்ட புதிய பதிப்பு வெளிவருகிறது; இது பிளெஹானவின் தத்துவஞானம் பற்றிய எல்லாக் கட்டுரைகளையும் பொருளகராதி உட்பட ஒரு தனித் தொகுதி அல்லது தனித் தொகுதிகளாகத் திரட்டுவது முதலாவதாகச் செய்ய வேண்டிய நல்ல காரியம், ஏனெனில் இது கம்யூனிசம் பற்றிய தரமான பாடபுத்தகங்கள் வரிசையில் சேர்க்கப்பட வேண்டும். இரண்டாவதாக, தத்துவஞானப் பேராசிரியர்கள் மார்க்சியத் தத்துவஞானம் பற்றிய பிளெஹானவின் தெளிவுரை குறித்த ஞானம் பெற்று அதை மாணவர்களுக்குப் போதிக்கும் ஆற்றலும் பெற்றிருக்க வேண்டும் என்று தொழிலாளர் அரசு கோர வேண்டும் என்று கருதுகிறேன். ஆனால் இவையாவும் ''பிரசாரத்தில்'' இருந்து வெறும் ''நிர்வகித்தலுக்கு'' விலகுவதாகும்.

திரோத்ஸ்கியின் கொள்கைத் திட்டத்துக்கும் திரும்பி வருவோமாக.

''ஒரு புறம் பள்ளிக்கூடம், மறு புறம் பொறியமைவு'' என்கிறார் புஹாரின். இந்த அளவில் தமது ஆராய்ச்சியுரைகளிலும் எழுதுகிறார். திரோத்ஸ்கியின் தவறு, அவர் ''கம்யூனிசத்தின் பள்ளிக்கூடம் என்ற காரணிக்குப் போதுமான ஆதரவு அளிக்கவில்லை என்பதாகும்.'' ஸினோவியெவ் பொறியமைவு ''காரணி'' பற்றி போதிய அக்கறை காட்டாமல் தவறு செய்கிறார்.

புஹாரினுடைய இவ்வாதம் ஏன் ஜீவனற்ற, வெற்றுக் கதம்பவாதத்திற்கு மேல் செல்லவில்லை? நடப்புச் சர்ச்சையின் முழுப் போக்கு பற்றியோ (மார்க்சியம், அதாவது இயக்கவியல் தர்க்கவியல் நிபந்தனை இன்றிக் கோருவது போல), அதே போல இன்றைய கட்டத்தில், இந்த ஸ்தூலமான சந்தர்ப்ப சூழ்நிலைமைகளில் பிரச்சினையைப் பற்றிய முழுமையான அணுகுமுறை, முழுமையாக முன்வைக்கும் பாணி—நீங்கள் விரும்பும் பட்சத்தின் முன்வைப்பதன் முழுப் போக்கு—பற்றியோ தமது சொந்த நோக்கு நிலையில் இருந்து ஒரு சுயேச்சையான பகுத்தாய்வைச் செய்ய அவர் முயலக் கூட இல்லை என்பதே இதற்குக் காரணம். இவற்றில் எதையும் புஹாரின் செய்வதாக நீங்கள் காணவில்லை! அவரது அணுகுமுறை முற்றும் சூட்சுமமானது, ஸ்தூலமாக ஆராய்வதற்கு அவர் முயல்வதில்லை. ஸினோவியெவ் மற்றும் திரோத்ஸ்கியிடமிருந்து கருத்துகளைத் துண்டு துக்காணியாக எடுத்துக் கொள்கிறார். இதுதான் கதம்பவாதம் ஆகும்.

இந்தப் படப்பிடிப்பை மேலும் விளக்குவதற்கு இதோ இன்னொரு உதாரணம். தெற்குச் சீனாவின் எழுச்சிக்காரர்கள், புரட்சிக்காரர்கள் பற்றி (ஸுன் யாட்-ஸென் எழுதிய இரண்டு அல்லது மூன்று கட்டுரைகள் மற்றும் பல ஆண்டுகளுக்கு முன்னால் நான் படித்த சில புத்தகங்கள், பத்திரிகைக் கட்டுரைகளில் இருந்து தவிர) எனக்கு எதுவுமே தெரியாது. இந்த எழுச்சிகள் நடந்து வருவதால், இந்தப் புரட்சி எழுச்சி மிகவும் கடுமையான நாடு தழுவிய வர்க்கப் போராட்டத்தின் விளைவு என்று கூறும் முதலாம் சீனருக்கும் புரட்சி எழுச்சி என்பது ஒரு கலை என்னும் இரண்டாம் சீனருக்கும் இடையே ஒரு சர்ச்சை

நடந்து வருகிறது என்று பாவனை செய்யலாம். புஹாரின் போன்ற ஆராய்சியுரைகள் எழுதும் பொருட்டு நான் தெரிந்திருக்க வேண்டுவதெல்லாம் அவ்வளவே: ''ஒரு புறம்... மறு புறம்''. ஒருவர் கலை எனும் ''காரணியைக்'' கணக்கில் எடுக்கத் தவறி விட்டார், மற்றவர் ''கடுமைத்தன்மை எனும் காரணியைக்'' கணக்கில் எடுக்கத் தவறி விட்டார், இதரவை. இந்தக் குறிப்பிட்ட சர்ச்சை, பிரச்சினை, அணுகுமுறை, இதரவை பற்றி ஸ்தூலமான ஆய்வு செய்யப்படாத காரணத்தால் இதன் பலன் உயிரற்றதான வெற்றுக் கதம்பவாதமே.

தொழிற்சங்கங்கள் ஒரு புறத்தில் ஒரு பள்ளிக்கூடமாகவும் மறு புறத்தில் ஒரு பொறியமைவாகவும் இருக்கின்றன. அதோடு அவை உழைக்கும் மக்களின் ஸ்தாபனமாகவும் கிட்டத்தட்ட தொழில்துறை தொழிலாளர்களின் தனித் தன்மை வாய்ந்த ஸ்தாபனமாகவும் தொழில் ரீதியான அமைப்பாகவும் இருக்கின்றன* இதரவை. புஹாரின் தனக்காக என்றும் எவ்விதப் பகுத்தாய்வையும் செய்வதில்லை. நாம் இந்தப் பிரச்சினை அல்லது கருத்துப் பொருளின் மூன்றாவது, நான்காவது அல்லது ஐந்தாவது ''இயல்புகளை'' எண்ணிப்பார்ப்பதற்குப் பதில் ஏன் முதல் இரண்டு ''இயல்புகளை'' எண்ணிப்பார்க்க வேண்டும் என்பதை நிரூபிக்க மிகச் சிறிய சான்றையும் கூட அவர் தரவில்லை. இதனால்தான் புஹாரின் குழுவின் ஆராய்ச்சியுரைகள் கதம்பவாத சோப்பு நீர்க்குமிழியாக இருக்கின்றன. ''பள்ளி—பொறியமைவு'' உறவினை அவர் வகுத்து முன்வைப்பது அடிப்படையில் கதம்பவாதத் தன்மையுடையது, தவறானது.

இந்தப் பிரச்சினையைச் சரியான கண்ணோட்டத்தில் கருதிப் பார்ப்பதற்கான ஒரே வழி வெற்றுத்தனமான

---

* இதற்கிடையில் இங்கு திரோத்ஸ்கி மீண்டும் ஒரு தவறு செய்கிறார். ஒரு தொழில்துறை சங்கம் உற்பத்தியைக் நிர்வகிப்பதற்கெனத் திட்டமிடப்பட்டது என்று அவர் கருதுகிறார். இது தவறு. ஒரு சங்கம் தொழில்துறை சங்கம் என்று கூறும் போது அதன் பொருள், அது ஒரு தொழிலில் வேலை செய்யும் தொழிலாளர்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்கிறது என்பதாகும். (ருஷ்யாவிலும் உலகம் முழுவதிலும்) இன்று நிலவும் தொழில் நுட்ப, கலாசார மட்டத்தில் இது தவிர்க்க முடியாதது.

சூட்சுமங்களில் இருந்து ஸ்தூலமான இப்போதைய சர்ச்சைக்கு இறங்கி வருவதேயாகும். தொழிற்சங்கங்ளின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாட்டில் இது தோன்றிய வடிவத்திலோ, டிசம்பர் 25ந் தேதிய கொள்கைப் பிரசுரத்தில் இது திரோத்ஸ்கியால் முன்வைக்கப்பட்டு திருப்பப்பட்ட வடிவத்திலோ இதை நீங்கள் எப்படி எடுத்துக் கொண்டாலும் சரி, திரோத்ஸ்கியின் முழு அணுகுமுறை, அவரது போக்கு அனைத்தும் முற்றும் தவறானது என் பதைக் காண்பீர்கள். ''சோவியத் தொழிற்சங்கவாதம்'' பற்றிய பிரச்சினையை எழுப்பும் போதும் பொதுவாக உற்பத்திப் பிரசாரம் பற்றிப் பேசும் போதும் திரோத்ஸ்கி எந்த முறையில் பிரச்சினையை எழுப்புகிறாரோ, அப்படி ''ஒருங்கிணைவு'' பற்றியும் உற்பத்தியின் நிர்வாகத்தில் தொழிற்சங்கங்களின் பங்கேற்பு பற்றியும் பிரச்சினையை எழுப்பும் போதும் தொழிற்சங்கங்களை ஒரு பள்ளியாகக் கருத முடியும், கருத வேண்டும் என்பதைத் திரோத்ஸ்கி புரிந்து கொள்ளத் தவறிவிடுகிறார். திரோத்ஸ்கியின் கொள்கைப் பிரசுரத்தில் முன்வைக்கப்பட்டிருக்கும் விதத் தில், இந்தக் கடைசி அம்சத்தில் அவர் தொழிற்சங்கங்கள் **உற்பத்தியின் தொழில்நுணுக்க மற்றும் செயலாட்சி நிர்வாகத் தின் ப ள் ளி** என்பதைப் புரிந்து கொள்ளத் தவறி இருப்பதில்தான் இந்தத் தவறு காணக்கிடக்கிறது. இந்தச் சர்ச்சையின் சூழமைவில் ''ஒரு புறத்தில் பள்ளி என்றும் இன்னொரு புறத்தில் வேறு எதுவோ'' என்றும் சொல்ல முடியாது, இந்தச் சர்ச்சையில் திரோத்ஸ்கியின் அணுகு முறைப்படி **தொழிற்சங்கங்கள், அவற்றை எவ்வழியில் நீங்கள் பார்த்தாலும் சரி, ஒரு பள்ளியே ஆகும்.** அவை ஒற்றுமையின், ஒருமைப்பாட்டின், நிர்வாகத்தின் மற்றும் செயலாட்சி யின் பள்ளியாகும். அங்கு நாம் நமது நலன்களை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வது என்பதைக் கற்றுக் கொள் கிறோம். தோழர் திரோத்ஸ்கியின் அடிப்படைத் தவற்றைக் கண்டறிந்து திருத்துவதற்கு ஒரு முயற்சி செய்வதற்குப் பதில் தோழர் புஹாரின் வேடிக்கையான ஒரு சிறு திருத் தத்தைத் தந்துள்ளார்: ''ஒரு புறமும் மறு புறமும்''.

இப்பிரச்சினையை இன்னும் ஆழமாகப் பார்ப்போம். தொழில்துறை நிர்வாகத்தின் ''பொறியமைவு'' என்ற முறையில் இன்றைய தொழிற்சங்கங்கள் எத்தகையவை

என்பதைப் பார்ப்போம். முழுமையில்லாத தகவல்களி லிருந்து சுமார் 900 தொழிலாளர்கள்—தொழிற்சங்க உறுப்பினர்கள் மற்றும் பிரதிநிதிகள்—தொழில்துறை நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளனர் என்பதைக் கண்டோம். இந்தத் தொகையை 10ஆல் அல்லது 100ஆல் கூடப் பெருக்கினால்—உங்களது அடிப்படைத் தவற்றைத் தெளி வாக்க இது உதவுமானால் அண்மை எதிர்காலத்தில் நம் பற்கரிய வேகத்தில் ''முன்னேற்றம்'' ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம்—அப்போதும் கூட 60 லட்சம் தொழிற்சங்க உறுப்பினர் திரளுடன் ஒப்பிடும் பொழுது நிர்வாகத்தில் நேரடியாக ஈடுபடுவோரின் விகிதாசாரம் அற்பமானதாகவே இருக்கும். 98.5 சதவிகிதம் பேர் (60 லட்சத்தில் 90,000 கழித்தால் 59,10,000, அல்லது மொத்தத்தில் 98.5 சதவிகிதம்) பயிற்சி பெற்று வருகின்றனர், இன்னும் நீண்ட காலத்துக்குத் தொடர்ந்து பயிற்சி பெற வேண்டியிருக்கும் என்பதை மறந்து விட்டு, திரோத்ஸ்கி செய்வது போல ''தலைமைப் பிரிவினரை'' எதிர்பார்ப் பதும் உற்பத்தியிலும் தொழில்துறை நிர்வாகத்திலும் தொழிற்சங்கங்களின் பங்கு பற்றிப் பேசுவதும் அடிப் படைத் தவறு என்பதை இது மேலும் தெளிவாக்குகிறது. பள்ளி மற்றும் நிர்வாகம் என்று கூறாதீர்கள், நிர்வாகத்தின் பள்ளி என்று கூறுங்கள்.

''நியமன அமைப்பு முறையை'', அதாவது நியமனங் கள் செய்வதற்கான மத்தியக் கமிட்டியின் உரிமை மற்றும் கடமையினை ஸினோவியெவ் மறுக்கிறார் என்பதாக முற்றிலும் ஆதாரமின்றியும் தவறாகவும் குற்றம் சாட்டும் திரோத்ஸ்கி ஸினோவியெவுக்கு எதிராக டிசம்பர் 30இல் எழுப்பிய தமது வாதத்தில் கவனக்குறைவாகப் பின்வரும் கோளீ சொல்லி உதாரணத்தைக் குறிப்பிடுகிறார்:

''...ஸினோவியெவ் ஒவ்வொரு நடைமுறை ரீதியான, காரியகரமான விவகாரத்திலும் பிரசாரக் கருத்துக் கோணத்துக்கு மிகையான முக்கியத்துவம் கொடுக்கிறார். இது கிளர்ச்சிக்குரிய விவரப் பொருட்களின் ஆதாரம் மட்டுமல்ல, அதோடு செயலாட்சிப் பரிகாரம் தேவைப் படும் ஒரு பிரச்சினையும் கூட என்பதை மறந்து விடு கிறார்'' (பக்கம் 27).

இந்தப் பிரச்சினைக்கான உள்ளார்ந்த செயலாட்சி அணுகுமுறை எப்படி இருக்க முடியும் என்பதை நான் விவரமாக விளக்கப் போகிறேன். ஆனால் தோழர் திரோத்ஸ்கி தமது கொள்கைப் பிரசுரத்தில் தானே எழுப்பியுள்ள பிரச்சினைகளை செயலாட்சிப் பிரச்சினைகளாக நடத்துகிறார் (உண்மையில் மிகவும் அவசரமாக நடத்துகிறார்) என்பதே திரோத்ஸ்கியின் அடிப்படைத் தவறு. இந்தப் பிரச்சினைகளைப் பிரசாரக் கருத்துக் கோணத்தில் இருந்து மட்டுமே பார்க்க முடியும், பார்க்க வேண்டும்.

உருப்படியாகப் பார்த்தால் திரோத்ஸ்கியின் நல்ல அம்சங்கள் யாவை? சந்தேகத்திற்கு இடமின்றி நல்லதும் பயனுடையதுமான அம்சங்களில் ஒன்று அவரது உற்பத்திப் பிரசாரமாகும். ஆனால் இது அவரது ஆராய்ச்சியுரைகளில் இல்லை, மாறாக அவரது உரைகளில், குறிப்பாகத் தொழிற்சங்கவாதிகளின் ''பழமைவாதப்'' பிரிவு எனப் படுவதுடனான தமது துரதிருஷ்டவசமான வாதங்களை அவர் மறந்து விடும் பொழுது இடம் பெறுகிறது. ஒரு பேச்சாளர் மற்றும் எழுத்தாளர் என்ற முறையிலும் அகில ருஷ்ய உற்பத்திப் பிரசாரக் குழுவின் உறுப்பினர் மற்றும் ஊழியர் என்ற வகையிலும் அவர் தொழிற்சங்க கமிஷனின் நடைமுறை ''பொருளாதார'' வேலையில் பெருமளவு நற்பணியை நிச்சயமாகச் செய்திருக்க முடியும் (நிச்சயம் செய்வார்). அவரது ''கொள்கை ஆராய்ச்சியுரைகள்'' தவறானவை. அவற்றில் தொழிற்சங்கங்களுக்குள்ளேயான ''நெருக்கடி'', ''இரு போக்குகள்'', ரு.க.க. வேலைத்திட்டத்தின் விளக்கம், ''சோவியத் தொழிற்சங்கவாதம்'', ''உற்பத்திப் பயிற்சி'', ''ஒருங்கிணைவு'' ஆகியவை குறித்த செயலாட்சி அணுகுமுறை அடிச்சரடாக இருக்கிறது. திரோத்ஸ்கியின் ''கொள்கைத் திட்டத்தின்'' பிரதான அம்சங்கள் அனைத்தையும் பட்டியல் போட்டிருக்கிறேன். இவையாவும், திரோத்ஸ்கியின் வசமுள்ள விவரப் பொருட்களைக் கருதிப் பார்க்கின்ற பொழுது, இன்றைய கட்டத்தில் பிரசாரக் கோணத்தில் இருந்து மட்டுமே சரியாக அணுகக் கூடியனவாக இருக்கின்றன.

அரசு என்பது பலவந்தத்தின் ஒரு துறையாகும். செயலாட்சி அணுகுமுறையும் ''நிர்வகித்தலும்'' இன்றியமை

யாததாவதற்காக பாட்டாளி வர்க்க சர்வாதிகார சகாப் தத்தில் பலவந்தத்தைக் கைவிடுவது என்பது பைத்தியக் காரத்தனம். கட்சி என்பது நேரடியாக ஆட்சி புரியும் பாட்டாளி வர்க்கத்தின் தலைவனும் முன்னணிப் படையு மாகும். முன்னணிப் படையை உருக்குறுதி பெறச் செய்ய வும் களையெடுப்புச் செய்யவுமான சாதனம், குறிப்பான செல்வாக்குச் சாதனம் பலவந்தம் அல்ல, மாறாக கட்சி யில் இருந்து வெளியேற்றுவதே ஆகும். தொழிற்சங்கங் கள் அரசு ஆட்சி அதிகாரத்தின் சேமக்களஞ்சியம், கம்யூ னிசத்தின் பள்ளி, நிர்வாகத்தின் பள்ளி ஆகும். இந்தத் துறையில் பிரத்தியேகமானதும் முக்கியமானதும் நிர் வாகம் அல்ல, மாறாக ''மத்திய அரசு நிர்வாகம்'' (நிச் சயமாக வட்டாரமும் இதிலடங்கும்),''தேசியப் பொருளா தாரம் மற்றும் உழைக்கும் மக்களின் **விரிவான திரள் களின் இடையிலான''** ''**ப ந் த ங் க ளே.**'' (நமது கட்சி வேலைத்திட்டம், பொருளியல் பிரிவு தொழிற்சங்கங்கள் பற்றி விளக்கும் 5 பாராவைப் பார்க்க.)

திரோத்ஸ்கியின் கொள்கைப் பிரசுரம் முழுவதும் இப்பிரச்சினை சம்பந்தமான தவறான அணுகுமுறையை யும் இந்த உறவு பற்றிய ஒரு தப்பபிப்பிராயத்தையும் வெளிப்படுத்துகிறது.

திரோத்ஸ்கி தனது கொள்கைப் பிரசுரத்தின் இதர விஷ யங்கள் தொடர்பாக இந்த இகழார்ந்த ''ஒருங்கிணைவுப்'' பிரச்சினையின் பால் வேறுவிதமான அணுகுமுறையை மேற்கொண்டிருப்பதாக, அவர் இப்பிரச்சினையை முழு மையாகக் கொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம்; தொழிற்சங்க உறுப்பினர்களும் நிர்வாகிகளும் தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன்சில் தொழில்துறை நிர்வாகத்திலான பதவிகளையும் தேர்ந்தெடுக்கப்பட்ட தொழிற்சங்கப் பதவிகளையும் ஒரே சமயத்தில் வகிக்கும் ஒருங்கிணைவு ஏற்பாடுகள் 900த்தில் 90ஐப் பற்றி விரி வாக அலசி ஆராய்வதில் அவரது பிரசுரம் முழுமையாக ஈடுபடுத்தப்பட்டிருந்ததாகவும் வைத்துக் கொள்வோம். இந்த 90 ஏற்பாடுகளும் பொறுக்கி எடுக்கப்பட்ட புள்ளி விவர சர்வேயின் தகவல்களுடனும் ரப்கிரினைச்* சேர்ந்த

* ரப்கிரின்—தொழிலாளர், விவசாயிகளின் கண் காணிப்புக்கான மக்கள் கமிசாரகம்.—ப-ர்.

மேற்பார்வையாளர், பயிற்சியளிப்போர் மற்றும் சம் பந்தப்பட்ட மக்கள் கமிசாரகங்களின் அறிக்கைகளுடனும் சேர்த்துப் பகுத்தாய்வு செய்யப்பட்டதாக வைத்துக் கொள்வோம், அதாவது செயலாட்சி அமைப்புகள் வழங் கிய புள்ளிவிவரங்கள், வேலையின் பலன்கள், உற்பத்தி யிலான முன்னேற்றம், இதரவற்றின் கண்ணோட்டத்தில் அவை பகுத்தாராயப்பட்டதாகவும் வைத்துக் கொள் வோம். அது சரியான செயலாட்சி அணுகுமுறையாக இருந்திருக்கும். அப்போது நீக்கங்கள், மாற்றங்கள், நிய மனங்கள், ''தலைமைப் பிரிவினர்'' உடனடியாகச் செய்ய வேண்டிய கடமைகள் ஆகியவற்றின் மீது கவனத்தை ஒருமுகப்படுத்துவதை உணர்த்தும் ''துப்புரவாக்கும்'' கொள்கை சரியானது என்று முற்றிலும் மெய்ப்பிக்கப்பட் டிருக்கும். திரோத்ஸ்கி முதலில் ''துப்புரவாக்குவதை'' விரும்பினார், ஆனால் இப்போது அந்த எண்ணத்தைக் கைவிட்டுவிட்டார் என்று, பெத்ரோகிராதிலுள்ள திசெக்த் ரான் நபர்களால் பிரசுரிக்கப்பட்டதான தமது ஜனவரி 3ந் தேதி உரையில் புஹாரின் கூறிய போது அவர் தமது கதம்பவாதத் தவறுகளில் இன்னொன்றைப் புரிந்திருக் கிறார். இது நடைமுறை நோக்கு நிலையில் இருந்து கேலிக்கூத்தானது, தத்துவார்த்த ரீதியில் ஒரு மார்க்சிய வாதியிடம் அனுமதிக்கக் கூடாதது. ஸ்தூலமான விவரங் களை எடுத்துக் கொண்டு செயல்படுவதற்கு இயலாததால் (அல்லது விரும்பாததால்) புஹாரின் இந்தப் பிரச்சினை யைச் சூட்சுமமாக எடுத்துக் கொள்கிறார். நாங்கள், கட்சி யின் மத்தியக் கமிட்டி மற்றும் கட்சி முழுவதும் அரசுக் காரியங்களை தொடர்ந்து நடத்திச் செல்லும் வரை, அதாவது நிர்வகித்து வரும் வரை நாங்கள் ஒருபோதும் ''துப்புரவாக்கலை'', அதாவது நீக்கங்கள், மாற்றங்கள், நியமனங்கள், விலக்கங்கள், இதரவற்றை விட்டுவிட மாட் டோம், விட்டுவிடவும் முடியாது. ஆனால் திரோத்ஸ்கியின் கொள்கைப் பிரசுரம் வேறு எதையோ பற்றி எடுத்துக் கவனிக்கிறது, ''நடைமுறை, காரியகரமான பிரச்சி னையை'' முற்றிலும் எழுப்பவில்லை. ஸினோவியெவும் திரோத்ஸ்கியும், புஹாரினும் நானும், உள்ளபடியே கட்சி முழுவதும் விவாதித்து வருவது ''நடைமுறை, காரியகர மான பிரச்சினையைப் பற்றியல்ல, மாறாகத் ''தொழிற்

சங்க இயக்கத்திற்குள் நிலவும் போக்குகள்'' (திரோத்ஸ்கியின் 4ஆவது ஆராய்ச்சியுரை, இறுதி) என்பது பற்றியே விவாதித்து வருகிறோம்.

இது சாராம்சத்தில் ஒரு அரசியல் பிரச்சினை. இந்த விஷயத்தின், இந்த ஸ்தூலமான குறிப்பிட்ட ''விஷயத்தின்'' சாராம்சம் காரணமாக, சந்தேகமற்ற முறையில் மிகவும் மனிதாபிமானமான உணர்வுகள் மற்றும் நோக்கங்களால் தூண்டப்பட்டு புஹாரின் செய்ய முயன்று வருவது போல திரோத்ஸ்கியின் தவற்றைக் கதம்பவாதச் சிறு திருத்தங்கள் அல்லது சேர்க்கைகள் மூலம் திருத்துவது சாத்தியம் அல்ல.

இதற்கு ஒரே விடை தான் உண்டு.

முதலாவதாக, ''தொழிற்சங்க இயக்கத்திற்குள் நிலவும் போக்குகள்'', வர்க்கங்களுக்கு இடையிலும் அரசியலுக்கும் பொருளியலுக்கும் இடையிலும் உள்ள உறவு, அரசு, கட்சி, ''பள்ளி'' மற்றும் பொறியமைவு என்ற வகையில் தொழிற்சங்கங்கள் ஆகியவற்றின் பிரத்தியேகப் பங்கு என்னும் அரசியல் பிரச்சினைக்குச் சரியான தீர்வு காண வேண்டும்.

இரண்டாவதாக, சரியான அரசியல் முடிவின் அடிப்படையில் ஓர் அரசு நிறுவனத்தின் ஆதரவுடனும் வழிகாட்டுதலிலும் ஒரு பல்வகைப்பட்ட நாடு தழுவிய உற்பத்திப் பிரசார இயக்கம் நடத்தப்பட வேண்டும், விடாப்பிடியாகவும் பொறுமையுடனும் நீண்ட காலத்துக்கு முறையாக, திரும்பத்திரும்ப நடத்தப்பட வேண்டும்.

மூன்றாவதாக, ''நடைமுறை, காரியகரமான பிரச்சினைகளை'' போக்குகள் பற்றிய சர்ச்சைகளுடன் போட்டுக் குழப்பக் கூடாது. பின்னவை ''பொதுவான கட்சி உரையாடல்'', பரந்த விவாதங்களுக்குச் சரியான முறையில் உரியவை. சாட்சிகளை விசாரித்தும் ஆவணங்கள், அறிக்கைகள், புள்ளிவிவரங்களை ஆராய்ந்தும் செயல் கமிஷன்களில் இப்பிரச்சினைகள் நடைமுறை விவகாரங்களாகப் பரிசீலிக்கப்பட வேண்டும். இந்த அடிப்படையின் மீது மட்டும்தான், இந்த சந்தர்ப்ப சூழ்நிலைகளில் மட்டும்தான், அதிகாரத் தகுதியுடைய சோவியத் அல்லது கட்சி அமைப்புகள் அல்லது இரண்டினதும் முடிவின்

பேரில் மட்டும்தான் எந்த ஓர் அவசியமான ''துப்புர வாக்கலும்'' நிறைவேற்றப்படும்.

திரோத்ஸ்கியும் புஹாரினும் அணுகுமுறையில் அரசியல் தவறுகளையும் இணைப்புச் சாதனங்களின் நடுவில் முறிவுகளையும் ''நிர்வாகச் செயலாட்சி'' மீது அவசியமற்ற வீணான தாக்குதல்களையும் ஒரு கலவைக் கூளமாக உருவாக்கியுள்ளனர். புஹாரின் தனது டம்ளர் உதாரணத்துடன் அந்த அம்சத்தை எடுத்துக் கொண்டிருப்பதால் தவற்றின் தத்துவார்த்தத் தலையூற்று எங்கே இருக்கிறது என்பது இப்போது தெளிவாகிவிட்டது. புஹாரினுடைய தத்துவார்த்த—இந்த விஷயத்தில் அறிவியல் முறையிலான—தவறு அவர் இயக்கவியலுக்குப் பதில் கதம்பவாதத்தை மாற்றீடு செய்வதில்தான் இருக்கிறது. புஹாரினுடைய கதம்பவாத அணுகுமுறை அவரைக் குழப்பிவிட்டு சிண்டிக்கல்வாதத்தில் இறக்கிவிட்டது. ஒரு வழிச் சிந்தனை, நிர்ப்பந்தத்தனம், மிகைப்படுத்தல், பிடிவாதம் ஆகியவை திரோத்ஸ்கியின் தவறுகளாகும். அவரது கொள்கைத் திட்டம் ஒரு டம்ளர் என்பது பருகும் பாத்திரம் என்று கூறுகிறது. ஆனால் இந்தக் குறிப்பிட்ட டம்ளருக்கு அடித்தட்டு இல்லை.

## முடிவுரை

தவறாகப் புரிந்து கொள்வதைத் தவிர்க்கும் பொருட்டு நான் மேலும் சில அம்சங்களைப் பற்றி எடுத்துக் கூற வேண்டும்.

திரோத்ஸ்கியின் ''கொள்கைத் திட்டத்தின்'' 6ஆவது ஆராய்ச்சியுரை ரு. க. க. வேலைத்திட்டத்தில் உள்ள பொருளாதாரப் பிரிவின் 5ஆம் பாராவை (இது தொழிற் சங்கங்களைப் பற்றிக் கூறுகிறது) மேற்கோள் காட்டுகிறது. இரண்டு பக்கங்களுக்கு அப்பால் அவரது 8ஆம் ஆராய்ச்சியுரை கூறுவதாவது:

''...தமது வாழ்நிலையின் பழைய அடிப்படையை, வர்க்க ரீதியான பொருளாதாரப் போராட்டத்தை இழந்துவிட்ட தொழிற்சங்கங்கள்...''—(இது தவறானது, அவசரப்பட்டு மிகைப்படுத்துவது: தொழிற்சங்கங்கள்

இனி மேலாக வர்க்க ரீதியான பொருளாதாரப் போராட்டத்தை எதிர்நோக்க வேண்டியதில்லை, ஆனால் வர்க்க ரீதியற்ற ''பொருளாதாரப் போராட்டத்தைத்'' எதிர்நோக்க வேண்டியுள்ளது. இதன் பொருள், சோவியத் பொறியமைவின் அதிகார வர்க்க இயல்பான திரிபுகளை எதிர்த்துப் போராடுவது, இந்தப் பொறியமைவுக்கு எட்டாத வழிகள், முறைகள் மூலம் உழைக்கும் மக்களின் பொருளாயத மற்றும் ஆன்மீக நலன்களைப் பாதுகாப்பது, இதரவை என்பதாகும். துரதிருஷ்டவசமாக இந்தப் போராட்டத்தை அவை இன்னும் பல ஆண்டுகளுக்கு எதிர்நோக்க வேண்டி இருக்கும்)—''... பாட்டாளி வர்க்கப் புரட்சியால் அவற்றின் முன் வைக்கப்பட்டதும் நமது வேலைத்திட்டத்தில் வரையறுக்கப்பட்டதுமான உற்பத்தியை ஒழுங்கமைக்கும் (அழுத்தம் திரோத்ஸ்கியினுடையது, ஆராய்ச்சியுரை, 8, பக்கம் 9) புதிய கடமையை நிறைவேற்றுவதற்கு அவசியமான சக்திகளை ஒன்றுதிரட்டுவதிலும் இதற்குத் தேவையான வழிமுறைகளை வகுப்பதிலும் தொழிற்சங்கங்கள் பல்வேறு காரணங்களால் இன்னும் வெற்றியடையவில்லை.''

இது ஆபத்தான தவறு நிறைந்த இன்னும் ஓர் அவசர மிகைப்படுத்தலாகும். வேலைத்திட்டத்தில் இத்தகைய எந்த ஒரு வரையறுப்பும் இல்லை, ''உற்பத்தியை ஒழுங்கமைக்கும்'' கடமையினை அது தொழிற்சங்கங்களுக்கு வகுத்தளிக்கவும் இல்லை. வாசகத்தில் வெளியிடப்பட்டுள்ளபடி கட்சி வேலைத்திட்டத்தில் இருக்கும் ஒவ்வொரு கருத்தையும் பார்ப்போம்:

1) ''சமூகமயமாக்கப்பட்ட தொழில்துறையின் ஒழுங்கமைப்பு பொறியமைவு'' (ஆனால் மற்றவை அல்ல) ''பிரதானமாக'' (ஆனால் முற்றிலுமாக அல்ல) ''தொழிற்சங்கங்களைச் சார்ந்திருக்க வேண்டும்''. 2) ''அவை குறுகிய தொழில் இணைவு உணர்வில் இருந்து மேலும் மேலும் தம்மை விடுவித்துக் கொண்டு'' (எவ்வாறு? கட்சியின் தலைமையிலும் பாட்டாளி வர்க்கம் அல்லாத உழைப்பாளித் திரளின் மீது பாட்டாளி வர்க்க போதனை மற்றும் இதர வகைச் செல்வாக்கு மூலமும்) ''பெரிய தொழில்துறை கூட்டுகளாக மாற வேண்டும், இவை சம்பந்தப்பட்ட ஒரு தொழிலில் இருக்கும் பெரும்பான்மை தொழிலாளர்

களையும் இறுதியில் எல்லாத் தொழிலாளர்களையும் அரவணைத்துக் கொள்ள வேண்டும்....''

இது, தொழிற்சங்கங்களைப் பற்றி எடுத்துக் கூறும் கட்சி வேலைத்திட்டத்தின் பிரிவின் முதல் பகுதியாகும். அது மிகவும் ''கறாரான நிபந்தனைகளை'' விதிப்பதுடன் தொடங்கி, பின்னால் வரப்போகிறவை சம்பந்தமாக நீடித்த உறுதியான முயற்சி அவசியம் என்று கோருகிறது. பின்வருவது இதுவே:

''...சோவியத் குடியரசின் சட்டங்கள் மற்றும் நிலை நாட்டப்பட்ட வழக்கத்தின் பின்பலத்துக்கேற்ப தொழிற் சங்கங்கள் தொழில்துறை நிர்வாகத்தின் எல்லா வட்டார மற்றும் மத்திய அமைப்புகளில் பங்காளிகளாக'' (பங் காளிகள் மட்டுமே என்னும் எச்சரிக்கையான அறிவிப்பைக் கவனிக்கவும்) ''இருப்பதால் அவை இறுதியில், ஒரே பொருளாதார முழுநிறைக் கூறு என்ற முறையில் தேசியப் பொருளாதாரம் முழுவதின் பூரணமான நிர்வாகத்தையும் மெய்நடப்பில் தம் கரங்களில் ஒருமுகப்படுத்திக் கொள் ளும் நிலையை வந்தடைய வேண்டும்....''(இதைக் கவனிக் கவும்: தொழில்துறையின் கிளைகளின் அல்லது ஒட்டு மொத்தமாகத் தொழில்துறையின் நிர்வாகம் மட்டுமன்றி தேசியப் பொருளாதாரம் முழுவதின், மேலும் ஒரு பொருளாதார முழுநிறைக் கூறு என்ற முறையிலும் இதன் நிர்வாகத்தைத் தம் கரங்களில் மெய்நடப்பில் ஒருமுகப்படுத்திக் கொள்ளும் நிலையை வந்தடைய வேண்டும். தொழில்துறையிலும் விவசாயத்திலுமான சிறு உற்பத்தியாளர்கள் மக்கள்தொகையிலும் தேசப் பொருளாதாரத்திலும் பாதிக்கும் குறைவானவர்களாக இருந்தால்தான் பொருளாதார ரீதியில் இந்த நிபந்தனை நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.) ''இந்த வழி யில்'' (முன்னால் தொகுத்துக் கூறப்பட்ட எல்லா நிபந் தனைகளையும் படிப்படியாக நிறைவேற்றுவதற்கு உத வும் ''இந்த வழியில்'' தான்) ''மத்திய அரசு நிர்வாகம், தேசியப் பொருளாதாரம், உழைக்கும் மக்களின் பரவ லான திரள்கள் இடையே கலைக்க முடியாத தொடர்பு களை உத்தரவாதம் செய்யும் தொழிற்சங்கங்கள் பிந்திய வர்களை'' (அதாவது மக்கள் திரளை, மக்கள்தொகையில் பெரும்பான்மையை) ''ஆக விரிவான அளவுக்கு நேரடி

யான பொருளாதார நிர்வாகத்திற்குள் ஈர்க்க வேண்டும். அதே சமயத்தில் பொருளாதார நிர்வாகத்தில் தொழிற் சங்கங்கள் பங்கேற்பதும் இந்த வேலையில் விரிவான மக்கள் திரளை ஈர்ப்பதற்கான அவற்றின் செயல்பாடும் தான் சோவியத் ஆட்சி அதிகாரத்தின் பொருளாதாரப் பொறியமைவு அதிகார வர்க்கத் தன்மை பெறுவதை எதிர்த்துப் போராடவும் உற்பத்தியின் பலன்கள் மீது மெய்யான மக்கள் கண்காணிப்பு நிலைநாட்டப்படுவதை சாத்தியமாக்குவதற்கும் உரிய பிரதான மார்க்கமாகும்''.

அங்கு மீண்டும் அந்தக் கடைசி வாக்கியத்தில் மிகவும் எச்சரிக்கையான ஒரு தொடரைக் காண்கிறோம்: ''பொரு ளாதார நிர்வாகத்தில் பங்கேற்பு''; இன்னொரு குறிப்பு அதிகார வர்க்கச் செயல்களை எதிர்த்துப் போராடு வதற்கு ஒரு பிரதான மார்க்கம் (ஆனால் ஒரே மார்க்கம் அல்ல) என்ற முறையில் பரந்த மக்கள் திரளைத் திரட்டு வது பற்றியதாகும்; இறுதியாக நாம் மிகவும் எச்சரிக் கையான அறிவிப்பைக் காண்கிறோம்: முற்றிலும் பாட்டாளி களுடையது மட்டுமல்லாத, அதாவது தொழிலாளர், விவசாயிகளின் ''மக்கள் கண்காணிப்பு'' நிலைநாட்டப்படு வதை ''சாத்தியம் ஆக்குவது''.

நமது கட்சி வேலைத்திட்டம் தொழிற்சங்கங்களின் கடமையை ''உற்பத்தியை ஒழுங்கமைப்பது'' என்று ''வரையறுப்பதாக'' தொகுத்துரைப்பது தவறு என்பது கண்கூடு. இந்தத் தவற்றை வற்புறுத்தி கொள்கை ஆராய்ச்சியுரைகளில் தீட்டுவீர்களானால் கம்யூனிச எதிர்ப்பு சிண்டிக்கல்வாதத் திரிபைத் தவிர வேறு எது வும் கிட்டாது.

இதற்கிடையே, தோழர் திரோத்ஸ்கி தமது ஆராய்ச்சி யுரைகளில், ''வேலைத்திட்டத்தில் வகுத்து முன்வைக்கப் பட்டுள்ள இலக்கை நோக்கி நாம் கடந்த காலத்தில் எவ் விதமான முன்னேற்றமும் காணவில்லை, மாறாக உண்மை யில் அதிலிருந்து பின்வாங்கியே இருக்கிறோம்'' என்று கூறுகிறார் (ஆராய்ச்சியுரை 6, பக்கம் 7). இந்த அறி விப்புக்கு ஆதாரம் இல்லை, இது தவறு என்று கருது கிறேன். தொழிற்சங்கங்கள் ''தாமே'' இதை ஒப்புக் கொள்கின்றன என்று திரோத்ஸ்கி விவாதத்தின் போது கூறியது போன்று சொல்வது இதற்குச் சான்றாகாது.

கட்சி சம்பந்தப்பட்ட வரை இதுவே கடைநிலை என்பது இல்லை. பொதுவாகச் சொன்னால், மிகப்பல மெய் விவரங்களைக் காரியநோக்குடனும் பாரபட்சமின்றியும் ஆராய்வதில்தான் இதற்கான நிரூபணம் இருக்கிறது. மேலும் இத்தகைய நிரூபணம் அடுத்து வருவதாக இருந்தாலும் கூட இந்தக் கேள்வி தொக்கி நிற்கும். நாம் ஏன் பின்வாங்க நேர்ந்தது? திரோத்ஸ்கி கருதுவது போன்று "பல தொழிற்சங்கவாதிகள்" "புதிய கடமைகள், முறைகளைத் தடைப்படுத்துவது" காரணமா, அல்லது அதிகார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல்களைத் தடுத்து நிறுத்தித் திருத்துவதற்கான "அவசியமான சக்திகளைத் திரட்டி தேவையான வழிமுறைகளை வகுப்பதில் நாம் இன்னும் வெற்றியடையாதது" காரணமா?

"ஒன்பதாவது கட்சிக் காங்கிரஸ் வகுத்து முன்வைத்த கொள்கை வழியை நாம் கைவிட்டுவிட்டோம்" என்னும் (டிசம்பர் 30ந் தேதிய விவாதம் பற்றிய அறிக்கை, பக்கம் 46) டிசம்பர் 30ந் தேதிய தோழர் புஹாரினின் கடிந்துரையினை (நேற்று, ஜனவரி 24ந் தேதி திரோத்ஸ்கியால் இரண்டாம் சுரங்கத் தொழிலாளர் காங்கிரசில் கம்யூனிஸ்டு பிரிவில் நடந்த விவாதத்தின் போதும் அது மீண்டும் எழுப்பப்பட்டது) இது நினைவுறுத்துகிறது. அந்தக் காங்கிரசில் நான் உழைப்பு இராணுவமயமாக்கப்படுவதைத் தாங்கி ஆதரித்ததாகவும் ஜனநாயகம் பற்றிக் குறிப்பிட்ட போது ஏளனம் செய்ததாகவும் அவை அனைத்தையும் நான் இப்போது "மறுத்து நிராகரித்ததாகவும்" அவர் குற்றம் சாட்டினார். டிசம்பர் 30ந் தேதி விவாதத்துக்குப் பதிலளிக்கையில் திரோத்ஸ்கி இந்தக் குத்தலைச் சேர்த்துக் கொண்டார்: "தொழிற்சங்கங்களுக்கு உள்ளே எதிர்ப்பு மனப்பாங்குடைய தோழர்களின் கோஷ்டி ஒன்று இருக்கிறது என்ற மெய்விவரத்தை லெனின் கவனத்தில் எடுத்துக் கொள்கிறார்" (பக்கம் 65); லெனின் இதை "அரசுறவுத் தந்திரக் கோணத்தில் இருந்து" பார்க்கிறார் (பக்கம் 69); "கட்சிக் கோஷ்டிகளுக்கு உள்ளே சூழ்ச்சி நடவடிக்கை இருக்கிறது" (பக்கம் 70), இதரவை. இந்த விஷயம் மீது இத்தகைய வண்ணப்பூச்சு நடத்துவது திரோத்ஸ்கிக்கு நிச்சயமாக மிகவும் புகழ்ச்சியாக இருக்

கும், எனக்கோ இகழ்ச்சியை விடவும் மோசமானதாக இருக்கும். உண்மை என்ன என்று பார்ப்போம்.

டிசம்பர் 30ந் தேதி நடந்த அதே விவாதத்தில், ''நமது தொழிலாளர் அமைப்புகளின் உள்வாழ்க்கையைப் பொறுத்தவரை நாம் ஒரு புதிய பாதைக்கு மாறிச் செல்ல வேண்டும் என்று தோழர் பிரியொபிரழேன்ஸ்கி மத்தியக் கமிட்டியிடம் முன்பே (1920) ஜூலையிலேயே யோசனையை முன்வைத்தார்'' (பக்கம் 25) எனும் தகவலை திரோத்ஸ்கியும் கிரெஸ்தீன்ஸ்கியும் நிலைநாட்டினார்கள். அதிகார வர்க்கப் போக்கை எதிர்த்துப் போராடுவது, ஜனநாயகத்தை விஸ்தரிப்பது சம்பந்தமாக ஆகஸ்டில் தோழர் ஸினோவியெவ் ஒரு கடிதம் தயாரித்தார், மத்தியக் கமிட்டி ஒரு மத்தியக் கமிட்டிக் கடிதத்தை அங்கீகரித்தது. செப்டெம்பரில் இந்தப் பிரச்சினை ஒரு கட்சி மாநாட்டில் கொண்டு வரப்பட்டது. அதன் முடிவு மத்தியக் கமிட்டியால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. டிசம்பரில் அதிகார வர்க்கப் போக்கை எதிர்த்துப் போராடுவது பற்றிய பிரச்சினை சோவியத்துகளின் எட்டாவது காங்கிரசின் முன் வைக்கப்பட்டது. இதன் பின்விளைவாக மத்தியக் கமிட்டி முழுவதும், கட்சி முழுவதும், தொழிலாளர், விவசாயிகளின் குடியரசு முழுவதும் அதிகார வர்க்கம் பற்றிய பிரச்சினையும் அதன் தீமைகளை எதிர்த்துப் போராடுவதற்கான வழிகளும் நிகழ்ச்சி நிரலில் முக்கியமானதாக இருந்தன என்பதை உணர்ந்திருந்தன. இதில் இருந்து ரு.க.க. ஒன்பதாவது காங்கிரசை ''மறுத்து நிராகரித்தல்'' ஏதேனும் தொடர்கிறதா? நிச்சயமாக இல்லை. உழைப்பை இராணுவமயமாக்கல், இதரவை மீதான முடிவுகள் மறுத்ததற்கியலாதவை, இந்த முடிவுகளை எதிர்த்தவர்கள் ஜனநாயகம் பற்றி வெளியிட்ட குறிப்புகளை நான் ஏளனம் செய்ததை வாபஸ் பெறத் தேவை இல்லை. ஜனநாயகத்தை தொழிலாளர் அமைப்புகளில் குருட்டு வழிபாடாக மாற்றாமல் விஸ்தரிப்போம் என்பதும் அதிகார வர்க்க நடைமுறைகளுக்கு எதிரான நமது போராட்டத்தில் விசேஷ கவனம் செலுத்துவோம் என்பதும் யார் அவற்றைச் சுட்டிக் காட்டினாலும் சரி, அதிகார வர்க்கத்தின் பயனற்ற, பாதகமான மிகைச் செயல்களை அகற்றித் திருத்துவதில்

நாம் தனிக் கவனம் செலுத்துவோம் என்பதும் இதி லிருந்து தொடரும்.

ஆதர்ச முன்னணி சேவை மற்றும் சமநிலையாக்கம் பற்றிய சிறுபடிப் பிரச்சினை மீது ஓர் இறுதியான குறிப்பு. இந்த அம்சத்தின் மீது திரோத்ஸ்கி தனது 41ஆவது ஆராய்ச்சியுரையில் தந்த வரையறுப்பு தத்துவார்த்த முறையில் தவறானது என்று டிசம்பர் 30ந் தேதிய விவா தத்தின் போது நான் கூறினேன். காரணம், அந்த வரை யறுப்பு உற்பத்தியில் ஆதர்ச முன்னணி சேவையும் நுகர் வில் சமநிலையாக்கத்தையும் உணர்த்துவதாக இருந்தது. ஆதர்ச முன்னணி சேவை என்பது சலுகை தருவதை உணர்த்துகிறது என்றும் இதை நுகர்விலும் கொண்டிருந் தால் அன்றிப் பயனில்லை என்றும் நான் பதிலளித்தேன். அதற்காகவும் ''அசாதாரணமான மறதிக்காகவும்'' ''அச் சுறுத்துவதற்காகவும்'' தோழர் திரோத்ஸ்கி என்னைக் கடிந்து கொண்டார் (பக்கங்கள் 67, 68). நான் சூழ்ச்சி நடவடிக்கைகள், அரசுறவுத் தந்திரச் செயல்கள், இதரவை செய்ததாக அவர் குற்றம் சாட்டாதிருப்பது கண்டு வியப்படைகிறேன். எனது சமநிலையாக்கக் கொள்கைக்கு அவர் ''சலுகை'' தந்துள்ளார், ஆனால் நான் அவரைத் தாக்கியுள்ளேன்.

ஆயினும், கட்சி விவகாரங்களில் அக்கறை உள்ள எவரும் உண்மையிலேயே மறுக்க முடியாத கட்சி ஆவணங் களைப் பார்க்க முடியும்: மத்தியக் கமிட்டிப் பேரவையின் நவம்பர் தீர்மானம், 4ஆவது அம்சம் மற்றும் திரோத்ஸ்கி யின் கொள்கைப் பிரசுரம், ஆராய்ச்சியுரை 41. நான் எவ்வளவு ''மறதியுள்ளவனாக'' இருந்த போதிலும், தோழர் திரோத்ஸ்கியின் நினைவாற்றல் எவ்வளவு சிறந்த தாக இருந்த போதிலும் 41ஆவது ஆராய்ச்சியுரையில் ஒரு தத்துவார்த்தக் குறை இருக்கிறது, இத்தவறு நவம்பர் 9ந் தேதிய மத்தியக் கமிட்டித் தீர்மானத்தில் இல்லை என்பது இன்னும் ஒரு மெய்த்தகவலே. இத்தீர்மானம் கூறுவதாவது:''பொருளாதாரத் திட்டத்தை நிறைவேற்று வதில் ஆதர்ச முன்னணிக் கோட்பாட்டை அனுசரிக்க வேண்டுவதன் அவசியத்தை அங்கீகரிக்கும் அதே பொழு தில், மத்தியக் கமிட்டியானது கடந்த (செப்டெம்பர்) அகில ருஷ்ய மாநாட்டின் முடிவுகளுடன் பூரண ஒருமைப்

பாடு பூண்டு, சங்கம் முழுவதன் அளவுக்கு ஸ்தாபனத்தைக் கட்டிவரும் போதே, தொழிலாளரிடையான பல்வேறு பிரிவினர் மற்றும் அவர்களது தொழிற்சங்கங்களின் அந்தஸ்தில் படிப்படியான, ஆனால் உறுதியான சமத்துவத்தை நோக்கிய மாற்றத்தை அமுல்படுத்துவது அவசியம் என்று கருதுகிறது''. இது தெளிவாக திசெக்த்ரானுக்கு எதிராக இலக்கு வைக்கப்பட்டதாகும், இந்தத் தீர்மானத்தின் துல்லியமான அர்த்தம் மீது வேறு எந்த ஒரு வாசகத் தொடர்பையும் போடுவது அறவே சாத்தியம் அல்ல. ஆதர்ச முன்னணி சேவை இங்கு நிலைபெற்றுவிட்டது. இதன் பட்டியல் மீதுள்ள நிறுவனங்கள், தொழிற்சங்கங்கள், டிரஸ்டுகள், இலாகாக்களுக்கு (பொருளாதாரத் திட்டத்தின் நிறைவேற்றம் சம்பந்தமாக) இன்னும் சலுகை தரப்பட வேண்டியுள்ளது. அதே சமயம் ''தோழர் லெனினால் மாத்திரம்'' அன்றி கட்சி மாநாட்டால், மத்தியக் கமிட்டியால், அதாவது கட்சி முழுமையாலும் ஒப்புக்கொள்ளப் பட்டதான ''சமநிலையாக்கக் கொள்கை'' இந்தத் தெட்டத் தெளிவான கோரிக்கையை முன்வைக்கிறது: சமநிலையாக்கத்துக்குப் படிப்படியாக, ஆனால் உறுதியாக மாறிச் செல்வதில் முன்னேறுக. மத்தியக் கமிட்டியின் இந்த நவம்பர் தீர்மானத்தை திசெக்த்ரான் நிறைவேற்றத் தவறிவிட்டது என்பது மத்தியக் கமிட்டியின் டிசம்பர் தீர்மானத்தில் (திரோத்ஸ்கி மற்றும் புஹாரின் பிரேரணை மீது) தெளிவாகத் தெரிகிறது. இதில் ''சாமான்ய ஜன நாயகத்தின் கோட்பாடுகள்'' மீண்டும் நினைவூட்டப்பட்டுள்ளன. நுகர்வில் சமநிலையாக்கம், உற்பத்தியில் ஆதர்ச முன்னணி சேவை என்று கூறுவதே 41ஆம் ஆராய்ச்சியுரையில் காணப்படும் தத்துவார்த்தத் தவறாகும். அது ஒரு பொருளாதார அபத்தம், காரணம், அது உற்பத்திக்கும் நுகர்வுக்கும் இடையே ஒரு இடைவெளியை உணர்த்துகிறது. இதைப் போன்ற எதையும் நான் சொல்லவில்லை, என்றுமே சொல்லி இருக்க முடியாது. ஒரு தொழிற்சாலை உங்களுக்குத் தேவை இல்லை என்றால் அதை மூடிவிடுங்கள். முற்றிலும் முக்கியமில்லாத எல்லாத் தொழிற்சாலைகளையும் மூடிவிடுங்கள். முற்றிலும் முக்கியமானவற்றில் ஆதர்ச முன்னணி சேவைக்குச் சலுகை கொடுங்கள். உதாரணமாக, போக்குவரத்துத் துறைக்குச் சலுகை

கொடுங்கள், மிகவும் உறுதியாகக் கொடுங்கள். ஆனால் திசெக்த்ரான் விஷயத்தில் போல சலுகையை அளவுக்கு மீறிக் கொடுத்துவிடக் கூடாது. இதனால்தான் கட்சி (லெனின் மட்டுமல்ல)சமநிலையாக்கத்துக்குப் படிப்படியாக, ஆனால் உறுதியாக மாறிச் செல்ல வேண்டும் என்னும் நெறியாணையை விடுத்தது. தெட்டத்தெளிவானதும் தத்துவார்த்த முறையில் சரியானதுமான தீர்வைக் கொடுத்த நவம்பர் பேரவைக் கூட்டத்திற்குப் பிறகு ''இரு போக்குகள்'' பற்றிய ஒரு கோஷ்டிவாதப் பிரசுரத் தோடு முன்வந்து, பொருளியல் வழியில் தவறான ஒரு வரையறுப்பைத் தனது 41ஆம் ஆராய்ச்சியுரையில் முன் மொழிந்த செயலுக்குத் திரோத்ஸ்கி தன்னைத் தானே பழியேற்றுக் கொள்ள வேண்டும்.

---

இன்று, ஜனவரி 25ந் தேதி, தோழர் திரோத்ஸ்கியின் கோஷ்டிவாத அறிக்கை வெளிவந்து சரியாக ஒரு மாதம் ஆகிறது. வடிவத்தில் பொருத்தமற்றதும் சாரத்தில் தவறானதுமான இந்த அறிவிப்பு கட்சியை அதன் காரிய கரமான, நடைமுறை ரீதியான, பொருளாதார, உற்பத்தி முயற்சிகளில் இருந்து அரசியல் மற்றும் தத்துவார்த்தத் தவறுகளை அகற்றிச் சரிசெய்யும் பொருட்டு திசை திருப்பிவிட்டுள்ளது என்பது இப்போது வெளிப்படை யாகிவிட்டது. ஆனால் பழமொழி கூறுவதைப் போல ''கேட்டிலும் சில நன்மைகள் உண்டு''.

மத்தியக் கமிட்டியிலுள்ள கருத்து வேறுபாடுகள் குறித்துச் சில பயங்கரமான விஷயங்கள் சொல்லப்பட்ட தாக வதந்தி நிலவுகிறது. மென்ஷிவிக்குகளும் சோஷ லிஸ்டு-புரட்சிக்காரர்களும் எதிர்ப்பின் பின்னால் புகலிடம் பெற்று வந்தனர் (ஐயத்திற்கிடமின்றிப் புகலிடம் பெறு கிறார்கள்). இவர்கள்தான் இந்த வதந்திகளை, நம்ப முடியாத வன்மமான வரையறுப்புகளை, பலவகையான புனை சுருட்டுகளைப் பரப்பி கட்சியை அவதூறு செய் கிறார்கள், அதன் முடிவுகள் மீது இழிவான வியாக்கி யானங்களைத் தொடுக்கிறார்கள், மோதல்களை உக்கிரப் படுத்தி அதன் வேலையை நாசப்படுத்துகிறார்கள். இது குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகள், மென்ஷிவிக்கு

கள், சோஷலிஸ்டு-புரட்சிக்காரர்கள் உள்ளிட்ட முதலாளி வர்க்கத்தினரால் பயன்படுத்தப்படும் அரசியல் வித்தை யாகும். இவர்கள் மிகவும் வெளிப்படையான காரணங் களால் போல்ஷிவிக்குகளை வெறுக்கிறார்கள், அவர் களால் வெறுக்காமல் இருக்க முடியாது. கட்சியிலுள்ள விவேகமுடைய உறுப்பினர் ஒவ்வொருவரும் இந்த அரசி யல் வித்தையைப் பற்றி அறிவார், அதன் தரத்தையும் அறிவார்.

மத்தியக் கமிட்டியிலுள்ள கருத்து வேறுபாடுகள் காரணமாக அது கட்சிக்கு வேண்டுகோள் செய்ய வேண்டி இருந்தது. தொடர்ந்து நடந்த விவாதங்கள் இந்தக் கருத்து வேறுபாடுகளின் சாரத்தையும் வீச்சையும் தெளி வாக வெளிப்படுத்தின. அது வதந்திகளையும் அவதூறு களையும் அழித்து விட்டது. கட்சி கோஷ்டிவாதம் என் னும் புதிய நோயை (அக்டோபர் புரட்சிக்குப் பிறகு இதைப் பற்றி முற்றும் அடியோடு மறந்து விட்டதால் இது புதியது) எதிர்த்த போராட்டத்தில் தனது படிப் பினைகளைக் கற்றுக் கொள்கிறது, புடமிடப்பட்டு உறுதி பெறுகிறது. உண்மையில் இது ஒரு பழைய நோயே, அடுத்த சில ஆண்டுகளில் நிச்சயமாக இது மீண்டும் தோன்றலாம், ஆனால் இதற்குரிய எளிதான சிகிச்சை அருகில் இருக்கிறது.

தனது கருத்து வேறுபாடுகளை மிகைப்படுத்திப் பெரி தாக்கக் கூடாது என்பதைக் கட்சி உணர்ந்து வருகிறது. இந்த இடத்தில் தோழர் தோம்ஸ்கி பற்றிய தோழர் திரோத்ஸ்கியின் சரியான குறிப்புரையை மீண்டும் மேற் கோள் காட்ட வேண்டும்: ''நான் எப்போதும், தோழர் தோம்ஸ்கிக்கு எதிரான வாதப்பிரதிவாதம் மிகவும் கடு மையாக இருந்த போதும் கூட, அவரைப் போன்ற அனு பவமும் செல்வாக்கும் உடைய நபர்கள் மட்டுமே நமது தொழிற்சங்கத் தலைவர்களாக இருக்க வேண்டும் என்பது எனக்கு முற்றிலும் தெளிவாகத் தெரிகிறது என்று கூறி யிருக்கிறேன். தொழிற்சங்கங்களின் ஐந்தாவது மாநாட் டின் போது கட்சிக் குழுவிடம் இதை நான் கூறினேன், சில நாட்களுக்கு முன் ஸிமீன் அரங்கில் இதையே மீண்டும் கூறினேன். கட்சிக்குள்ளான சித்தாந்தப் போராட்டம் என்பது பரஸ்பரம் விலக்கி வைப்பதல்ல, மாறாகப் பரஸ்

பரம் செல்வாக்குச் செலுத்தல் ஆகும்'' (டிசம்பர் 30ந் தேதிய விவாதம் பற்றிய அறிக்கை, பக்கம் 34). இந்தச் சரியான அணுகுமுறையைக் கட்சி இயல்பாகவே தோழர் திரோத்ஸ்கி விஷயத்திலும் பயன்படுத்தும் என்பது திண்ணம்.

விவாதத்தின் போது தோழர் ஷ்லியாப்னிக்கவும் ''தொழிலாளர் எதிர்க்கட்சி'' எனப்படும் அவரது குழுவினருமே மிகவும் முனைப்புடைய சிண்டிக்கல்வாதப் போக்கினை வெளிக்காட்டினார்கள். இது கட்சியிலிருந்தும் கம்யூனிசத்திலிருந்தும் கண்கூடான திரிபாக இருப்பதால் நாம் அதை விசேஷமாகக் கவனத்தில் எடுத்துக் கொண்டு, அதைப் பற்றி விசேஷமாகப் பேசி, இந்தக் கருத்துகளின் தவற்றையும் இத்தகைய தவறுகள் செய்வதால் ஏற்படும் அபாயத்தையும் பற்றி விளக்குவதற்கு விசேஷமான பிரசார முயற்சிகளைச் செய்ய வேண்டும். சிண்டிக்கல்வாதத் தொடரான ''தீர்ப்புக் கட்டளை நியமனங்கள்'' (தொழிற் சங்கங்களால் நிர்வாக அமைப்புகளுக்கு) என்பதை உண்மையில் உருவாக்கிய தோழர் புஹாரின் இன்றைய பிராவ்தா இதழில் தன்னைத் தானே நியாயப்படுத்திக் கொள்ள முயன்றார். ஆனால் அவரது தாங்கி ஆதரிக்கும் கொள்கை மிகவும் பொருத்தமற்றது, முற்றிலும் தவறானது. தனது இதர அம்சங்களில் அவர் கட்சியின் பாத்திரம் பற்றி எடுத்துக் கவனிக்கிறார் என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்பதாக அவர் விரும்புகிறார்! அப்படித்தான் என்று கருத வேண்டும்! வேறு வகையாக இருந்திருப்பின் இது கட்சியில் இருந்து விலகுவதாகவே இருந்திருக்கும், இது திருத்தம் தேவைப்படுகிற, ஒரு சில குறை நீக்கங்கள் தேவைப்படுகிற வெறும் தவறு என்பதை விடவும் அதிகமான ஒன்றாக இருந்திருக்கும். ''தீர்ப்புக் கட்டளை நியமனங்கள்'' என்று கூறி, அங்கேயே அப்பொழுதே அவை கட்சிக்குத் தீர்ப்புக் கட்டளையானவை அல்ல என்பதைச் சேர்ப்பதற்குத் தவறும் போது உங்களிடம் சிண்டிக்கல்வாதத் திரிபு ஏற்படுகிறது, அது கம்யூனிசத்துக்கும் ரு.க.க. வேலைத்திட்டத்துக்கும் ஒத்திசைவானது அல்ல. ''கட்சிக்குத் தீர்ப்புக் கட்டளையானவை, அல்ல'' என்பதைச் சேர்ப்பீர்களானால், கட்சி சார்பற்ற தொழிலாளர்களுக்கு அவர்களது உரிமைகளில் ஏதோ சில

அதிகரிப்பு இருப்பதாக ஒரு பொய்யான எண்ணத்தைத் தருகிறீர்கள், ஆனால் உண்மையில் எவ்வித மாற்றமும் இல்லை. கம்யூனிசத்திலிருந்தான தமது திரிபில், தத்து வார்த்த முறையில் தவறானதும் அரசியல் ரீதியில் மோசடியானதுமான இந்தத் திரிபில் தோழர் புஹாரின் பிடிவாதமாக இருக்கும் வரையில், அவரது பிடிவாதத்தின் பலன் மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கும். ஆனால் ஏற்றுக் கொள்ளத்தகாத கருத்தைப் பேணி வைத்திருக்க முடியாது. பொதுவாக கட்சி சார்பற்ற தொழிலாளர் களின் உரிமைகள் விஸ்தரிக்கப்படுவதைக் கட்சி ஆட் சேபிக்கவில்லை. ஆனால் சிறிதளவு சிந்தித்துப் பார்த் தால் இந்த விஷயத்தில் எந்த வழியில் செல்ல முடியும், எந்த வழியில் செல்ல முடியாது என்பதைக் காணலாம்.

இரண்டாவது அகில ருஷ்ய சுரங்கத் தொழிலாளர் காங்கிரசின் கம்யூனிஸ்டு குழுவினர் நடத்திய விவாதத் தில், அந்தச் சங்கத்தில் விசேஷ மதிப்புக்கு உரியவராக விளங்கும் தோழர் கிசெல்யோவினது ஆதரவைப் பெற் றும் கூட ஷ்லியாப்னிக்கவின் கொள்கைத் திட்டம் தோற் கடிக்கப்பட்டது. நமது கொள்கைத் திட்டம் 137 வாக்கு கள் பெற்று வெற்றியடைந்தது, ஷ்லியாப்னிக்கவின் கொள்கைத் திட்டத்துக்கு 62 வாக்குகளும் திரோத்ஸ்கி யினுடையதற்கு 8 வாக்குகளும் கிடைத்தன. சிண்டிக் கல்வாத நோய் கட்டாயம் தீர்க்கப்பட வேண்டும், தீர்க்கப்படும்.

இந்த ஒரு மாதத்தில், கட்சி விவாதத்திற்கு இசைந்து கொடுத்து தோழர் திரோத்ஸ்கியின் தவறான கொள் கையை மிகப் பெரிய பெரும்பான்மையால் நிராகரித்து விட்டது என்பதை பெத்ரோகிராத், மாஸ்கோ மற்றும் ஒருசில மாகாண நகரங்கள் காட்டிவிட்டன. ''மேல் மட்டத்திலும்'' ''மாகாணங்களிலும்'' கமிட்டிகளிலும் அலுவலகங்களிலும் நிச்சயமாக ஊசலாட்டம் இருந் திருக்கும் அதே போதில், உறுப்பினர் தொழிலாளர் அணிகள், பெரும் திரளான கட்சி ஊழியர்கள், மிகப் பெரிய பெரும்பான்மையால்தான், இந்தத் தவறான கொள்கையை எதிர்க்க உறுதியாக முன்வந்தன.

ஜனவரி 23ந் தேதி மாஸ்கோ ஸமஸ்க்வரேச்சியே வட்டார விவாதத்தின் போது தனது கொள்கைத் திட்

டத்தை விலக்கிக் கொண்டு ஒரு புதிய கொள்கைத் திட்டத்தின் மீது புஹாரின் குழுவுடன் சேர்ந்து கொள்ளப் போவதாகத் தோழர் திரோத்ஸ்கி அறிவித்திருப்பதாகத் தோழர் காமெனெவ் என்னிடம் தெரிவித்தார். துரதிருஷ்டவசமாக, ஜனவரி 23 அல்லது 24ந் தேதிகளில் சுரங்கத் தொழிலாளர் காங்கிரசின் கம்யூனிஸ்டுக் குழுவில் தோழர் திரோத்ஸ்கி எனக்கு எதிராக உரை நிகழ்த்திய போது அவரிடமிருந்து இதைப் பற்றி எதையுமே நான் கேள்விப் படவில்லை. இதற்குக் காரணம், தோழர் திரோத்ஸ்கியின் கொள்கைத் திட்டத்திலும் எண்ணங்களிலும் ஏற்பட்ட இன்னொரு மாற்றமா அல்லது வேறு காரணமா என்பதை நான் அறியேன். எப்படியும் கட்சியானது தனது சக்திகள் அனைத்தையும் ஒன்றுதிரட்டும் அளவுக்குப் போகாமலே, பெத்ரோகிராத், மாஸ்கோ மற்றும் மாகாண நகரங்களில் சிறுபான்மை மட்டுமே முடிவெடுத்ததன் மூலம் தோழர் திரோத்ஸ்கியின் தவற்றை உரிய காலத்திலும் உறுதியாகவும் தீர்மானகரமாகவும் விரைவாகவும் திருத்தி விட்டது என்பதை அவரது ஜனவரி 23ந் தேதிய அறிவிப்புக் காட்டுகிறது.

கட்சியின் விரோதிகள் மிகவும் அவசரப்பட்டு மகிழ்ச்சி அடைந்து விட்டனர். கட்சிக்குள் தவிர்க்க முடியாத வகையில் சில சமயம் ஏற்பட்டுள்ள கருத்து வேறுபாடுகளைச் சாதகமாகக் கொண்டு, கட்சியின் மீதும் ருஷ்யாவில் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தின் மீதும் தீங்கு விளைப்பதற்கு அவர்களால் முடியவில்லை, என்றுமே முடியாது.

1921, ஜனவரி 25

நூல் திரட்டு,
தொகுதி 42,
பக்கங்கள்264—304

# நமது புரட்சி

## (நி. சுஹானவின் குறிப்புகளைப் பற்றி)

### 1

புரட்சியைப் பற்றிய சுஹானவின் குறிப்புகளை அண்மையில் படித்துப் பார்த்தேன். நமது குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகள் எல்லோருக்கும், இரண்டாவது அகிலத்தின் வீரர்கள் எல்லோருக்கும் உரியதாயிருக்கும் பகட்டுப் புலமைதான் யாவற்றையும் விட எடுப்பாகத் தெரிகிறது. இவர்கள் எல்லோருமே துணிவு சிறிதும் இல்லாதவர்கள், ஜெர்மன் முன்மாதிரியிலிருந்து இம்மியளவு விலகிச் செல்வதென்றாலும் இவர்களில் மிகச் சிறந்தோரும்கூட வரம்புகள் இட்டு அரண்கள் அமைத்துக் கொள்கிறார்கள் என்பது ஒருபுறமிருக்க—குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகள் எல்லோருக்குமே பொதுவானதாக அமைந்து, புரட்சிக் காலம் முழுவதும் இவர்கள் வெகுவாக வெளிப்படுத்திக் காட்டியிருக்கும் இந்தக் குணாதிசயம் ஒருபுறமிருக்க—மிகவும் எடுப்பாகத் தெரிவது என்னவென்றால் கடந்த காலத்தை அப்படியே காப்பியடிக்கும் இவர்களுடைய அடிமைப் புத்திதான்.

இவர்கள் எல்லோரும் தம்மை மார்க்சியவாதிகளாக அழைத்துக்கொண்ட போதிலும், மார்க்சியம் குறித்து இவர்களுக்குள்ள கருத்தோட்டம் முழுக்க முழுக்க பகட்டுப் புலமையின் பாணியிலேதான் இருக்கிறது. மார்க்சியத்தில் தீர்மானகரமாக இருப்பது எதுவோ அதை—அதாவது, மார்க்சியத்தின் புரட்சிகர இயக்கவியலை—புரிந்து கொள்ள இவர்கள் அறவே தவறிவிடுகின்றனர். புரட்சிக் காலங்களில் உச்ச அளவுக்கு வளைந்து கொடுக்கும்படியான நெகிழ்வான போக்கு தேவைப்படுகிறதென்று மார்க்ஸ் வெளிப்படையாகவே கூறியவற்றையும்கூட[56] இவர்கள் புரிந்து கொள்ள அறவே தவறிவிடுகின்றனர். உதாரணமாக, ஜெர்மனியில் புரட்சிகர நிலைமையைத் தோற்றுவிக்கக் கூடிய விவசாயிப் போர் ஒன்றைத் தொழிலாளி வர்க்க இயக்கத்துடன் இணைந்து நடைபெறச் செய்யலாம் என்கிற நம்பிக்கையைத் தெரிவித்து மார்க்ஸ்

தமது கடிதங்களில்—1856இல் என்று நினைக்கிறேன்—எழுதியவற்றையும்கூட[57] இவர்கள் கவனிக்கத் தவறிவிடுகின்றனர். வெளிப்படையான இந்தக் கருத்துரையையும் கூட நெருங்கி வராமல், சூடான பால் சட்டியைச் சுற்றிக் கொண்டிருக்கும் பூனையைப் போல, தொலைவிலிருந்தபடி வட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

முதலாளி வர்க்கத்தினரிடமிருந்து முறித்துக் கொள்வது போகட்டும், அவர்களிடமிருந்து சற்றே தடம் புரள்வதற்கும்கூட துணிவில்லாத கோழைகளான சீர்திருத்தவாதிகள் நாங்கள் என்று தம்மைத் தாமே தம் நடத்தையின் மூலம் அம்பலப்படுத்திக் கொள்கின்றனர்; அதே போது அடாபிடியான வாய்வீச்சையும் வீம்புப் பேச்சையும் கொண்டு தமது கோழைத்தனத்தை மூடிமறைத்துக் கொள்கிறார்கள். ஆனால் முற்றிலும் தத்துவார்த்தக் கண்ணோட்டத்திலும்கூட இவர்கள் எல்லோரும் பின்வரும் மார்க்சிய ஆய்வுநிலைகளைப் புரிந்து கொள்ளச் சிறிதும் இயலாதவர்களாக இருப்பது எடுப்பாகத் தெரிகிறது: இதுகாறும் முதலாளித்துவமும் முதலாளித்துவ ஜனநாயகமும் மேலைய ஐரோப்பாவில் குறிப்பிட்டதொரு வளர்ச்சிப் பாதையில் சென்றுள்ளதை இவர்கள் கண்டிருக்கிறார்கள்; இந்தப் பாதையை mutatis mutandis*, சிற்சில திருத்தங்களுடன் மட்டும்தான் (உலக வரலாற்றின் பொதுவான வளர்ச்சி என்ற கண்ணோட்டத்தில் சிறிதும் குறிப்பிடத்தக்கவை அல்லாத சில திருத்தங்களுடன் மட்டும்தான்) ஒரு முன்மாதிரியாகக் கொள்ள முடியுமென்பது இவர்களுடைய சிந்தனைக்கு எட்டாத ஒன்றாக இருக்கிறது.

முதலாவதாக—ஏகாதிபத்திய முதலாவது உலகப் போருடன் இணைந்த புரட்சி. இத்தகைய ஒரு புரட்சி இந்தப் போரின் விளைவாக எழும் புதிய இயல்புகளை அல்லது உருத்திரிபுகளை வெளிக்காட்டவே செய்யும், ஏனெனில் உலகம் இத்தகைய ஒரு போரை இத்தகைய ஒரு சூழ்நிலையில் ஒருபோதும் கண்டதில்லை. இப்போருக்குப் பிறகு மிகவும் செல்வந்த நாடுகளின் முதலாளி வர்க்கத்தார் இது நாள் வரை ''முறையான'' முதலாளித்துவ உறவுகளை மீட்டமைக்க முடியாதவர்களாக இருப்பதைக்

* தக்க மாற்றங்களுடன்.—ப-ர்.

காண்கிறோம். ஆயினும் நமது சீர்திருத்தவாதிகள்—புரட்சிக்காரர்களாக வேடம் பூண்டுள்ள குட்டி முதலாளிகள்—முறையான முதலாளித்துவ உறவுகளே இறுதி வரம்பென்று (இவ்வளவுதான், இதற்கு மேல் ஓரடியும் போகலாகாது) நம்பினர், இனியும் நம்பி வருகின்றனர். ''முறையான'' உறவுகளைப் பற்றிய இவர்களுடைய கருத்தோட்டமும்கூட அளவு மீறி ஒரே மாதிரியான வார்ப்பாகவும் அளவு மீறிக் குறுகியதாகவும் இருக்கிறது.

இரண்டாவதாக—ஒட்டுமொத்தமாக உலக வரலாற்றின் வளர்ச்சியானது பொது விதிகளுக்கு ஏற்பவே நடைபெறுகிறது என்றாலும், வளர்ச்சியின் குறிப்பிட்ட சில காலகட்டங்களில் இந்த வளர்ச்சி அதன் வடிவத்திலோ, வரிசைக் கிரமத்திலோ சில தனி இயல்புகளை வெளிப்படுத்துவது எவ்வகையிலும் தடுக்கப்பட்டுவிடவில்லை, மாறாக எதிர்பார்க்கக் கூடியதே என்னும் கருத்து இவர்களுக்கு முற்றிலும் அன்னியமானதாக இருக்கிறது. உதாரணமாக, ருஷ்யா நாகரிக நாடுகளுக்கும் இந்தப் போரால் முதன்முதல் நாகரிகத்தின் செயல் வட்டத்தினுள் திட்டவட்டமாகக் கொண்டு வரப்பட்டிருக்கும் நாடுகளுக்கும்—அதாவது, ஐரோப்பிய நாடுகளல்லாத எல்லாக் கிழக்கு நாடுகளுக்கும்—எல்லைக் கோட்டில் அமைந்திருப்பதால், அது சிற்சில தனி இயல்புகளை வெளிப்படுத்தக் கூடும், நிச்சயம் வெளிப்படுத்தவும் செய்யும் என்பது குறித்து இவர்கள் நினைத்தே பார்ப்பதில்லை. இந்தத் தனி இயல்புகள் உலக வளர்ச்சியின் பொது வழிக்கு ஒப்பவே அமைந்திருப்பினும்கூட, இவை ருஷ்யாவின் புரட்சியை மேற்கு ஐரோப்பாவில் எல்லா நாடுகளிலும் நடைபெற்றவற்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன; புரட்சியானது கிழக்கு நாடுகளை நோக்கி நகர்ந்து செல்கின்ற பொழுது குறிப்பிட்ட சில அரைகுறைப் புது முறைகளைப் புகுத்துகின்றன.

இவர்களது வாதம், சிறிதும் மாற்றமின்றி அளவு கடந்து ஒரு மாதிரியாக அமைந்த வார்ப்பாகவே இருக்கிறது, உதாரணமாக இன்னும் நாம் சோஷலிசத்துக்குப் பக்குவம்டைந்தாகவில்லை என்பது. இவர்களிடையிலுள்ள ''மெத்தப் படித்த'' கனவான்கள் சிலர் சொல்லி வரும் சொற்களில் கூறுவதெனில், சோஷலிசத்துக்கு வேண்டிய

புறநிலைப் பொருள்தார முன்தேவைகள் நம் நாட்டில் இருக்கவில்லை என்கிற வாதம். மேற்கு ஐரோப்பிய சமூக-ஜனநாயகத்தின் வளர்ச்சியின் போது இவர்கள் புரியாமலேயே மனப்பாடம் செய்து கொண்ட வாதம் இது. முதலாவது ஏகாதிபத்தியப் போரின் போது உருவானது போன்ற ஒரு புரட்சிகர நிலைமையிலுள்ள மக்கள், வேறு வழி ஏதுமில்லாத தமது இந்த நிலைமையால் உந்தப்பட்டு, நாகரிகம் மேலும் வளர்வதற்குரிய நிலைமைகளை—ஓரளவு அசாதாரணமான நிலைமைகளை—உண்டாக்கிக் கொள்ளச் சிறிதளவேனும் வாய்ப்பளிப்பதாக இருக்கும் ஒரு போராட்டத்தில் குதிக்கலாம் அல்லவா?—இப்படி ஒரு கேள்வி இவர்களில் யாருடைய சிந்தனையிலும் எழுவதே இல்லை.

''ருஷ்யாவில் உற்பத்திச் சக்திகளது வளர்ச்சி சோஷலிசத்தைச் சாத்தியமாக்கும்படியான உயர் நிலையை அடைந்தாகவில்லை.'' இரண்டாவது அகிலத்தின் எல்லா வீரர்களும்—சுஹானவும் உள்படவே—இந்த முடிவினை எடுத்துரைத்து முழக்கமிடுகிறார்கள். மறுக்க முடியாத இந்த முடிவினை விதம்விதமான ஆயிரம் வழிகளில் ஓயாமல் தம்பட்டமடிக்கின்றனர், நமது புரட்சிக்கு இது தான் தீர்மானகரமான உரைகல் என்பதாக நினைக்கின்றனர்.

ஆனால், அதிகமாகவோ குறைவாகவோ செல்வாக்குடைய மேற்கு ஐரோப்பிய நாடு ஒவ்வொன்றும் ஈடுபட்டிருக்கும்படியான ஏகாதிபத்திய உலகப் போரில் ருஷ்யாவை இழுத்துவிட்ட அந்தச் சூழ்நிலை—மற்றும் கிழக்குலகில் முற்றி வந்த, அல்லது ஏற்கெனவே ஓரளவுக்குத் தொடங்கிவிட்ட புரட்சிகளது முன்னறிவிப்பை ருஷ்யா கண்டு கொள்ளும்படிச் செய்த அந்தச் சூழ்நிலை—''விவசாயிப் போர்'' ஒன்றை தொழிலாளி வர்க்க இயக்கத்துடன் இணைத்துக் கொள்ளும் சாத்தியப்பாடு பிரஷ்யாவுக்குக் கைவரப் பெறலாமென்று மாபெரும் ''மார்க்சிய வாதியான'' மார்க்சே 1856இல் ஆலோசனை கூறிய அதே இணைப்பை நாம் சாதித்துக் கொள்ளும்படியான ஒரு நிலைக்கு ருஷ்யாவையும் ருஷ்ய வளர்ச்சியையும் கொண்டு வந்த நிலைமைகளைத் தோற்றுவிக்குமாயின் என்ன செய்வதாம்?

# பதிப்பாளர் குறிப்புகள்

[1] இது கிரனாத் என்னும் கலைக்களஞ்சிய அகராதிக்காக 1914இல் லெனின் எழுதிய ''கார்ல் மார்க்ஸ்'' என்னும் கட்டுரையின் ஒரு அத்தியாயமாகும்.—5.

[2] பார்க்க: பி. எங்கெல்ஸ், ''டூரிங்குக்கு மறுப்பு'', இரண்டாவது பதிப்பிற்கான முன்னுரை.—5.

[3] பார்க்க: பி. எங்கெல்ஸ், ''லுட்விக் ஃபாயர்பாஹும் மூலச்சிறப்புள்ள ஜெர்மன் தத்துவஞானத்தின் முடிவும்'', அத்தியாயங்கள் IV, I.—6.

[4] பார்க்க: பி. எங்கெல்ஸ், ''டூரிங்குக்கு மறுப்பு'', முன்னுரை.—6.

[5] ''இயக்கவியல் பிரச்சினையைப் பற்றி'' என்னும் படைப்பின் ஒரு பகுதி 1915இல் எழுதப்பட்டது. இது 1914—1915இல் பொருள்முதல்வாத இயக்கவியலைப் பற்றி லெனின் எழுதிய படைப்புகளின் சுருக்கமாகும்.—9.

[6] ஃபெ. லஸ்ஸால் எழுதிய ''எத்தேசை சேர்ந்த ஹெரக்லிடசின் தத்துவஞானம்'' என்ற நூல் இங்கு குறிப்பிடப்படுகிறது. [F. Lassalle, *Die Philosophie Herakleitos des Dunklen von Ephesos*, Berlin, 1858.]—9.

[7] இரண்டாவது அகிலம்—சோஷலிசக் கட்சிகளின் சர்வதேச கூட்டமைப்பு, 1889இல் தோற்றுவிக்கப்பட்டது. 1914—1918இல் நடந்த உலக ஏகாதிபத்திய யுத்தம் துவங்கிய போது இரண்டாவது அகிலத்தின் தலைவர்கள் சோஷலிச லட்சியத்திற்குத் துரோகமிழைத்து, தத்தம் ஏகாதிபத்திய அரசாங்கங்களின் தரப்பிற்கு மாறினர், அகிலம் கலைந்தது.—17.

[8] சர்வதேச சோஷலிச பியூரோ—இரண்டாவது அகிலத்தின் நிர்வாக மற்றும் தகவல் தொடர்பு உறுப்பு.—17.

[9] பூந்த்—''லித்துவேனியா, போலந்து, ருஷ்யாவில் இருந்த பொது யூத தொழிலாளர் சங்கம்'' என்ற பெயரின் சுருக்கம், 1897இல் தோற்றுவிக்கப்பட்ட இது பெரும்பாலும் ஜாரிச ருஷ்யாவின் மேற்குப் பகுதிகளில் இருந்த சிறுதொழில் புரியும் யூதர்களை ஒன்றிணைத்தது. இச்

சங்கம் சந்தர்ப்பவாத, மென்ஷிவிசக் கொள்கையைக் கடைபிடித்தது.—17.

10 1914 ஆகஸ்டு 4இல் ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிகள் ரைஹ்ஸ்டாகில் முதலாளி வர்க்கக் கட்சிகளுடன் சேர்ந்து இரண்டாவது வில்ஹெல்மிற்கு ஐந்து பில்லியன் இராணுவ கடன் வழங்க ஆதரவாக வாக்களித்தனர்; இதன் மூலம் ஏகாதிபத்திய யுத்தத்தை ஜெர்மனி நடத்த ஒப்புதல் அளிக்கப்பட்டது.—17.

11 ஷ்டுட்கார்ட் சர்வதேச சோஷலிஸ்டு காங்கிரஸ் (இரண்டாவது அகிலத்தின் ஏழாவது காங்கிரஸ்) 1907இல் நடந்தது.

பாஸெல் சர்வ்தேச சோஷலிஸ்டு காங்கிரஸ் (இரண்டாவது அகிலத்தின் அவசர காங்கிரஸ்)—1912இல் நடந்தது.—18.

12 இந்தப் பதிப்பில் இங்கே குறிப்பிடப்பட்ட தீர்மானங்கள் அச்சிடப்படவில்லை.

பாஸெல் தீர்மானம் அல்லது 1912ஆம் ஆண்டின் யுத்தம் பற்றிய அறிக்கை மக்களினங்களை எதிர்நோக்கிய யுத்த அபாயம் பற்றி எச்சரித்தது. ஏகாதிபத்தியவாதிகள் தயார்ப்படுத்தி வந்த யுத்தத்தின் கொள்ளை நோக்கங்களை அம்பலப்படுத்திய இது சமாதானத்திற்காக உறுதியாகப் போராடுமாறு உலகெங்கும் உள்ள தொழிலாளர்களுக்கு அறைகூவல் விடுத்தது. ஏகாதிபத்திய யுத்தம் மூண்டால், யுத்தத்தால் ஏற்படும் பொருளாதார, அரசியல் நெருக்கடியை சோஷலிசப் புரட்சிக்கான போராட்டத்திற்குப் பயன்படுத்துமாறு அறிக்கை சோஷலிஸ்டுகளுக்கு சிபாரிசு செய்தது.

ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் ஹெம்னிட்ஸ் தீர்மானத்திலும் ஏகாதிபத்திய கொள்கை கண்டிக்கப்பட்டது, சமாதானத்திற்கான போராட்டத்தின் முக்கியத்துவம் கோடிட்டுக் காட்டப்பட்டது.—19.

13 நாஷே ஸ்லோவோ (''எம் கருத்து'')—மென்ஷிவிக்குகளின் பத்திரிகை, 1915 ஜனவரி முதல் 1916 செப்டெம்பர் வரை பாரிசில் வெளிவந்தது.—21.

14 எ. டவீடின் *Die Sozialdemokratie und Vaterlandsverteidigung* (''சமூக ஜனநாயகமும் தாயகப் பாதுகாப்பும்''), பெர்லின், 1915 என்ற பிரசுரம் இங்கு குறிப்பிடப்படுகிறது.—21.

15 மூவர் உடன்பாடு (அண்டான்டு)—பிரிட்டன், பிரான்ஸ், ஜாரிச ருஷ்யாவின் ஏகாதிபத்திய கூட்டணி; ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, இத்தாலியின் ஏகாதிபத்திய

''மூவர் கூட்டணிக்கு'' எதிராக 1907இல் இறுதியாக உருவெடுத்தது.—23.

16 ஸ்துரூவே தத்துவம், ஸ்துரூவேவாதம்—வாயளவில் மார்க்சியத்தை ஒப்புக்கொண்டு, முதலாளி வர்க்கத்தின் நலன்களுக்கேற்ப இதைத் திருத்தியமைக்கும் ஒரு தத்துவம். சென்ற நூற்றாண்டின் 90ஆம் ஆண்டுகளில் ''சட்ட பூர்வமான மார்க்சியம்'' என்றழைக்கப்பட்டதை ருஷ்யாவில் பிரசாரம் செய்த பீ. பெ. ஸ்துரூவேயின் பெயரை இது பெற்றது. ருஷ்யாவில் முதலாளித்துவத்தின் வளர்ச்சி தவிர்க்க இயலாதது என்னும் கருத்து நிலையை மார்க்சியத்திலிருந்து எடுத்துக் கொண்ட ஸ்துரூவே, மார்க்சியத் தத்துவத்தின் புரட்சிகர சாரத்தை ஒதுக்கித் தள்ளினார், அதாவது சோஷலிசப் புரட்சியைப் பற்றிய போதனை, முதலாளித்துவம் அழிந்து அதற்குப் பதில் கம்யூனிச சமூக-பொருளாதார அமைப்பு வருவது தவிர்க்க இயலாதது ஆகியவற்றை இவர் மார்க்சியத் தத்துவத்திலிருந்து ஒதுக்கித் தள்ளினார்.—27.

17 *Die Neue Zeit* (''புதிய காலம்'')—ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் தத்துவார்த்த இதழ்; 1883 முதல் 1923 வரை ஷ்டுட்கார்டில் வெளிவந்தது. 1917 அக்டோபர் வரை காவுத்ஸ்கியும் பின் குனோவும் இதன் பதிப்பாசிரியர்களாயிருந்தனர். ஏகாதிபத்திய யுத்தத்தின் போது (1914—1918) இந்த சஞ்சிகை மையவாத நிலையில் நின்றது, நடைமுறையில் சமூக-தேசியவெறியர்களை ஆதரித்தது.—30.

18 லெனின் எழுதிய ''யுத்தத்தைப் பற்றிய ஒரு ஜெர்மன் குரல்'', ''உள்நாட்டு யுத்தக் கோஷம் பற்றிய விளக்கம்'', ''பூர்ஷ்வா வள்ளல்களும் புரட்சிகர சமூக-ஜனநாயகமும்'' ஆகிய கட்டுரைகள் இங்கு குறிப்பிடப்படுகின்றன. இவை ''சோத்சியல்-டெமக்ராத்'' என்ற பத்திரிகையில் வெளியாயின.

சோத்சியால்-டெமக்ராத் (''சமூக-ஜனநாயகவாதி'')—ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மத்தியப் பத்திரிகை, 1908 பிப்ரவரி முதல் 1917 ஜனவரி வரை சட்டவிரோதமாக வெளியிடப்பட்டது. இப்பத்திரிகையின் முதல் இதழை ருஷ்யாவில் வெளியிட மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் தோல்வியடைந்த பின் இது வெளிநாட்டிற்கு (பாரிசிற்கும் ஜெனீவாவிற்கும்) மாற்றப்பட்டது. 1911 டிசம்பர் முதல் வி. இ. லெனின் இதன் பதிப்பாசிரியரானார்.

1913 டிசம்பர் 15(28)இல் இதன் 32ஆவது இதழ் வெளிவந்ததும் இது தற்காலிகமாக நிறுத்தப்பட்டது;

மீண்டும் இது உலக ஏகாதிபத்திய யுத்த ஆண்டுகளில் வெளிவரலாயிற்று. யுத்த கால இடையூறுகளைப் பொருட்படுத்தாமல் இப்பத்திரிகை முறையாக வெளி வந்தது. இதை வெளியிடுவது சம்பந்தமான எல்லாக் காரியங்களையும் லெனின் கவனித்தார், ஒவ்வொரு இதழின் உள்ளடக்கத்தையும் முடிவு செய்தார், பதிப் பாசிரியர் பணியை செய்தார், பத்திரிகையின் வடிவம், அச்சடிப்புப் பணிகளிலும் ஈடுபட்டார்.

உலக ஏகாதிபத்திய யுத்தத்தின் போது, சர்வதேச சந்தர்ப்பவாதம், தேசியவாதம், தேசியவெறி ஆகிய வற்றிற்கு எதிரான போராட்டத்திலும் போல்ஷிவிசக் கோஷங்களைப் பரப்புவதிலும் ஏகாதிபத்திய யுத்தம், இதை ஊக்குவித்தவர்கள்,எதேச்சாதிகாரம்,முதலாளித் துவம் ஆகியவற்றிற்கு எதிரான போராட்டத்திற்குத் தொழிலாளி வர்க்கத்தையும் உழைக்கும் மக்கள் திரளினரையும் தட்டியெழுப்புவதிலும் ''சோத்சியால்-டெமக்ராத்'' பத்திரிகை மகத்தான பங்காற்றியது.—33.

19 1871ஆம் ஆண்டு நடந்த பாரிஸ் கம்யூன்.—34.

20 1905 அக்டோபர்—டிசம்பர் — ருஷ்யாவில் 1905—1907ஆம் ஆண்டுகளின் புரட்சி உச்சக்கட்டத்திலிருந்த நேரம். அக்டோபரில் அகில ருஷ்ய அரசியல் வேலை நிறுத்தம் நடந்தது, டிசம்பரில் மாஸ்கோ, டோன் நதிக் கரையிலுள்ள ரஸ்தோவ், கிராஸ்னயார்ஸ்க், செவஸ்தோப்பல், இன்னும் பல நகரங்கள், தொழில் துறை மையங்களில் ஆயுத எழுச்சிகள் நடந்தன.—34.

21 கோலஸ் (''குரல்'')—மென்ஷிவிக்குகளின் பத்திரிகை; 1914 செப்டெம்பர் முதல் 1915 ஜனவரி வரை பாரிசில் வெளிவந்தது.—35.

22 *The Economist.* (''பொருளியலாளர்'')—பொருளாதார, அரசியல் விஷயங்கள் பற்றிய பிரிட்டிஷ் வார இதழ், பெரும் தொழில்துறை பூர்ஷ்வா வர்க்கத்தின் சஞ்சிகை, 1843 முதல் லண்டனில் வெளிவருகிறது.—51.

23 கூட்டில் அடைந்த மனிதன்—இதே பெயரில் வெளிவந்த அ. பா. சேகவின் கதையில் வரும் கதாநாயகன். எந்த ஒரு புதிய விஷயத்தையும் முன்முயற்சியையும் கண்டு அஞ்சும் சாதாரண மனிதன்.—53.

24 கேதே கூறியது.—59.

25 சட்டமியற்றும் உரிமைகளின்றி, கூடி ஆலோசனை நடத்தும் உறுப்பாக அரசு டூமாவை ஏற்படுத்துவது பற்றிய ஜாரின் அறிக்கை ருஷ்யாவில் 1905 ஆகஸ்டு 6(19)இல் வெளியிடப்பட்டது. இந்த டூமாவிற்கு, அன்றைய உற்நாட்டு அமைச்சராயிருந்த அ. கி. புலீகினின் பெயர் இடப்பட்டது. புலீகின் டூமா கூட்டப்படவேயில்லை, வளர்ந்து வந்த புரட்சி இயக்கம் இத்திட்டம் நிறைவேறாமல் செய்தது.—62.

26 1915 பிப்ரவரி 14—19இல் (பிப்ரவரி 27—மார்ச் 4இல்) பெர்னில் நடைபெற்ற போல்ஷிவிசக் கட்சி வெளிநாட்டு கிளைகளின் மாநாடு இங்கு குறிப்பிடப்படுகிறது.—66.

27 அகிலம் (Die Internationale)—மார்க்சியத் தத்துவம், நடைமுறை பற்றிய இதழ், ரோ. லுக்சம்புர்க், ஃப்.மேரிங்கால் தோற்றுவிக்கப்பட்ட இது 1915 முதல் 1939 வரை இடைவெளிகளுடன் வெளிவந்தது.—69.

28 ஜொரேசிஸ்டுகள்—பிரெஞ்சு சோஷலிச இயக்கத்தின் சந்தர்ப்பவாதப் பிரிவு.—72.

29 மென்ஷிவிக்குகள்—ருஷ்ய சமூக-ஜனநாயகத்தின் சந்தர்ப்பவாதப் போக்கு, 1905—1907ஆம் ஆண்டுகளின் புரட்சி தோல்வியடைந்ததும் பெரும்பாலான மென்ஷிவிக்குகள் கலைப்புவாதிகளின் நிலைக்கு வந்தனர். ருஷ்ய தொழிலாளி வர்க்கத்தின் தலைமறைவு புரட்சிக் கட்சி கலைக்கப்பட வேண்டுமென்றும் சமூக-ஜனநாயகவாதிகளின் எல்லா புரட்சிகர நடவடிக்கைகளும் நிறுத்தப்பட வேண்டுமென்றும் கலைப்புவாதிகள் கோரினர். சமூக-ஜனநாயகவாதிகள் ஜாரிச அரசாங்கத்தால் அனுமதிக்கப்பட்ட சட்டபூர்வமான நடவடிக்கைகளில் மட்டுமே ஈடுபட வேண்டும் என்று கருதிய கலைப்புவாதிகள் ''வெளிப்படையான'', அதாவது சட்டபூர்வமான கட்சியை ஏற்படுத்த வேண்டுமென முன்மொழிந்தனர். இக்கட்சியில் சமூக-ஜனநாயகவாதிகளுடன் கூட சோஷலிஸ்டு-புரட்சிக்காரர்கள்,அராஜகவாதிகள்,இதர குட்டி முதலாளித்துவக் கட்சியினர் இருப்பார்கள். கலைப்புவாதிகளுக்கு தொழிலாளி வர்க்கத்தில் எவ்விதச் செல்வாக்கும் இருக்கவில்லை. 1912 ஜனவரியில் நடந்த பிராக் மாநாட்டில் கலைப்புவாதிகள் ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டனர்.—72.

30 பிரெஞ்சு சோஷலிச இயக்கத்தில் ஜூ. கெட்டு தலைமையில் இருந்த இடதுசாரி பிரிவு குறிப்பிடப்படுகிறது.

உலக ஏகாதிபத்திய யுத்தம் துவங்கியதும் கெட்டு இதை ஆதரித்தார், பிரெஞ்சு ஏகாதிபத்திய பூர்ஷ்வா அரசாங்கத்தில் இடம் பெற்றார்.

இவர் 1907—1914இல் பாரிசில் *Le Socialisme* (''சோஷலிசம்'') எனும் இதழை வெளியிட்டார், இதன் பதிப்பாசிரியராயிருந்தார்.—72.

31 1896—1898இல் ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி எ. பெர்ன்ஷ்டைன் ''சோஷலிசப் பிரச்சினைகள்'' என்னும் தொடர் கட்டுரைகளை வெளியிட்டார்; மார்க்சியத்தைத் திருத்த வேண்டும், இதன் தத்துவஞான, பொருளாதார, அரசியல் அடிப்படைகளைக் கைவிட வேண்டுமென இவர் கோரினார். மார்க்சியத்தின் புரட்சிகர சாரத்தை நிராகரித்த பெர்ன்ஷ்டைன், முதலாளித்துவ சமுதாய வரம்புகளுக்குள் தனிப்பட்ட சீர்திருத்தங்களுக்காகப் போராடுவதுடன் சமூக-ஜனநாயகம் நிற்க வேண்டுமென கருதினார். ஜெர்மன் சமூக-ஜனநாயகக் காங்கிரசுகளில் பெர்ன்ஷ்டைனின் திருத்தல்வாதம் கண்டிக்கப்பட்டது. என்றாலும் ஜெர்மன் கட்சி பெர்ன்ஷ்டைன்வாதத்திலிருந்து போதுமான அளவு உறுதியுடன் விலகவில்லை.—72.

32 பிரெஞ்சு சோஷலிஸ்டு அ. எ. மில்லிரான் 1899இல் சோஷலிசத்திற்குத் துரோகமிழைத்து பிரெஞ்சு பூர்ஷ்வா அரசாங்கத்தினுள் நுழைந்தார். 1900ஆம் ஆண்டு பாரிசில் நடைபெற்ற இரண்டாவது அகிலத்தின் காங்கிரஸ் பூர்ஷ்வா அரசாங்கங்களுக்குள் சோஷலிஸ்டுகள் நுழைவதைக் கண்டிக்கும் தீர்மானத்தை ஏற்றது; ஆனால் ''அசாதாரண சந்தர்ப்பங்களில்'' இவ்வாறு நுழைவது அனுமதிக்கப்பட்டது.—72.

33 *Vorwärts* (''முன்னோக்கி'')—ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் தினசரி, 1891 முதல் 1933 வரை பெர்லினில் வெளிவந்தது; உலக ஏகாதிபத்திய யுத்த ஆண்டுகளில் (1914—1918) சமூக-தேசியவெறி நிலையை வகித்தது.—76.

34 சோஷலிஸ்டு மாத பத்திரிகை (“*Sozialistische Monatshefte*”)—ஜெர்மன் சந்தர்ப்பவாதிகளின் பிரதான இதழ், சர்வதேச திருத்தல்வாதத்தின் இதழ்களில் ஒன்று.

1897 முதல் 1933 வரை பெர்லினில் வெளிவந்தது. உலக ஏகாதிபத்திய யுத்தத்தின் போது (1914—1918) சமூக-தேசியவெறி நிலையைப் பின்பற்றியது.—83.

35 ஃபேபியன்கள்—1884இல் தோற்றுவிக்கப்பட்ட பிரிட்டிஷ் சீர்திருத்தவாத ஸ்தாபனமாகிய ஃபேபியன் சங்

கத்தின் உறுப்பினர்கள். உலக ஏகாதிபத்திய யுத்த ஆண்டுகளில் *(1914 — 1918)* சமூக-தேசியவெறி நிலையை வகித்தனர்.—*83.*

36 நாஷா ஸார்யா *(''எமது உதயம்'')*—மென்ஷிவிக்குகள், கலைப்புவாதிகளின் சட்டபூர்வமான மாத இதழ், *1910—1914*இல் பீட்டர்ஸ்பர்கில் வெளிவந்தது.—*83.*

37 பிராவ்தாவாதம்—*''பிராவ்தா''* என்ற போல்ஷிவிக் பத்திரிகையின் பெயரிலிருந்து, போல்ஷிவிசம்.—*83.*

38 டெஸ்னியாக்குகள்—பல்கேரிய சமூக-ஜனநாயகக் கட்சியின் புரட்சிகரப் போக்கு. *1903*இல் இது சுயமான பல்கேரிய தொழிலாளர் சமூக-ஜனநாயகக் கட்சியாகியது.

நோவெ ா வ்ரேமே *(''புதிய காலம்'')*—''டெஸ்னியாக்குகளின்'' விஞ்ஞான தத்துவார்த்த இதழ், *1897*இலிருந்து வெளிவந்தது.—*84.*

39 *Volksrecht (''மக்கள் உரிமை'')*—ஸ்விட்சர்லாந்து சமூக-ஜனநாயகக் கட்சியின் தினசரி, ஜூரிச்சில் *1898* முதல் வெளிவருகிறது.

*Berner Tagwacht (''பெர்ன் காவலாளி'')*—ஸ்விட்சர்லாந்து சமூக-ஜனநாயகக் கட்சியின் பத்திரிகை, *1893* முதல் பெர்னில் வெளிவருகிறது.—*85.*

40 *L'Humanité (''மனிதகுலம்'')*—பிரெஞ்சு சோஷலிசக் கட்சியின் தினசரியாக *1904*இல் ஜா. ஜொரேசால் தோற்றுவிக்கப்பட்டது. ஏகாதிபத்திய யுத்த ஆண்டுகளில் *(1914—1918)* சமூக-தேசியவெறி நிலையை வகித்தது.—*85.*

41 ஹெரஸ்திராட்டஸ்—பண்டைய கிரேக்க புராணக் கதையின் பாத்திரம்; பண்டைய கதையின்படி இவன் புகழ் பெறுவதற்காக டயனாவின் கோயிலை எரித்தான்.—*86.*

42 போல்ஷிவிக்குகளுக்கு எதிராக *1914* ஜூனில் பிரஸ்ஸல்சில் நடத்திய கூட்டத்தில் கலைப்புவாதிகள், திரோத்ஸ்கிவாதிகள், பூந்த்வாதிகள், மற்ற சந்தர்ப்பவாதப் போக்கினர் ஆகியோர் ஏற்படுத்திய கூட்டு.—*87.*

43 கா. லீப்க்னெஹ்ட், ரோ. லுக்சம்புர்க், ஃப். மேரிங் ஆகியோரின் தலைமையிலிருந்த ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் இடதுசாரிப் பிரிவு. இப்பிரிவினர் உலக ஏகாதிபத்திய யுத்த ஆண்டுகளிலும் சர்வதேசிய

வாதத்திற்கு விசுவாசமாயிருந்தனர், ஜெர்மன் சமூக-ஜனநாயகத் தலைமையை வன்மையாகக் கண்டித்தனர். —88.

44 **பிரஷ்ய ஆண்டு மலர்** *(Preußische Jahrbücher)*—அரசியல், வரலாறு, இலக்கியப் பிரச்சினைகள் சம்பந்தமான ஜெர்மன் பழமைவாத இதழ்; 1858 முதல் 1935 வரை பெர்லினில் வெளிவந்தது.—89.

45 தாங்க இயலா கடுமையான வாழ்க்கை, தொழிலாளர்கள் மனிதத் தன்மையற்ற சுரண்டலால் அல்லலுறுவது ஆகியவற்றைப் பற்றி ஜார் மன்னனிடம் முறையிடும் பொருட்டு பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்கள், அவர்களின் குடும்பத்தினர் ஆகியோரை ஒன்றுதிரட்டி பாதிரியார் கப்போன் 1905 ஜனவரி 9(22)இல் ஜார் மன்னனின் குளிர்கால அரண்மனையை நோக்கி ஒரு சமாதான ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்தார். ஜார் மன்னனின் இராணுவம் இச்சமாதான ஊர்வலத்தின் மீது துப்பாக்கிச் சூடு நடத்தியது. ஜார் அரசாங்கத்தின் கொடூரத்திற்குப் பதிலளிக்கும் முகமாகத் தொழிலாளர்கள் நாடு பூராவும் பெரும் ஆர்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள், புரட்சிப் போராட்டங்கள் ஆகியவற்றை நடத்தினர். 1905—1907ஆம் ஆண்டுகளின் புரட்சி ஆரம்பமாகியது.—104.

46 "பொருளாதாரவாதம்"—19—20ஆம் நூற்றாண்டுகளின் சந்திப்பில் ருஷ்ய சமூக-ஜனநாயகத்தில் நிலவிய சந்தர்ப்பவாதப் போக்கு. ஜாரிசத்திற்கு எதிரான அரசியல் போராட்டம் என்பது மிதவாத முதலாளி வர்க்கத்தின் பணி என்றும் தொழிலாளர்கள் தம் வேலை நேரக் குறைப்பு, ஊதிய உயர்வு போன்றவற்றிற்காகப் பொருளாதாரப் போராட்டத்தை மட்டும் நடத்தினால் போதும் என்றும் கருதிய "பொருளாதாரவாதிகள்" தொழிலாளர்கள் அரசியல் போராட்டத்தில் ஈடுபடுவதை எதிர்த்தனர்.—106.

47 **ரபோச்சயா மீஸ்ல், ரபோச்சியே தேலோ**—"பொருளாதாரவாதக்" கருத்துகளைப் பிரசாரம் செய்த பத்திரிகைகள்.—106.

48 சோஷலிச நிர்மாணிப்பில் தொழிற்சங்கங்களின் பங்கு, கடமைகள் பற்றிய விவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்த காலகட்டத்தில் இப்பிரசுரம் 1921 ஜனவரியில் வி.இ. லெனினால் எழுதப்பட்டது. இந்த விவாதத்தை திரோத்ஸ்கி கட்சியின் மீது திணித்தார். தொழிற்சங்கங்களின் ஐந்தாவது அகில ருஷ்ய மாநாட்டில் ருஷ்ய

கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சிக் குழுவிடம் 1920 நவம்பர் 3இல் உரையாற்றிய திரோத்ஸ்கி, தொழிற் சங்கங்களில் ஜனநாயகக் கோட்பாடுகளை அமல்படுத் தும் கட்சியின் கொள்கையை எதிர்த்தார், தொழிற் சங்கங்களின் தலைமையைத் ''துப்புரவாக்கவும்'' நிர் வாக முறைகளைப் பலப்படுத்தவும் வேண்டுமென கோரினார். லெனின் ஆதரவாளர்களுக்கும் திரோத்ஸ்கி ஆதரவாளர்களுக்கும் இடையிலான விவாதங்களில் தான் ஏதோ ''இடைப்பட்ட அடிதாங்கியாக'' இருப்ப தாகக் கூறிக் கொண்ட புஹாரின் நடைமுறையில் திரோத்ஸ்கியின் நிலையை ஆதரித்தார். லெனின் இவ் விவாதத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தார்; இது நாட்டின் முன் நிற்கும் பெரும் நடைமுறை கடமைகளின் தீர்வி லிருந்து கட்சியின் கவனத்தைத் திருப்புவதாயும் யதார் தத்திலிருந்து விலகி சூட்சுமமான வெற்றுப் பேச்சு களுக்கு இது இட்டுச் செல்வதாயும் லெனின் கருதி னார். இறுதியாக திரோத்ஸ்கிவாதிகள் விவாதத்தை ஆரம்பித்து வைத்ததும் லெனின், திரோத்ஸ்கியின் தவறான கருத்துகளைப் பல கட்டுரைகள், சொற் பொழிவுகளில் அம்பலப்படுத்தினார். இரண்டு மாதங் களுக்கும் மேலாக நீடித்த இவ்விவாதம் கட்சி ஸ்தா பனங்களில் திரோத்ஸ்கிவாதிகளின் முழுத் தோல்வியில் முடிந்தது, திரோத்ஸ்கியின் கொள்கைத் திட்டம் நிராகரிக்கப்பட்டது.—*108*.

49 இங்கு குறிப்பிடப்படுவது 1920-21ல் நடைபெற்ற தொழிற்சங்கங்களின் மீதான விவாதத்தில் உருவாக் கப்பட்ட கட்சி விரோத கோஷ்டிப் பிரிவான ''இடைப் பட்ட குழு'' ஆகும். புஹாரின் இதன் தலைவராக இருந்தார். லெனினியம், திரோத்ஸ்கிவாதம் எனும் இரு கொள்கைத் திட்டங்களுக்கு இடையிலான மோத லில் இடைத்தடுக்காகச் செயல்பட்டு இவை இரண் டையும் இணக்கப்படுத்த முயன்றது இந்த கோஷ்டி, ஆனால் உண்மையில் இது திரோத்ஸ்கிவாதிகளைத் தாங்கி ஆதரித்து அவர்களைக் காப்புச் செய்யும் ஒன்றாகச் செயல்பட்டு லெனினையும் கட்சிக் கொள்கை யையும் எதிர்த்த போராட்டத்தில் அவர்களுக்கு உதவி புரிந்தது. விரைவில் புஹாரின் ஆதரவாளர்கள் பகிரங் கமாயும் திரோத்ஸ்கிவாதிகளுடன் சேர்ந்து விட்டார் கள்.—*109*.

50 திசெக்த்ரானின் தலைமை (இதில் திரோத்ஸ்கிவாதி கள் மிகுந்திருந்தனர்) அதிகார வர்க்க மனப்பாங்கு டைய வேலை முறைகளை ஊக்குவித்தது, முரட்டுத் தனமான நிர்வாக முறைகளைப் பின்பற்றியது, தொழிற்

சங்கப் பணியாளர்களை மேலிருந்து நியமித்தது, இது போன்ற இன்ன பிற நடவடிக்கைகளை மேற்கொண்டது. தேர்தல் முறை, ஜனநாயகக் கோட்பாடுகள் ஆகிய வற்றை கைவிட்டதால் தொழிற்சங்க உறுப்பினர்களுக்கு ஆத்திரமேற்பட்டது, இது திசெக்த்ரானில் நடைமுறை பிளவிற்கு வழியமைத்தது. 1921 மார்ச்சில் நடந்த போக்குவரத்து தொழிலாளர்களின் முதல் அகில ருஷ்ய காங்கிரஸ் திரோத்ஸ்கிவாதிகளை திசெக்த்ரானிலிருந்து நீக்கியது, ஜனநாயக ரீதியான தொழிற்சங்கப் பணிக்குத் திரும்புமாறு கட்டளையிட்டது.—118.

51 நீர்வழிப் போக்குவரத்துத் துறையின் தொழிற்சங்க ஊழியர்கள் திசெக்த்ரான் பின்பற்றிய திரோத்ஸ்கிவாத நிர்வாக முறைகளைக் கண்டித்தனர்.—122.

52 இந்த ஆணை, திசெக்த்ரானின் திரோத்ஸ்கிவாதத் தலைமை பெரிதும் பின்பற்றிய முரட்டுத்தனமான நிர்வாகம் மற்றும் அதிகார வர்க்க மனப்பாங்கிற்குச் சிறந்த உதாரணமாக இருந்தது; போக்குவரத்தைப் புனர்நாட்டுவதில் தொழிற்சங்கங்களின் பணியைப் புரிந்து கொள்ளாததற்கான சிறந்த எடுத்துக்காட்டாயும் இது திகழ்ந்தது. தொழிற்சங்கங்கள் பழையதாகிப் போன இராணுவ கமிட்டிகளுடன் ஒப்பிடப்பட்டன, இவற்றிற்குக் ''கமிட்டி செக்கடி வேலை'' என்று பெயரிடப்பட்டது, நீர்வழிப் போக்குவரத்துப் பணிகளை ஒழுங்கமைப்பதிலிருந்து இவை மேல்மட்ட உத்திரவுகளின்படி நீக்கப்பட்டன.—123.

53 ''தொழிற்சங்கங்கள், இன்றைய நிலைமை, தோழர் திரோத்ஸ்கியின் தவறுகள்'' எனும் தலைப்பில் வி. இ. லெனின் ஆற்றிய சொற்பொழிவு இங்கு குறிப்பிடப்படுகிறது.—125.

54 தொழிற்சாலைகளில் உழைப்பு கட்டுப்பாட்டை வலுப்படுத்தும் பொருட்டு முன்மொழியப்பட்ட கட்டுப்பாட்டு நீதிமன்றங்கள் இங்கு குறிப்பிடப்படுகின்றன. இவை ருத்சுதாக்கின் ஆராய்ச்சியுரைகளில் முன்மொழியப்பட்டன.—134.

55 பொருளாதார நிர்வகிப்பில் தொழிற்சங்கங்களின் பங்கேற்பைப் பற்றி இங்கு குறிப்பிடப்படுகிறது.—134.

56 ''பிரான்சில் உள்நாட்டுப் போர்'' என்னும் நூலில் கா. மார்க்ஸ் பாரிஸ் கம்யூனை ''உயர்ந்த பட்சம் வளைந்து கொடுக்கும் அரசியல் வடிவம்'' என்று மதிப்

பிட்டதையும் 1871 ஏப்ரல் 12இல் லு. கூகல்மனுக்கு எழுதிய கடிதத்தில் ''பாரிஸ்காரர்களின் வளைந்து கொடுக்கும் தன்மையை'' உயர்வாகப் பாராட்டியதை யும் அனேகமாக வி. இ. லெனின் குறிப்பிட்டிருக்க வேண்டும்.—170.

57 1856 ஏப்ரல் 16இல் கா. மார்க்ஸ் பி. எங்கெல்சிற்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார்: ''விவ சாயிகள் யுத்தத்தின் ஏதாவதொரு வகையான இரண் டாம் பதிப்பின் மூலம் பாட்டாளி வர்க்கப் புரட்சிக்கு ஆதரவளிக்கும் சாத்தியத்தைத் தான் ஜெர்மனியில் எல்லாமே சார்ந்திருக்கிறது. அது நடந்தால் சம்பவம் பிரமாதமாக இருக்கும்''.—171.

58 1918 மார்ச்சில் பிரேஸ்த்-லிட்டோவ்ஸ்கில் சோவியத் அரசாங்கம் ஜெர்மனியுடனும் இதன் கூட்டாளிகளுட னும் செய்து கொண்ட சமாதான உடன்படிக்கை. பிரேஸ்த் சமாதான உடன்படிக்கை சோவியத் நாட் டிற்கு மிகவும் கடினமான நிபந்தனைகளில் செய்து கொள்ளப்பட்டது, என்றாலும் ஏகாதிபத்திய யுத்தத் திலிருந்து ருஷ்யா வெளிவந்து, சமாதான பொருளா தார நிர்மாணிப்பில் சோவியத் மக்கள் இறங்க இது வாய்ப்பளித்தது. ஜெர்மனியில் புரட்சி நடந்த பின் (1918 நவம்பர்) பிரேஸ்த் சமாதான உடன்படிக்கை ரத்தானது.—175.

59 புதிய பொருளாதாரக் கொள்கை—உள்நாட்டு யுத்தம் முடிந்ததும் 1921 முதல் சோவியத் அரசாங்கம் இதைப் பின்பற்றத் துவங்கியது. யுத்தத்தின் கட்டாயத்தால் அமலில் இருந்த போர்க்கால கம்யூனிசக் கொள்கை யின்படி தனியார் பண்ட பரிமாற்றம் தடை செய்யப் பட்டிருந்தது, விவசாயிகள் தம் குடும்பத் தேவைக்கு மேல் மிஞ்சிய தானியம் முழுவதையும் அரசிற்கு அளித் தார்கள், அரசு இதை பட்டினியால் வாடிய நகரங் களுக்கும் இராணுவத்திற்கும் அனுப்பியது. இதற்கு மாறாக புதிய பொருளாதாரக் கொள்கை உணவுப் பொருள் வரி முறையைக் கொண்டு வந்தது. வரிபோக எஞ்சிய தானியத்தை விவசாயிகள் சந்தையில் விற்ற னர். இக்கொள்கை, குறிப்பிட்ட நிபந்தனைகளில் ஓரளவிற்கு தனி மூலதனமும் வர்த்தக சுதந்திரமும் நிலவ அனுமதித்தது.—175.

# பெயர்க் குறிப்பகராதி

**அக்செல்ரோத், பாவெல் பரீசவிச்** *(1850—1928)—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி. ருஷ்ய சமூக-ஜனநாயக தொழிலாளர் கட்சியின் 2ஆவது காங்கிரசிற்குப் பின் (1903) மென்ஷிவிக், பின்னால் கலைப்புவாதியானார். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் மையவாத கோஷங்களின் போர்வையினுள் மூடி மறைந்து கொண்டு சமூக-தேசியவெறி நிலையை வகித்தார்.—23, 25, 26, 34, 71.*

**அரிஸ்டாட்டில்** *(கி.மு. 384—322)—பண்டைய கிரேக்க தத்துவஞானி, அக்காலத்தின் எல்லா விஷயங்களையும் பற்றி கட்டுரைகள் எழுதினார்; தத்துவஞானத்தில் பொருள்முதல்வாதத்திற்கும் கருத்துமுதல்வாதத்திற்கும் இடையில் ஊசலாடினார்.—9, 12.*

**அர்த்தியோம் (செர்கேயெவ், பியோதர் அந்திரேயெவிச்)** *(1883—1921)—சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி மற்றும் சோவியத் அரசின் பிரபல தலைவர். 1921இல் சுரங்கத் தொழிலாளர்களின் அகில ருஷ்ய சங்கத்தின் மத்திய கமிட்டித் தலைவர், அகில ருஷ்ய மத்திய நிர்வாக கமிட்டி உறுப்பினர்.—122.*

**அலெக்சீன்ஸ்கி, கிரிகோரி அலெக்சேயெவிச்** *(1879இல் பிறந்தார்) — சமூக-ஜனநாயகவாதி, 1905 — 1907ஆம் ஆண்டுகளின் புரட்சியின் போது போல்ஷிவிக்குகளை நெருங்கி வந்தார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறி நிலைக்கு மாறினார், ஜாரிசத்தின் ஆக்கிரமிப்புக் கொள்கையை ஆதரித்தார்.—83.*

**ஆர்ம்ஸ்டிராங்**—*பிரிட்டிஷ் இராணுவ தொழில்துறை கம்பெனி உடைமையாளர்களின் குடும்பப் பெயர்.—51.*

**எங்கெல்ஸ் [Engels], பிரெடெரிக்** *(1820—1895).—5, 6, 7, 9, 38, 40.*

**ஃபாயர்பாஹ் [Feuerbach], லுட்விக் அந்திரேயஸ்** *(1804—1872)—ஜெர்மன் தத்துவஞானி, பொருள்முதல்வாதி, நாத்திகர். இவருடைய தத்துவஞானம் மார்க்சியத்*

*தத்துவஞானத்தின் தத்துவார்த்த மூல ஊற்றுகளில் ஒன்றாகும்.—14, 59.*

**ஃபிலோன்** *(அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த ஃபிலோன்)* [Philo], *(சுமாராக கி.மு. 25—கி.பி. 50)—பண்டைய காலத் தத்துவஞானி, அலெக்சாந்திரியாவில் நிலவிய யூத மரபின் தலைவர்.—9.*

**ஃபோல்க்மான்** [Volkmann], **பாவுல்** *(சுமாராக 1856—1938)—கேனிக்ஸ்பெர்கில் தத்துவார்த்த பௌதீகப் பேராசிரியர் (1894 முதல்); தத்துவஞானத்தில் கதம்பவாதி, பொருள்முதல்வாதத்திற்கு எதிராகப் போராடினார்.—14.*

**கசெண்டீ** [Gassendi], **பியேர்** *(1592—1655)—பிரெஞ்சு பொருள்முதல்வாதத் தத்துவஞானி, எபிகூரசின் அணுவாத மற்றும் நீதிசாஸ்திரத்தின் கருத்துகளை வளர்த்தார்; வானசாஸ்திரம், கணிதம், எந்திரவியல், விஞ்ஞான வரலாறு ஆகிய துறைகளிலும் இவரது படைப்புகள் பிரபலமானவை.—14.*

**கசோவ்ஸ்கி, வி.** *(1870—1941)—பூந்த் கட்சியை ஸ்தாபித்தவர்களில் ஒருவர், இதன் தலைவராகவும் மத்தியக் கமிட்டியின் உறுப்பினராகவும் இருந்தார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—17, 122.*

**கப்போன், கியோர்கி அபல்லோனவிச்** *(1870—1906)—பாதிரியார், 1905 ஜனவரி 9இல் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்கள் ஜார் மன்னனுக்குப் பிரேரணை தரச் சென்ற பவனிக்குத் தலைமை தாங்கினார்.—104.*

**கரிபால்டி** [Garibaldi], **ஜூஸேப்பெ** *(1807—1882)—இத்தாலிய தேசிய வீரர், இத்தாலிய புரட்சிகர ஜனநாயகத்தின் தலைவர், மாபெரும் படைத்தளபதி. அன்னிய ஒடுக்குமுறை, நிலப்பிரபுத்துவ எதேச்சாதிகார ஆட்சிமுறை, மதப் பிற்போக்கு ஆகியவற்றிற்கு எதிராக இத்தாலியை ஒன்றுதிரட்டும் போராட்டத்திற்கு 1848—1867ஆம் ஆண்டுகளில் தலைமை தாங்கினார்.—42.*

**கர்தேனின், யூ.**—*பார்க்க: செர்னோவ், வி. மி.*

**கலீனின், மிஹயீல் இவானவிச்** *(1875—1946)—சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் அரசின் பெரும் தலைவர்களில் ஒருவர். 1898 முதல் கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினர். 1919 மார்ச் முதல் அகில ருஷ்ய மத்திய*

நிர்வாகக் கமிட்டியின் தலைவர், 1922 டிசம்பர் முதல் சோவியத் யூனியனின் மத்திய நிர்வாகக் கமிட்டியின் தலைவர், 1938 முதல் சோவியத் யூனியனின் சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவின் தலைவர்; 1919 முதல் கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினர், 1926 முதல் கட்சியின் அரசியல் குழு உறுப்பினர்.—122.

காமெனெவ் (ரோசன்ஃபெல்ட்), லேவ் பரீசவிச் *(1883—1936)—1901 முதல் ருஷ்ய சமூக-ஜனநாயக தொழிலாளர் கட்சி உறுப்பினர். கட்சியின் 2ஆவது காங்கிரசிற்கு பின் (1903) போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சில பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். லெனினிய கட்சிக் கொள்கைக்கு எதிராக பன்முறை குரல் எழுப்பினார். கட்சி விரோத திரோத்ஸ்கி-ஸினோவியெவ் கூட்டை ஏற்பாடு செய்தவர்களில் ஒருவர் என்பதற்காக 1927இல் அகில ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சியின் 15ஆவது காங்கிரசால் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்; இரு முறை மீண்டும் சேர்த்துக் கொள்ளப்பட்டார், பின் கட்சி விரோத நடவடிக்கைக்காக வெளியேற்றப்பட்டார்.—122, 169.*

காய்யோ [Caillaux], ஜோசப் *(1863—1944)—பிரெஞ்சு அரசுப் பிரமுகர், தீவிரவாதிகளின் கட்சித் தலைவர்களில் ஒருவர். முதலாவது உலக யுத்தம் வரை நிதித் துறையமைச்சர், பிரதமர், உள்நாட்டு அமைச்சர்.—36.*

காவுத்ஸ்கி [Kautsky], கார்ல் *(1854—1938)—ஜெர்மன் சமூக-ஜனநாயகம் மற்றும் இரண்டாவது அகிலத்தின் தலைவர்களில் ஒருவர்; முதலில் மார்க்சிஸ்டு, பின் ஓடுகாலி; தொழிலாளர் இயக்கத்தில் சந்தர்ப்பவாதப் போக்குகளில் ஒன்றாகிய நடுநிலைவாதத்தின் (காவுத்ஸ்கிவாதம்) சித்தாந்திகளில் ஒருவர்.—20, 21, 23, 26, 27, 30, 31, 32, 34, 39, 40, 42, 45-77, 86, 89, 92, 98, 100-107, 175.*

கான்ட் [Kant], இமானுவெல் *(1724—1804)—மூலச்சிறப்புள்ள ஜெர்மன் தத்துவஞானத்தை ஆரம்பித்து வைத்தவர்; கான்டின் அறிதல் தத்துவத்தில் ஒரு முரண்பாடு உண்டு: இதில் கருத்துமுதல்வாதமும் பொருள்முதல்வாத அம்சங்களும் கலந்திருந்தன; இவர் புறவய ரீதியாக உள்ள ''தானேயான பொருட்களை'' அங்கீகரித்ததில் இது வெளிப்பட்டது.—14.*

கிசெல்யோவ், அலெக்சேய் செமியோனவிச் *(1879—1938)—*

1898 முதல் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சோவியத் அமைப்பு, பொருளாதாரத் துறை மற்றும் தொழிற்சங்கப் பணிகளைக் கவனித்து வந்தார். 1918இல் நெசவுத் தொழில்துறை மத்திய நிர்வாகக் குழுவின் தலைவராகவும் பின் தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன்சிலின் தலைமைக் குழு உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1920 இல் சுரங்கத் தொழிலாளர் சங்கத்தின் தலைவர். 1921இல் கட்சி விரோத, அராஜக-சிண்டிக்கல்வாதக் குழுவாகிய "தொழிலாளர் எதிர்க்கட்சியில்" பங்கேற்றவர். 1924 முதல் 1938 வரை அகில ருஷ்ய மத்திய நிர்வாகக் கமிட்டியின் செயலாளர்.—168.

கிரிம் [Grimm], ராபர்ட் (1881—1958)—ஸ்விட்சர்லாந்து சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைவர்களில் ஒருவர். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் மையவாதி, ஸிம்மர்வால்ட் மற்றும் கிந்தால் மாநாடுகளில் பங்கேற்றவர், சர்வதேசிய சோஷலிச கமிஷனின் தலைவர்.—85.

கிரெஸ்தின்ஸ்கி, நிக்கலாய் நிக்கலாயெவிச் (1883—1938)—சோவியத் அரசுத் பிரமுகர், போல்ஷிவிக். 1918—1921இல் ருஷ்ய சோவியத் சோஷலிச சமஷ்டிக் குடியரசின் நிதித்துறை மக்கள் கமிசார், 1919 டிசம்பர் முதல் 1921 மார்ச் வரை ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சி மத்தியக் கமிட்டியின் செயலாளர்; 1921இல் நடந்த தொழிற்சங்க விவாதத்தில் திரோத்ஸ்கி-புஹாரின் கொள்கைத் திட்டத்திற்கு ஆதரவளித்தார். பின்னால் ராஜதந்திரப் பதவிகளை வகித்தார்.—162.

கிரேய்லிஹ் [Greulich], ஹேர்மன் (1842—1925)—ஸ்விட்சர்லாந்து சமூக-ஜனநாயகக் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர், இதன் வலதுசாரிப் பிரிவின் தலைவர். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—84.

கிலாவுசேவித்ஸ் [Clausewitz], கார்ல் (1780—1831)—பிரஷ்ய ஜெனரல், பெரும் இராணுவ தத்துவார்த்தவாதி, நெப்போலியன் யுத்தங்கள், மற்ற யுத்தங்களின் வரலாறு பற்றிய பல நூல்கள், கட்டுரைகளை எழுதியுள்ளார்.—38, 39.

குச்கோவ், அலெக்சாந்தர் இவானவிச் (1862—1936)—பெரும் தொழிலதிபர், முடியரசுவாதி, அக்டோபரிஸ்டுகளின் கட்சியைத் தோற்றுவித்தவர், இதன் தலைவர்.—42.

குனோவ் [Cunow], ஹென்ரிஹ் *(1862—1936)*—*ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, வரலாற்றறிஞர், சமூகவியல் நிபுணர், மானுடவியல் நிபுணர். முதலில் மார்க்சிஸ்டுகளுடன் இருந்தார், பின்னர் திருத்தல்வாதியானார், மார்க்சியத்தைத் திரித்துக் கூறினார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-ஏகாதிபத்தியத்தின் சித்தாந்தி.*—**26, 27, 30, 43, 63, 106.**

கெட்டு [Guesde], ஜூல் (பசீல், மத்தியோ) *(1845—1922)*—*பிரெஞ்சு சோஷலிச இயக்கம் மற்றும் இரண்டாவது அகிலத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவர், இவற்றின் தலைவர்களில் ஒருவர்.*

*1901இல் கெட்டும் இவருடைய ஆதரவாளர்களும் பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியைத் தோற்றுவித்தனர். பிரெஞ்சு சீர்திருத்தவாத சோஷலிஸ்டுக் கட்சியுடன் இக்கட்சி இணைந்த பின் (1905) கெட்டு இந்த ஒன்றிணைந்த கட்சியின் இடதுசாரிப் பிரிவிற்குத் தலைவராயிருந்தார். முதலாவது உலக யுத்தம் ஆரம்பமானதிலிருந்து சமூக-தேசியவெறி நிலைக்கு மாறி பிரெஞ்சு பூர்ஷ்வா அரசாங்கத்தில் அங்கம் வகித்தார்.*—**20, 21, 69, 71, 73, 92.**

கோர்ட்டர் [Górter], ஹேர்மன் *(1864—1927)*—*ஹாலந்து இடதுசாரி சமூக-ஜனநாயகவாதி, கட்டுரையாளர். முதலாவது உலக யுத்தத்தின் போது சர்வதேசியவாதி, ஸிம்மர்வால்ட் இடதுசாரிக் குழுவின் ஆதரவாளர்.*—**84.**

சர்டோரியுஸ் வான் வால்டர்ஸ்ஹாவுசன் [Sartorius von Waltershausen], ஔகுஸ்ட் *(1852இல் பிறந்தார்)*—*ஜெர்மன் பொருளியலாளர், ஜெர்மன் ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர்; உலகப் பொருளாதாரம், அரசியல் பற்றிய பல கட்டுரைகள், நூல்களை எழுதியுள்ளார்.*—**80.**

சலாந்திரா [Salandra], அன்தோனியோ *(1853—1931)*—*இத்தாலிய அரசுப் பிரமுகர், இத்தாலிய தொழில் துறை ஏகபோகங்கள், பெரும் நிலச்சுவாந்தார்களின் ''மிதவாதக் கூட்டின்'' அதி வலதுசாரிக் கோஷ்டியின் தலைவர்களில் ஒருவர். 1914 முதல் 1916 வரை இத்தாலிய பிரதமர், அண்டான்டிற்கு ஆதரவாக இத்தாலி உலக யுத்தத்தில் இறங்க முன்மொழிந்தார்.*—**42.**

சஸ்னோவ்ஸ்கி, லேவ் செமியோனவிச் *(1886—1937)*—*1904 முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். 1918—1924இல் (இடைவெளிகளுடன் கூட) ''பேத்னத்தா'' (''ஏழ்மை'') என்னும் பத்திரிகையின் பதிப்பாசிரியரா*

*யிருந்தார். தொழிற்சங்க விவாதத்தின் போது (1920—1921) திரோத்ஸ்கியின் கொள்கைத் திட்டத்தை ஆதரித்தார். திரோத்ஸ்கியினுடைய எதிர்த்தரப்பின் தீவிர ஆதரவாளர்களில் ஒருவராயிருந்து செயல்பட்டதற்காக 1927இல் அகில ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சியின் 15ஆவது காங்கிரசில் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—119, 120, 121, 123.*

சாவின்கவ், பரீஸ் விக்தரவிச் *(ரோப்ஷின்) (1879—1925)—சோஷலிஸ்டு-புரட்சிக்காரர்களின் கட்சியின் பிரபல தலைவர், இதன் "தொண்டர் படையின்" ஸ்தாபகர்களில் ஒருவர். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் சமூக-தேசியவெறியர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சில எதிர்ப்புரட்சிக் கலகங்களுக்கு ஏற்பாடு செய்தார், சோவியத் குடியரசிற்கு எதிரான இராணுவத் தலையீட்டிற்கு உதவினார்.—41.*

சுஹானவ் நி. (கீம்மெர், நிக்கலாய் நிக்கலாயெவிச்) *(1882இல் பிறந்தார்)—குட்டி முதலாளித்துவ போக்குடைய பொருளாதார நிபுணர், கட்டுரையாளர், மென்ஷிவிக். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சோவியத் பொருளாதார அமைப்புகளிலும் நிறுவனங்களிலும் பணியாற்றினார்.—170, 173, 175.*

செம்பா [Sembat], மார்சேல் *(1862—1922)—பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர். 1914 ஆகஸ்டு முதல் 1917 செப்டெம்பர் வரை பிரான்சின் ஏகாதிபத்திய "தேசிய பாதுகாப்பு அரசாங்கத்தில்" சமூக நலப் பணித் துறை அமைச்சராயிருந்தார்.—86, 87, 102.*

செரெப்ரியக்கோவ், லியோனித் பெத்ரோவிச் *(1888—1937)—1905 முதல் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் மாஸ்கோ பிராந்திய கட்சிக் கமிட்டி உறுப்பினர், ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சி மத்தியக் கமிட்டியின் செயலாளர், அகில ருஷ்ய மத்திய நிர்வாகக் கமிட்டியின் செயலாளர். தொழிற்சங்க விவாதத்தின் போது (1920—1921) திரோத்ஸ்கி ஆதரவாளர்; 1923 முதல் திரோத்ஸ்கியின் எதிர்த்தரப்பிற்கு ஆதரவாகத் தீவிரமாகச் செயல்பட்டார். 1927இல் கட்சியிலிருந்து நீக்கப்பட்ட இவர் 1930இல் மீண்டும் சேர்த்துக் கொள்ளப்பட்டார், 1936இல் கட்சி விரோத நடவடிக்கைக்காக மீண்டும் வெளியேற்றப்பட்டார்.—113, 123.*

சேர்னோவ், விக்டர் மிஹாய்லவிச் *(கர்தேனின்) (1876—1952)*—சோஷலிஸ்டு-புரட்சிக்காரர்களின் கட்சியின் தலைவர், சித்தாந்தி, மார்க்சியத்திற்கு எதிரான கட்டுரைகளை எழுதினார். முதலாவது உலக யுத்தத்தின் போது இடதுசாரிக் கோஷங்களில் மூடி மறைந்து கொண்டு நடைமுறையில் சமூக-தேசியவெறி நிலையில் நின்றார்.—*41*.

டவிட் [David], எடுவார்டு *(1863—1930)*—ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் வலதுசாரிப் பிரிவின் தலைவர்களில் ஒருவர், திருத்தல்வாதி. முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—*21, 73, 96*.

டித்ஸ்கென் [Dietsgen], இயோசிஃப் *(1828—1888)*—ஜெர்மன் தொழிலாளி, சமூக-ஜனநாயகவாதி, தத்துவஞானி, இயக்கவியல் பொருள்முதல்வாத ஆதரவாளர்.—*15*.

டியுமா [Dumas], ஷார்ல் *(1883இல் பிறந்தார்)*—பிரெஞ்சு சோஷலிஸ்டு, கட்டுரையாளர், நாடாளுமன்ற உறுப்பினர். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—*21*.

டுரூல்ஸ்திரா [Troelstra], பீட்டர் இயேலஸ் *(1860—1930)*—ஹாலந்து தொழிலாளர் இயக்கப் பிரமுகர், வலதுசாரி சோஷலிஸ்டு. ஹாலந்து சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் ஸ்தாபகர்களில் (1894) ஒருவராயும் தலைவர்களில் ஒருவராயும் விளங்கினார். சந்தர்ப்பவாதி. முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—*84*.

டெக்கார்ட்டஸ் [Descartes], ரேனே *(லத்தீனில்*—Cartesius) *(1596—1650)*—பிரெஞ்சு தத்துவஞானி, கணித நிபுணர், இயற்கை விஞ்ஞானி.—*14*.

டெமாக்கிரிடஸ் *(அப்தேர்ரைச் சேர்ந்த டெமாக்கிரிடஸ்) (சுமாராக கி.மு. 460—370)*—பண்டைய கிரேக்க தத்துவஞானி, பொருள்முதல்வாதி, அணுவாதக் கொள்கையைத் தோற்றுவித்தவர்களில் ஒருவர்.—*14*.

திரோத்ஸ்கி (பிரான்ஷ்டைன்), லேவ் டவிடவிச் *(1879—1940)*—*1897* முதல் ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் உறுப்பினர், மென்ஷிவிக். 1912இல் கட்சி விரோத ஆகஸ்டு கூட்டை ஏற்படுத்தினார். முதலாவது உலக யுத்தத்தின் போது மையவாத நிலை வகித்தார். 1917இல் நடந்த பிப்ரவரி முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிக்குப் பின் வெளிநாட்டிலிருந்து

வந்த இவர் போல்ஷிவிக் கட்சியில் சேர்ந்தார், ஆனால் போல்ஷிவிச நிலைக்கு இவர் மாறவில்லை.

அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சில பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். கட்சியின் பிரதான கொள்கைக்கு எதிராக, சோவியத் யூனியனில் சோஷலிச நிர்மாணம் பற்றிய லெனினிய செயல் திட்டத்திற்கு எதிராக, கடுமையான கோஷ்டி சண்டையிட்டார். 1927இல் கட்சியிலிருந்து நீக்கப்பட்டார், 1929இல் சோவியத் விரோத நடவடிக்கைக்காக சோவியத் யூனியனிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—108-136, 139-144, 149-158, 160, 163, 166, 167, 169.

தெலெசீ [Delaisi], பிரான்சிஸ் (1873இல் பிறந்தார்)— பிரெஞ்சு குட்டி முதலாளித்துவ பொருளாதார நிபுணர், சிண்டிக்கல்வாதி, சாத்துவீகவாதி.—25.

தோம்ஸ்கி, மிஹயீல் பாவ்லவிச் (1880—1936)—1904 முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் மாஸ்கோ தொழிற்சங்க கவுன்சிலின் தலைவர். 1919 முதல் தொழிற்சங்கங்களின் அகில ருஷ்ய மத்தியக் கவுன்சிலின் தலைமைக் குழுவின் தலைவர். கட்சியின் லெனினியக் கொள்கையைப் பன்முறை எதிர்த்தார். 1928—1929இல் அகில ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சியின் உள்ளிருந்த வலதுசாரி சந்தர்ப்பவாதப் போக்கின் தலைவர்களில் ஒருவராயிருந்தார்.—113, 116, 122, 166.

நிக்கலாய் இரண்டாவது (ரமானவ்) (1868—1918)—கடைசி ருஷ்யப் பேரரசன் (1894—1917).—39.

நெப்போலியன் முதலாவது (போனப்பார்ட்) (1769—1821) —1804—1814 இலும் 1815இலும் பிரெஞ்சு பேரரசன்.—175.

நெப்போலியன் மூன்றாவது (போனப்பார்ட், லுயீ) (1808—1873)—1852 முதல் 1870 வரை பிரெஞ்சு பேரரசன். —41.

பத்ரேசவ், அலெக்சாந்தர் நிக்கலாயெவிச் (1869—1934)— மென்ஷிவிக் தலைவர்களில் ஒருவர். பிற்போக்கு தலைவிரித்தாடிய ஆண்டுகளில் (1907—1910) கலைப்புவாதி. முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—38, 102.

பிரான்டிங் [Branting], கார்ல் யால்மார் (1860—1925)— ஸ்வீடனின் சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைவர், இரண்டாவது அகிலத்தின் தலைவர்களில் ஒருவர். சந்

தர்ப்பவாத நிலைகளை வகித்தார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—*84*.

பிரியொபிரழேன்ஸ்கி, எவ்கேனி அலெக்சேயெவிச் *(1886—1937)—1903* முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் கட்சிப் பதவிகளையும் இராணுவ அரசியல் பதவிகளையும் வகித்தார். *1918*இல் ''இடதுசாரி கம்யூனிஸ்டாக'' இருந்தார். தொழிற்சங்க விவாதத்தின் போது *(1920—1921)* திரோத்ஸ்கியின் கொள்கைத் திட்டத்தை ஆதரித்தார். *1923* முதல் திரோத்ஸ்கிவாத எதிர்க்கட்சியில் தீவிரமாகப் பணியாற்றினார். இதற்காக *1927*இல் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார். *1929*இல் மீண்டும் கட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். ஆனால் பின்னர், கட்சி விரோத நடவடிக்கைக்காக மீண்டும் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—*113, 122, 162*.

பிரெயில்ஸ்ஃபோர்ட் [Brailsford], ஹென்ரி நோயெல் *(1873*இல் பிறந்தவர்)—பிரிட்டிஷ் கட்டுரையாளர், சாத்துவீகவாதி. பிரிட்டிஷ் மிதவாத மற்றும் தொழிலாளர் பத்திரிகைகளுடன் நெருங்கிய ஒத்துழைப்பைக் கொண்டிருந்தார். *1907*இல் சுயேச்சை தொழில் கட்சியுடன் இணைந்தார். முதலாவது உலக யுத்த துவக்கத்திலிருந்து ஜனநாயகக் கண்காணிப்பின் சாத்துவீகவாத சங்கத் தலைவர்களில் ஒருவராயிருந்தார்.—*36*.

பிளாங்கி [Blanqui], லுயீ ஔகுஸ்ட் *(1805—1881)*—பிரெஞ்சு புரட்சியாளர், கற்பனாவாத கம்யூனிஸ்டு, பல ரகசிய சங்கங்களை நடத்தி வந்தார்.—*43*.

பிளாட்டோ (சுமாராக கி.மு. *427—347)*—பண்டைய கிரேக்க தத்துவஞானி, புறவய கருத்துமுதல்வாதி.—*14*.

பிளெஹானவ், கியோர்கி வலென்தினவிச் *(1856—1918)*—ருஷ்ய, சர்வதேச தொழிலாளர் இயக்கத்தின் பெரும் தலைவர், ருஷ்யாவில் முதன்முதலாக மார்க்சியத்தைப் பரப்பியவர். மார்க்சியத்தின் தத்துவஞானமாகிய இயக்கவியல் பொருள்முதல்வாதம் பற்றி பல நூல்களை எழுதியவர். ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் 2ஆவது காங்கிரசிற்குப் பின் *(1903)* மென்ஷிவிக் தலைவர்களில் ஒருவர். பிற்போக்கு தலைவிரித்தாடிய ஆண்டுகளில் *(1907—1910)* மாஹிஸ்டுகளின் மார்க்சியத் திருத்தல்வாதத்தைச் சாடினார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியரா

யிருந்தார். அக்டபார் சோஷலிசப் பேரட்சியை எதிர்த்தார்.—*9, 13, 20-23, 30-37, 40-42, 64, 69-73, 83, 86, 87, 92, 106, 148.*

பிஸ்மார்க் [Bismarck], ஓட்டோ எடுவார்டு லியோபோல்டு *(1815—1898)*—பிரஷ்யா மற்றும் ஜெர்மனியின் அரசுத் தலைவர், ராஜதந்திரி. பிரஷ்யாவின் தலைமையின் கீழ் ஜெர்மனியை வலுக்கட்டாயமாக ஒன்றிணைத்தார். ஜெர்மானிய பேரரசின் முதல் சான்ஸலர் *(1871—1890)*. சோஷலிஸ்டுகளுக்கு எதிரான அசாதாரண சட்டத்தைக் கொண்டு வந்தவர் *(1878)*.—*41.*

பிஸ்ஸொலாட்டி [Bissolati], லியோனிதா *(1857—1920)*—இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர், இதன் வலதுசாரிப் பிரிவின் தலைவர். 1912 இல் இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார், "சமூக-சீர்திருத்தவாதக் கட்சியை" நிறுவினார். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியராயிருந்தார்.—*84.*

புலிகின், அலெக்சாந்தர் கிரிகோரியெவிச் *(1851—1919)*—ஜாரிச ருஷ்யாவின் அரசுப் பிரமுகர், 1905இல் உள்நாட்டு விவகாரத் துறை அமைச்சராயிருந்தார். ஜார் மன்னனின் கட்டளைக்கிணங்க வாக்குரிமையற்ற அரசு டூமாவைக் கூட்டும் திட்ட நகலைத் தீட்டினார்.—*62.*

புஹாரின், நிக்கலாய் இவானவிச் *(1888—1938)*—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, 1906இலிருந்து போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் சில பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். கட்சியின் லெனினியக் கொள்கையை பன்முறை எதிர்த்தார்: 1918இல் "இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள்" என்ற கட்சி எதிர்ப்புக் குழுவிற்குத் தலைமை தாங்கினார்; தொழிற்சங்கங்களைப் பற்றி கட்சியில் நடந்த விவாதங்களில் "இடைப்பட்ட அடிதாங்கி" என்ற நிலை வகித்தார், நடைமுறையில் திரோத்ஸ்கி குழுவை ஆதரித்தார்; 1928 முதல் கட்சியில் வலதுசாரி எதிர்ப் பிரிவிற்குத் தலைமை தாங்கினார். 1937இல் கட்சி விரோத நடவடிக்கைக்காகக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்.—*108-115, 118-126, 129-136, 141, 143-146, 149, 150, 155-157, 161, 163, 167, 169.*

பெத்ரோவ்ஸ்கி, கிரிகோரி இவானவிச் *(1878—1958)*—புரட்சிகர தொழிலாளர் இயக்கத்தில் தீவிரமாக பங்கேற்றவர்களில் ஒருவர், போல்ஷிவிக், பிரபல சோவியத், கட்சி, அரசுப் பிரமுகர்.—*122.*

இவர் இந்தப் புனைப் பெயரைக் கொண்டு 1915 ஏப்ரலில் *Preußische Jahrbücher* என்னும் பழமைவாத இதழில் ஒரு கட்டுரையை வெளியிட்டார். சமூக-ஜனநாயகத்தின் மையவாதத் தன்மை, "இடதுசாரிக்" கோஷங்களின் கீழ் முதலாளி வர்க்கத்துடனான வர்க்க ஒத்துழைப்புக் கொள்கையை மூடி மறைக்க சந்தர்ப்பவாதிகளுக்கு உதவுவதால் இதை வெளிப்படையாகப் புகழ்ந்தார், இதைப் பேணிக் காக்க வேண்டுமென முன்மொழிந்தார்.—89.

**மில்யூத்தின், விளதீமிர் பாவ்லவிச்** *(1884—1938)—1903* முதல் சமூக-ஜனநாயக இயக்கத்தில் பங்கேற்றார்; முதலில் மென்ஷிவிக்குகளுடன் இருந்த இவர் 1910 முதல் போல்ஷிவிக்குகளுடன் சேர்ந்தார். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் பொறுப்புள்ள சோவியத், நிர்வாகப் பதவிகளில் இருந்தார்; கட்சியின் மத்தியக் கமிட்டிக்கு வேட்பு உறுப்பினராகவும் மத்தியக் கண்காணிப்புக் கமிஷனின் உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.—137.

**மில்லிரான் [Millerand], அலெக்சாந்தர் எத்தியேன்** *(1859—1943)*—பிரெஞ்சு அரசியல் பிரமுகர். 90ஆம் ஆண்டுகளில் சோஷலிஸ்டுகளுடன் சேர்ந்தார். 1899இல் சோஷலிசத்திற்குத் துரோகமிழைத்து வால்டெக்-ரூஸ்ஸோ பூர்ஷ்வா அரசாங்கத்தில் சேர்ந்தார்; இதில் பாரிஸ் கம்யூனை ரத்தக் களறியில் மூழ்கடித்த கொலைபாதகன் ஜெனரல் காலிஃபேயிற்கு உதவினார். 1904இல் சோஷலிஸ்டுக் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட பின் இவர் பிரியான், விவியானியுடன் சேர்ந்து "சுயேச்சை சோஷலிஸ்டுகள்" என்னும் குழுவை ஏற்படுத்தினார். 1909—1910, 1912—1913, 1914—1915 ஆம் ஆண்டுகளில் பல்வேறு அமைச்சர் பதவிகளை வகித்தார். 1920—1924இல் பிரெஞ்சு ஜனாதிபதியாக இருந்தார்.—42, 72.

**முரானவ், மத்வேய் கான்ஸ்தன்தீனவிச்** *(1873—1959)*—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, போல்ஷிவிக், 4ஆவது அரசு டூமா உறுப்பினராயிருந்தார். ஏகாதிபத்திய யுத்தத்திற்கு எதிரான புரட்சிகர நடவடிக்கைகளுக்காக இவர் 1914 நவம்பரில் டூமாவின் மற்ற போல்ஷிவிக் உறுப்பினர்களுடன் சேர்ந்து கைது செய்யப்பட்டு சைபீரியாவிற்கு நாடுகடத்தப்பட்டார்.—101.

**மேரிங் [Mehring], ஃப்ரான்ஸ்** *(1846—1919)*—ஜெர்மன் தொழிலாளர் இயக்கத்தின் மாபெரும் தலைவர், ஜெர்

மன் சமூக-ஜனநாயகத்தின் இடதுசாரிப் பிரிவின் தலைவர்கள், சித்தாந்திகளில் ஒருவர். மேரிங் இரண்டாவது அகிலத்தின் வரம்புகளில் இருந்து கொண்டு சந்தர்ப்பவாதம், திருத்தல்வாதத்திற்கு எதிராகத் தீவிரமாகப் போராடினார், காவுத்ஸ்கிவாதத்தைக் கண்டித்தார், ஆனால் அதே சமயம் சந்தர்ப்பவாதிகளிடமிருந்து ஸ்தாபன ரீதியாகப் பிரிய அஞ்சிய ஜெர்மன் இடதுசாரிகளின் தவறுகளைப் பகிர்ந்து கொண்டார். சர்வதேசியவாதத்தைத் தொடர்ச்சிகரமாக ஆதரித்தார். புரட்சிகர ''ஸ்பர்ட்டாக்கஸ் சங்கத்தின்'' தலைவர்களில் ஒருவராயிருந்தார், ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியை ஸ்தாபிப்பதில் பங்கேற்றார்.—*23, 61, 69.*

**ராதெக், கார்ல் பெர்ன்கார்தவிச்** *(1885—1939)*—போலந்து, கலீஷியா, ஜெர்மனி ஆகியவற்றின் சமூக-ஜனநாயக இயக்கத்தில் பங்கேற்றார். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் சர்வதேசியவாதி. தேசிய இனங்களின் சுயநிர்ணய உரிமை பற்றிய பிரச்சினையில் தவறான நிலையை வகித்தார். *1917* முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். *1923* முதல் திரோத்ஸ்கி எதிர்த்தரப்பின் பெரும் ஆதரவாளர். கட்சி விரோத நடவடிக்கைக்காகக் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—*27.*

**ரிட்ஸ்லர்** [Riezler], **கூர்த்** *(ருதர்ஃபெர்) (1882—1955)*—ஜெர்மன் ராஜதந்திரி, தத்துவஞானி, கட்டுரையாளர்; ஜெர்மன் ஏகாதிபத்திய முதலாளி வர்க்கத்தின் மிதவாத முடியரசு பிரிவின் பிரதிநிதிகளில் ஒருவர். உலக அரசியல் பற்றிய பல நூல்கள், கட்டுரைகளை எழுதியுள்ளார்.—*80.*

**ரீக்கவ், அலெக்சேய் இவானவிச்** *(1881—1938)*—*1899* முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். கட்சியின் லெனினியக் கொள்கையைப் பன்முறை எதிர்த்தார். *1928*இல் அகில ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சியிலிருந்த வலதுசாரி சந்தர்ப்பவாதப் போக்கின் தலைவர்களில் ஒருவராயிருந்தார். கட்சி விரோத நடவடிக்கைக்காக *1937*இல் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—*122.*

**ருத்சுதாக், யான் எர்னேஸ்தவிச்** *(1887—1938)*—கம்யூனிஸ்டுக் கட்சி, சோவியத் அரசின் பிரபல தலைவர். *1905* முதல் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் தொழிற்சங்கத் தலைமையில் இருந்தார், பின் தேசிய பொருளாதாரத் தலைமைக் கவுன்சிலின் தலைமை குழு உறுப்பினராயிருந்தார்; *1920*

*முதல் ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷ்விக்) கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினர், தொழிற்சங்கங்களின் அகில ருஷ்ய மத்திய கவுன்சிலின் தலைமை குழு உறுப்பினர், பொதுச் செயலாளர்.—116, 120, 125-134.*

**ருதர்ஃபெர்**—*ரிட்ஸ்லர், கூர்த் பார்க்க.*

**ரொபெஸ்பியேர்** [Robespierre], **மக்சிமிலியான் மாரி இசிதோர்** *(1758—1794)—18ஆம் நூற்றாண்டின் இறுதியில் நடைபெற்ற பிரெஞ்சு முதலாளித்துவப் புரட்சியில் பங்கேற்றவர், ஜக்கோபியன்களின் தலைவர், 1793—1794இல் புரட்சிகர அரசாங்கத்தின் நடைமுறைத் தலைவர்.—42.*

**ரோப்ஷின்**—*சாவின்கவ், ப. வி. பார்க்க.*

**லசோவ்ஸ்கி (திரிட்ஸோ), சாலமன் அப்ராமவிச்** *(1878—1952)—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, போல்ஷிவிக். 1920இல் தொழிற்சங்கங்களின் மாஸ்கோ பிராந்தியக் கவுன்சில் தலைவர். 1921 முதல் 1937 வரை உலக தொழிற்சங்க பொதுச் செயலாளர்.—113, 122.*

**லஸ்ஸால்** [Lassale], **ஃபெர்டினாண்டு** *(1825—1864)—ஜெர்மன் சோஷலிஸ்டு, அகில ஜெர்மன் தொழிலாளர் சங்கத்தைத் தோற்றுவித்தார் (1863); ஜெர்மன் தொழிலாளர் இயக்கத்தில் சந்தர்ப்பவாதப் போக்கை ஆரம்பித்து வைத்தார்.—9, 59.*

**லாயிட் ஜார்ஜ்** [Lloyd George], **டேவிட்** *(1863—1945)—பிரிட்டிஷ் அரசுப் பிரமுகர், லிபரல் கட்சியின் தலைவர். 1916—1922இல் பிரிட்டிஷ் பிரதமர்.—36, 51.*

**லீப்க்னெஹ்ட்** [Liebknecht], **கார்ல்** *(1871—1919)—ஜெர்மன் மற்றும் சர்வதேச தொழிலாளர் இயக்கத்தின் பெரும் தலைவர். சந்தர்ப்பவாதம், இராணுவவெறிக்கு எதிராகத் தீவிரமாகப் போராடினார். உலக ஏகாதிபத்திய யுத்தத்தின் ஆரம்பத்திலிருந்து, ஆக்கிரமிப்பு யுத்தத்தில் ''தமது சொந்த'' அரசாங்கத்திற்கு ஆதரவு அளிப்பதை வன்மையாக கண்டித்தார், ரைஹ்ஸ்டாகில் இவர் மட்டும்தான் இராணுவ கடன்களுக்கு எதிராக வாக்களித்தார். ''ஸ்பர்ட்டாக்கஸ் சங்கம்'' என்ற புரட்சிகர அமைப்பை உருவாக்கியவர்களில் ஒருவர், இதன் தலைவர்களில் ஒருவராயும் இருந்தார்; ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர், 1919 ஜனவரியில் பெர்லின் தொழிலாளர்களின் எழுச்*

சிக்குத் தலைமை தாங்கியவர்களில் ஒருவர். எழுச்சி ஒடுக்கப்பட்ட பிறகு ஷெய்டமன் அரசாங்கத்தின் உத்திரவிற்கேற்ப கொல்லப்பட்டார்.—96.

லுக்சம்பர்க் [Luxemburg], ரோசா *(1871—1919)*—ஜெர்மன், போலந்து மற்றும் சர்வதேச தொழிலாளர் இயக்கத்தின் மாபெரும் தலைவர், இரண்டாவது அகிலத்தின் இடதுசாரிப் பிரிவின் தலைவர்களில் ஒருவர். போலந்து சமூக-ஜனநாயகக் கட்சியின் ஸ்தாபகர்கள், தலைவர்களில் ஒருவர்.

முதலாவது உலக யுத்தத்தின் ஆரம்பத்திலிருந்து சர்வதேசியவாத நிலையை வகித்தார் இப்பெண்மணி. ''ஸ்பார்ட்டாக்கஸ் சங்கம்'', ஜெர்மன் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர். *1919* ஜனவரியில் ஷெய்டமன் அரசாங்கத்தின் உத்திரவின்படி கொல்லப்பட்டார்.—*23, 61, 69.*

லூக்காஸ் [Lucas], சார்ல்ஸ் பிரெஸ்த்வுத் *(1853—1931)*—பிரிட்டிஷ் காலனி அதிகாரி, வரலாற்றறிஞர், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர். காலனியாதிக்க பிரிட்டிஷ் பேரரசின் வரலாறு பற்றிய நூல், கட்டுரைகளை எழுதினார்.—*80.*

லெனின், விளதீமிர் இலியீச் *(1870—1924)—122, 131, 133, 135, 161, 165.*

லென்ச் [Lensch], பாவுல் *(1873—1926)*—ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி. *1905—1913*இல் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் இடதுசாரிப் பிரிவின் பத்திரிகையான *Leipziger Volkszeitung*இன் (''லைப்சிக் மக்கள் பத்திரிகை'') பதிப்பாசிரியர். முதலாவது உலக யுத்தத்தின் ஆரம்பத்திலிருந்து சமூக-தேசியவெறியர்.——*30, 43, 73.*

லேகின்[ Legien], கார்ல் *(1861—1920)*—வலதுசாரி ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, ஜெர்மன் தொழிற்சங்கத் தலைவர்களில் ஒருவர், திருத்தல்வாதி. *1893* முதல் *1920* வரை (அவ்வப்போது இடைவெளிகளுடன்) ரைஹ்ஸ்டாகில் ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் பிரதிநிதி. முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர்.—*73, 88, 93, 94, 98, 102.*

வண்டர்வேல்டே [Vandervelde], எமீல் *(1866—1938)*—பெல்ஜிய தொழிலாளர் கட்சியின் தலைவர், இரண்டாவது அகிலத்தின் சர்வதேச சோஷலிஸ்டு காரியாலயத்தின் தலைவர், சந்தர்ப்பவாதி. முதலாவது உலக

*யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியராயிருந்தார், பூர்ஷ்வா அரசாங்கத்தில் சேர்ந்து பல்வேறு அமைச்சர் பதவிகளை வகித்தார்.—23, 86, 87, 102.*

வில்ஹெல்ம் இரண்டாவது (ஹோஹென்ஸோலர்ன்) *(1859—1941)—ஜெர்மானிய பேரரசன், பிரஷ்ய அரசன் (1888—1918).—39.*

வையான் [Vaillant], எட்வர்டு மாரி *(1840—1915)—பிரெஞ்சு சோஷலிஸ்டு, இரண்டாவது அகிலத்தின் தலைவர்களில் ஒருவர். 1905இல் பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சி சீர்திருத்தவாத பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியுடன் இணைந்த பின் இவர் முக்கியப் பிரச்சினைகளில் சந்தர்ப்பவாத நிலையை வகித்தார். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் சமூக-தேசியவெறியராயிருந்தார்.—69, 72, 73, 85.*

ஜிஃபென் [Giffen], ராபர்ட் *(1837—1910)—பிரிட்டிஷ் பொருளாதார நிபுணர், சிண்டிக்கல்வாதி, சாத்துவீகவாதி.—36.*

ஜொரேஸ் [Jaurès], ஜான் *(1859—1914)—பிரெஞ்சு மற்றும் சர்வதேச சோஷலிச இயக்கத்தின் பிரபல பிரமுகர், வரலாற்றறிஞர். பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் ஸ்தாபகர். பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சி பிரான்சின் சோஷலிஸ்டுக் கட்சியுடன் இணைந்த பின் (1905) இவர் ஒன்றிணைந்த பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் வலதுசாரிப் பிரிவிற்குத் தலைமை தாங்கினார். ஜனநாயகம், மக்கள் சுதந்திரம், சமாதானம் ஆகியவற்றிற்கு ஆதரவாகவும் ஏகாதிபத்திய ஒடுக்குமுறை, ஆக்கிரமிப்பு யுத்தங்களுக்கு எதிராகவும் போராடினார். சமாதானத்திற்கு ஆதரவாகவும் நெருங்கி வந்த யுத்த அபாயத்திற்கு எதிராகவும் ஜொரேஸ் நடத்திய போராட்டத்தின் காரணமாக ஏகாதிபத்திய முதலாளி வர்க்கத்தினர் இவரை வெறுத்தார்கள். முதலாவது உலக யுத்தம் துவங்கவிருந்த தருணத்தில் இவர் பிற்போக்கின் கைக்கூலியால் கொல்லப்பட்டார்.—72.*

ஷூல்ட்ஸெ [Schultze], எர்னஸ்ட் *(1874—1943)—ஜெர்மன் பொருளாதார நிபுணர், ஜெர்மன் ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர். உலகப் பொருளாதாரம், அரசியல் பற்றிய பல நூல்கள், கட்டுரைகளை எழுதினார்.—54, 55.*

ஷெய்டமன் [Scheidemann], ஃபிலிப் *(1865—1939)—ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் அதிவலது, சந்தர்ப்பவாதப்*

பிரிவின் தலைவர்களில் ஒருவர். *1911* முதல் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் நிர்வாகக் குழு உறுப்பினர். முதலாவது உலக யுத்த ஆண்டுகளில் சமூக-தேசிய வெறியர். *1919* பிப்ரவரி—ஜூனில் வேய்மர் குடியரசின் கூட்டணி அரசாங்கத்திற்குத் தலைமை தாங்கினார்; *1918—1921*இல் ஜெர்மன் தொழிலாளர் இயக்கத்தைக் கொடூரமாக ஒடுக்கி, கா. லீப்க்னெஹ்ட், ரோ. லுக்சம்புர்கை கொலை செய்ய ஏற்பாடு செய்ததில் இவருக்கும் பங்குண்டு.—*73, 88, 102, 104.*

ஷெலியாபவ், அந்திரேய் இவானவிச் *(1850—1881)*—மாபெரும் ருஷ்யப் புரட்சிவீரர், ''நரோத்னயா வோல்யா'' (''மக்கள் சித்தம்'') கட்சியின் ஸ்தாபகர், தலைவர். நரோத்னிக்குகள் மத்தியில் ஜாரிசத்திற்கு எதிரான அரசியல் போராட்டத்தின் அவசியத்தை முதன்முதலாக அங்கீகரித்தவர்களில் ஷெலியாபவ் ஒருவர். இவருடைய தலைமையின் கீழ் இரண்டாவது அலெக்சாந்தரைக் கொல்ல பன்முறை முயற்சி செய்யப்பட்டது. ஜார் மன்னனின் கொலையை ஏற்பாடு செய்ததற்காக *(1881 மார்ச் 1)* ஷெலியாபவ் தூக்கிலிடப்பட்டார்.—*42.*

ஷ்டிரேபெல் [Ströbel], ஹென்ரிஹ் *(1869—1945)*—ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, மையவாதி. முதலாவது உலக யுத்தத்தின் ஆரம்பத்தில் சமூக-தேசியவெறி, ஏகாதிபத்திய யுத்தம் ஆகியவற்றை எதிர்த்தார், ''அகிலம்'' எனும் இடதுசாரிக் குழுவை நெருங்கி வந்தார்; இக்குழுவில் காவுத்ஸ்கிவாதத்தை நோக்கிச் சாயும் ஊசலாட்டத்தை இவர் பிரதிபலித்தார்; *1916*இல் காவுத்ஸ்கிவாத நிலைக்கு முழுமையாக மாறினார். *1917*இல் சுயேச்சை ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியை ஏற்படுத்த முன்மொழிந்தார்.—*89.*

ஷ்டைன் [Stein], லோரென்ட்ஸ் *(1815—1890)*—ஜெர்மன் சட்ட நிபுணர், அரசு நிபுணர், வரலாற்றாசிரியர், கொச்சைப் பொருளியலாளர்.—*8.*

ஷ்லியாப்னிக்கவ், அலெக்சாந்தர் கவ்ரீலவிச் *(1885—1937)*—*1901* முதல் போல்ஷிவிக் கட்சி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பிறகு உழைப்புத் துறை மக்கள் கமிசார்; பின் தொழிற்சங்க, நிர்வாகப் பதவிகளை வகித்தார். *1920—1921*இல் ''தொழிலாளர் எதிர்ப்பு'' என்னும் கட்சி விரோத குழுவை அமைத்து இதன் தலைவராயிருந்தார். *1933*இல் கட்சியைத் தூய்மைப்படுத்தும் போது அகில ருஷ்ய

*கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.—167, 168.*

ஷ்வேக்லர் [Schwegler], அல்பெர்ட் *(1819—1857)—ஜெர்மன் இறையியல்வாதி, தத்துவஞானி, மொழியியல் வல்லுனர், வரலாற்றாசிரியர்.—12.*

ஸினோவியெவ் (ரதமீஸல்ஸ்கி), கிரிகோரி எவ்சேயெவிச் *(1883—1936)—1901 முதல் போல்ஷிவிக் கட்சியில் இருந்தார்.*

*அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்குப் பின் பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். கட்சியின் லெனினியக் கொள்கைக்கு எதிராகப் பன்முறை போர்க் கொடி உயர்த்தினார்: 1925இல் ''புதிய எதிர்ப்பை'' ஏற்பாடு செய்தவர்களில் ஒருவராயிருந்தார்; 1926இல் கட்சி விரோத திரோத்ஸ்கி-ஸினோவியெவ் கூட்டின் தலைவர்களில் ஒருவராயிருந்தார். 1927இல் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார்; இருமுறை மீண்டும் சேர்த்துக் கொள்ளப்பட்டு பின் கட்சி விரோத நடவடிக்கைக்காக வெளியேற்றப்பட்டார்.—118, 120-123, 128, 131, 133, 135, 143, 145, 149, 152, 155, 162.*

ஸூடேக்கும் [Südekum], அல்பெர்ட் *(1871—1944)—ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் சந்தர்ப்பவாதத் தலைவர்களில் ஒருவர், திருத்தல்வாதி. 1900 முதல் 1918 வரை ரைஹ்ஸ்டாக் உறுப்பினர். முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசியவெறியர். காலனியாதிக்கப் பிரச்சினையில் ஏகாதிபத்திய கண்ணோட்டங்களைப் பிரசாரம் செய்தார், தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகர இயக்கத்திற்கு எதிராகப் போராடினார்.—31, 63, 69, 87-89, 102, 104, 107.*

ஸூன் யாட்-ஸென் *(1866—1925)—மாபெரும் சீன புரட்சி வீரர், ஜனநாயகவாதி, 1911—1913இல் சீனாவில் நடந்த புரட்சிக்குத் தலைமை தாங்கினார், 1911—1912இல் சீன குடியரசின் தற்காலிக ஜனாதிபதியாக இருந்தார்.—149.*

ஸோஃப், விச்சஸ்லாவ் இவானவிச் *(1889—1940)—சோவியத் இராணுவ, அரசுப் பிரமுகர், 1913 முதல் கட்சி உறுப்பினர்; உள்நாட்டு யுத்தத்தில் பங்கேற்றவர். 1920 முதல் நீர்வழிப் போக்குவரத்தின் பிரதான அரசியல் நிர்வாகக் குழுவின் உறுப்பினர், பின் தலைவர்.—123.*

ஸ்தாலின் (ஜூகஷ்விலி), இயோசிஃப் விஸ்ஸாரியோனவிச் *(1879—1953)—1898 முதல் கட்சி உறுப்பினர். 1912*

*முதல் ருஷ்ய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் (போல்ஷிவிக்) கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினர். அக்டோபர் சோஷலிசப் புரட்சிக்கான தயாரிப்புகள் நடந்த போதும் புரட்சியின் போதும் கட்சி மத்தியக் கமிட்டியால் தோற்றுவிக்கப்பட்ட எழுச்சி தயாரிப்பு பற்றிய இராணுவ புரட்சி மையத்தில் உறுப்பினராயிருந்தார்.*

*1917 நவம்பர் முதல் 1923 ஜூலை வரை தேசிய இனங்கள் சம்பந்தமான மக்கள் கமிசார், 1919 மார்ச் முதல் அரசு கண்காணிப்பின், பின்னர் தொழிலாளர், விவசாயிகள் கண்காணிப்பின் மக்கள் கமிசார். ருஷ்ய கம்யூனிஸ்டு (போல்ஷிவிக்) கட்சி மத்தியக் கமிட்டியின் அரசியல் குழு உறுப்பினர். உள்நாட்டு யுத்தத்தின் போது குடியரசு புரட்சி இராணுவ கவுன்சில் மற்றும் பல போர்முனைகளின் புரட்சி இராணுவ கவுன்சில்களின் உறுப்பினர்.*

*1922இல் கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1941 முதல் மக்கள் கமிசார் கவுன்சிலின் தலைவர், பின் பிரதமர்.*

*கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளர் பதவியில் நீண்ட காலமிருந்த ஸ்தாலின் மற்ற கட்சித் தலைவர்களுடன் சேர்ந்து சோஷலிச நிர்மாணிப்பிற்காகத் தீவிரமாகப் பாடுபட்டார், கட்சி விரோதப் போக்குகளை, குறிப்பாக திரோத்ஸ்கிவாதத்தையும் வலதுசாரி சந்தர்ப்பவாதத்தையும் முறியடிப்பதில் பெரும் பங்காற்றினார்.*

*அதே சமயம் சோவியத் சமுதாயத்தின் வாழ்வில் காணப்பட்ட திரிபுகளுக்கும் இவர் காரணமாய் இருந்தார். இவை மார்க்சிய-லெனினியத்திற்கு அன்னியமான தனிநபர் வழிபாடுகளாகும் என்று கம்யூனிஸ்டுக் கட்சி மதிப்பிட்டது.—122.*

ஸ்துரூவே, பீட்டர் பெர்ன்கார்தவிச் *(1870—1944)—ருஷ்ய பொருளாதார நிபுணர், கட்டுரையாளர், காடேட்டுகள் கட்சியின் தலைவர்களில் ஒருவர். 90ஆம் ஆண்டுகளில் ''சட்டபூர்வமான மார்க்சியத்தின்'' பிரபல பிரதிநிதி; மார்க்சியத்தையும் தொழிலாளர் இயக்கத்தையும் முதலாளி வர்க்க நலன்களுக்கு நெருங்கி வரச் செய்ய முயலும் முகமாக கா. மார்க்சின் பொருளியல், தத்துவஞான போதனைகளை ''இட்டு நிரப்பினார்'', ''விமரிசித்தார்''.—27, 43-45, 106.*

ஸ்பினோஸா [Spinoza], பாருஹ் *(பெனிடிக்ட்) (1632—1677)—ஹாலந்து தத்துவஞானி, பொருள்முதல்வாதி, நாத்திகர்.—14.*

ஹார்ம்ஸ் [Harms], பெர்ன்ஹார்டு *(1876—1939)*—*ஜெர்மன் பொருளாதார நிபுணர், காட்டெடர் சோஷலிசத்தின் பிரதிநிதிகளில் ஒருவர், ஜெர்மன் ஏகாதிபத்தியத்தின் ஆதரவாளர். உலகப் பொருளாதாரம், அரசியல் பற்றிய பல நூல்கள், கட்டுரைகளை எழுதியுள்ளார்.* —**50**.

ஹாஸே [Haase], ஹூகோ *(1863—1919)*—*ஜெர்மன் சமூக-ஜனநாயகத்தின் தலைவர்களில் ஒருவர், மையவாதி. 1911இல் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் நிர்வாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1912 முதல் ரைஹ்ஸ்டாகில் சமூக-ஜனநாயகக் கட்சிப் பிரிவின் தலைவர். முதலாவது உலக யுத்தத்தின் போது மையவாதப் போக்கைப் பின்பற்றினார்.*—**87, 88, 107**.

ஹியூம் [Hume], டேவிட் *(1711—1775)*—*ஆங்கிலேய தத்துவஞானி, அகவய கருத்துமுதல்வாதி, அறியொணாவாதி, வரலாற்றறிஞர், பொருளாதார நிபுணர்.*—**14**.

ஹெகல் [Hegel], கியோர்க் வில்ஹெல்ம் பிரெடெரிக் *(1770—1831)*—*மூலச்சிறப்புள்ள ஜெர்மன் தத்துவஞானத்தின் மிகப் பெரும் பிரதிநிதி, புறவய கருத்துமுதல்வாதி. கருத்துமுதல்வாத அடிப்படையில் இயக்கவியல் வளர்ச்சி பற்றிய போதனையை ஆழமாக, பன்முக ரீதியில் உருவாக்கினார்.*

*கா. மார்க்சும் பி. எங்கெல்சும் ஹெகலின் கருத்துமுதல்வாத இயக்கவியலை விமரிசன ரீதியாக பகுப்பாய்வு செய்து பொருள்முதல்வாத இயக்கவியலைத் தோற்றுவித்தனர்; இது புறவய உலகம் மற்றும் மனித சிந்தனையின் வளர்ச்சியில் மிகப் பொதுவான விதிகளைப் பிரதிபலிக்கிறது.*—**5-7, 9, 12, 14, 35, 38, 148**.

ஹெண்டர்சன் [Henderson], ஆர்தர் *(1863—1935) பிரிட்டிஷ் அரசியல் பிரமுகர், லேபர் கட்சியின் வலதுசாரித் தலைவர்களில் ஒருவர், தொழிற்சங்க கவுன்சில் தலைவர்களில் ஒருவர், சமூக-தேசியவெறியர். 1915 முதல் 1931 வரை பிரிட்டிஷ் அரசாங்கத்தில் பன்முறை இடம் பெற்றார்.*—**102**.

ஹெரக்லீடஸ் *(எஃபேசை சேர்ந்த ஹெரக்லீடஸ்) (சுமாராக கி.மு. 530—470)*—*பண்டைய கிரேக்க தத்துவஞானி, பொருள்முதல்வாதி, இயக்கவியலின் ஆசான்களில் ஒருவர்.*—**9, 14**.

ஹேய்னெ [Heine], வோல்ஃப்கங் *(1861—1944)*—*ஜெர்மன் அரசியல் பிரமுகர், வலதுசாரி சமூக-ஜனநாயகவாதி. முதலாவது உலக யுத்தத்தின் போது சமூக-தேசிய வெறியர்.—73.*

ஹேனிஷ் [Haenisch], கோன்ராட் *(1876—1925)*—*ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, கட்டுரையாளர். முதலாவது உலக யுத்தத்தின் போது ஜெர்மன் சமூக-தேசியவெறியின் சித்தாந்திகளில் ஒருவர், 1915 அக்டோபர் முதல் Die Glocke (''மணி'') என்ற சமூக-தேசியவெறியர்களின் சஞ்சிகைக்குப் பதிப்பாசிரியராயிருந்தார்.—73*

ஹைண்ட்மன் [Hyndmann], ஹென்றி மாயர்ஸ் *(1842—1921)*—*பிரிட்டிஷ் சோஷலிஸ்டு, சீர்திருத்தவாதி. 1900—1910இல் சர்வதேச சோஷலிஸ்டுக் காரியாலயத்தின் உறுப்பினர். பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர். சோல்ஃபோர்டில் நடந்த கட்சி மாநாடு, ஏகாதிபத்திய யுத்தத்தின் பாலான இவருடைய சமூக-தேசியவெறி நிலைக்காக இவரைக் கண்டித்த பின் இவர் 1906இல் இக்கட்சியிலிருந்து விலகினார்.—20, 21, 23, 34, 69, 72, 73.*

ஹோக்லண்டு [Höglund], கார்ல் ஸெத் கான்ஸ்டன்தீன் *(1884—1956)*—*ஸ்வீடனில் சமூக-ஜனநாயக, இளைஞர் சோஷலிச இயக்கங்களின் இடதுசாரிப் பிரிவின் தலைவர். முதலாவது உலக யுத்தத்தின் போது சர்வதேசியவாதி, ஸிம்மர்வால்ட் இடதுசாரிப் பிரிவின் ஆதரவாளர்.—84.*

ஹோல்பாஹ் [Holbach], போல்-அன்ரி-தித்ரிஹ் *(1723—1789)*—*பிரெஞ்சு தத்துவஞானி, பொருள்முதல்வாதி, நாத்திகவாதி, 18ஆம் நூற்றாண்டின் புரட்சிகர பிரெஞ்சு முதலாளி வர்க்கத்தின் சித்தாந்திகளில் ஒருவர்.—14.*

**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை—600098*

**ஷோ-ரூம்**

*136, அண்ணாசாலை, சென்னை—600002*

**கிளைகள்**

*80, மேலக் கோபுர வீதி, மதுரை—625001*
*3—4, நேரு ஸ்டேடியம், கோயம்பத்தூர்—641018*
*42/7, சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி—620008*
*செர்ரி ரோடு, சேலம்—636001*

**விற்பனை நிலையங்கள்**

*3—22—75—D, மதுரை சாலை;*
*திருநெல்வேலி ஜங்ஷன்—627001*
*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*
*சேரிங் கிராஸ், உதகமண்டலம்—643001*
*நகராட்சி அலுவலகம் எதிரில், திண்டுக்கல்—624001*

# மார்க்ஸ் எங்கெல்ஸ் லெனின் நூல்கள்







மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனினின் படைப்புகளைப் படிப்பதன் மூலம் மட்டுமே இன்றைய உலகத்தையும் இதில் நடைபெறும் நிகழ்ச்சிப் போக்குகளையும் புரிந்து கொள்ள முடியும்.

இவர்களின் படைப்புகளை ‘‘முன்னேற்றப் பதிப்பகம்’’ 50க்கும் மேற்பட்ட உலக மொழிகளில் பிரசுரித்து வருகிறது.

இவை திரட்டு நூல்களாகவும் தேர்வு நூல்களாகவும் குறிப்பிட்ட தலைப்புகளிலான தொகுப்புகளாகவும் தனிப்பட்ட புத்தகங்களாகவும் வெளிவருகின்றன.

இவர்களின் முக்கியப் படைப்புகளைப் பற்றிய விசேஷ பிரசுரங்களும் வெளியிடப்படுகின்றன.

இந்தத் தொடர்வரிசையில் அடங்கியுள்ள தொகுதிகளிலும் முக்கியமான படைப்புகளிலும் மார்க்சிய-லெனினிய ஆசான்கள் இயற்கை, சமுதாயம், சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சி பற்றிய தம் போதனையை வெளியிட்டுள்ளனர், முதலாளித்துவத்தின் சமூக-பொருளாதார உறவுகளையும் சோஷலிசத்தின் அடிப்படை நியதிகளையும் ஆராய்கின்றனர்.

இந்நூல்களில் ஆராயப்பட்டுள்ள பிரச்சினைகள் நம் காலத்திற்கும் முக்கியமானவை.

எல்லா நூல்களுடனும் நவீன விஞ்ஞான தகவல் அனுபந்தம் இணைக்கப்பட்டுள்ளது.

மார்க்சிய-லெனினியத் தத்துவத்தைப் பயிலும் போது இத்தொடர்வரிசை நூல்கள் மூலநூல்களாகத் திகழத் தக்கவை.


முன்னேற்றப் பதிப்பகம்

ISBN 5-01-000566-1